கழக வெளியீடு - உஅ.

உ

திருச்சிற்றம்பலம்

# சைவசித்தாந்த உண்மைவரலாறு



சென்னை
சட்டகலாசாலைப் பேராசிரியர்
திருவாளர் கா. சுப்பிரமணிய பிள்ளை
எம். ஏ., எம். எல்., அட்வகேட்
அவர்கள் எழுதியது



திருநெல்வேலி, தென்னிந்திய
சைவசித்தாந்த நூற்பதிப்புக் கழகம் லிமிடெட்
திருநெல்வேலி & சென்னை
பிரபவளு வைகாசிமீ

# பதிப்புரை

சைவ சித்தாந்த உண்மை வரலாறு என்பது செந்தமிழ்ச் செல்வி என்னும் திங்கட்டாளின்கண் திருவாளர் கா. சுப்பிரமணிய பிள்ளை யவர்கள் எழுதிய 'சைவசித்தாந்த வரலாறே'யாம்.

இதன்கண் கடவுள், உயிர், உலகம் என்ற முப்பொருள்களின் இயல்பும் தொடர்பும் எனைத்தென்றும், சைவ நெறி பண்டைத் தமிழ் மக்கள் நெறியேயாமென்றும், சிவம் என்ற சொல் வடமொழிக் குரியது என்று கூறுவார் மயக்கக் கூற்றைத் தக்க சான்றுகள் கொண்டு மறுத்து அது தமிழ்ச் சொல்லேயாமென்றும், தமிழில் மந்திரங்கள் உளவென்றும் விளக்கப்பெற்றிருக்கின்றன. இது சாத்திர ஆராய்ச்சியாளர்க்கும், சரித்திர ஆராய்ச்சியாளர்க்கும் பெரிதும் பயன்படும். இதனை எழுதித் தமிழுலகிற்குப் பயன்படுத்திய இதன் ஆசிரியருக்கு நிரம்பவும் நன்றி செலுத்தக் கடமைப்பட்டிருக்கின்றோம்.

சைவசித்தாந்த நூற்பதிப்புக்
கழகத்தார்.

# சைவசித்தாந்த உண்மைவரலாறு

## (சிவநெறி வரலாறு)

சைவம் சித்தாந்தம் என்ற இருசொற்களின் பொருளை முதற்கண் ஆராய்ந்து கொண்டு பின் அவ் விரண்டினலு மாகிய தொடர்மொழிப் பொருளின் வரலாற்றை ஆராய்வாம். சைவம் என்றது சிவம் என்னுஞ் செந்தமிழ்ச் சொல்லடியாய்ப் பிறந்து சிவனோடு தொடர்புடைமை என்னும் பொருளில் வழங்குவது. சிவனைப் பற்றிய நிலையையும் சைவ நூல்களையும் சிவனடி சேர்தற்குரிய நெறியையும் அச்சொல் குறிக்கும். சித்தாந்தம் என்பது சித்த அந்தம் என்ற இரு சொற்களால் ஆகி முடிபின் முடிபு என்று பொருள் பெறும். சைவ நூல்களின் முடிந்த முடிபைக் கூறும் நூல்களைச் சைவ சித்தாந்த மென்ப. அச்சைவ சித்தாந்த நூல்கள் முழுமுதற் கடவுளாகிய சிவபெருமானை எளிதில் எய்துதற்குரிய நெறி ஈதெனக் காட்டுவன. அந்நெறியே கடவுளை நாடிச் செல்லும் நெறிகள் பலவற்றுள்ளும் தலை சிறந்ததாகலின் சேக்கிழார் சுவாமிகள் அதனை 'முதற் சைவ நெறி' யென்றார். அந் நெறியே முதல்வனோடு கலத்தலாகிய திருவை அளிக்க வல்லதாக

வின் திருமூலமாமுனிவர் அதனைத் 'திருநெறி' யென்றார். 'திருநெறிய தமிழ்' என்றதும் அது. திரு வென்பதும் சிவம் என்பதும் ஒத்த பொருளுடையன. உண்மைத் திருவுடையோன் சிவனென அறிஞர் இனிதுணர்வராகலின் திருநெறி யென்ற விடத்து முடிபுணர்த்தும் சொல் வேண்டிநின்றாயிற்று. இதனை அறியாத பல்வேறு மக்கட் குழாங்கள் வேழங் காண்பான் சென்ற விழியிலார் ஒப்பத் தத்தம் புல்லறிவுக்குத் தோன்றியவாறு திருவிலா நெறி பலவற்றைத் திருவுடையவாகக் கருதி மயங்குவர். அன்னோர்க்கு முடிபாயவழி இஃதே யென உணர்த்த நின்றது சித்தாந்த மென்னும் சொற்றொடர்.

மலைத்தலைமீதுள்ள மாண்பெரு மாடத்திற்குச் செல்லும் வழியானது மலைக்கு அருகிலுள்ள நிலத்திலும் படிப்படியாகக் கடந்து செல்லும் குன்றுகளிலும் உள்ள தங்கிடங்கட்கும் வழியாக அமைதல்போல, முழுமுதற் கடவுளை நாடிச் செல்லும் நெறியின் பகுதிகளாகப் பிற நெறிகள் அமையும். ஆதலால் உயிரில்லாத பூதங்களையும் உயிரையும் உயிர் வகைப்பட்ட சிறு தெய்வங்களையும் முடிந்த பொருள்களெனக் கொள்வாரது சிறு நெறிகளைப் பகுதியாகப் பெற்று அவற்றைக் கடந்து முதல்வனிடம் நேரே செல்வது நமது திருநெறியாதலின் அதனைப் பெருநெறி யென்றார் பெரியர். முகில்களைக் கடந்து ஓங்கிச் செல்லும் உயர் நெறியானது பகல் முழுவதும் இடையீடின்றிக் கதிரவன் ஒளி பெற்றுத் திகழ்வ தொப்பப் புறச்சமய வெல்லை கடந்து செல்லும் சிவநெறி திருவருளொளி பெற்று மிளிர்வதால் அதனை 'ஒளிநெறி' யென்

றும்'பணித்தனர் உயர்ந்தோர். "தாயுடன் சென்று பின் தந்தையைக் கூடி" என்பதற் கிணங்கச் சிவனது திருவருளாலே அவன் தாள் வணங்கிய அன்பர்க்குச் சிற்றறி வொழித்துப் பேரறிவு நல்கும் பெருமான் தாமே வலிந் தாட்கொள்ளும் பான்மைபற்றி நமது திருநெறியைக் குரு நெறி யென்றுங் கூறுவர் அறிஞர். இச் சிவநெறி யெய்தி னோர் ஒன்றியிருந்து சுட்டற நினைக்கும் ஒருமைச் சார் பினராதலின் அவர் நெறியை ஒருநெறி யென்றும் வழங்கு றுலகம்.

இவ்வொரு நெறியே அறிவு நூல்களில் முடிந்த முடி பாகக் கொள்ளுதற் குரியது என்பது அந்நெறிச் சென்ற பேரறிஞராகிய சைவ சித்தாந்திகள் தமது நுகர்ச்சியின் பயனைக் கூறும் அருட்பனுவல்களின் வைத்தும், அளவை நூல் முறைக்கேற்ப உலகம், உயிர், கடவுள் என்பவற்றின் இயல்புந் தொடர்பும், அவற்றை யுணர்ந்த உயிர் செல்லு நெறியும், எய்தும் பயனும் ஆகிய இவற்றைப் பல்லாற்று னும் வகுத்துத் தெள்ளிதின் அறிவுறுத்தும் சித்தாந்த அருள் நூல்களில் வைத்தும் யாம் உணரற் பாலம்.

நற்கலை கற்று யோகம் பயின்று பதமுத்தி எய்து தற்குரிய ஞான மெய்தித் தம்மையும் தலைவனையு முணர்ந் தோரே சைவ சித்தாந்த ராவார் என்பது.

'கற்பன கற்றுக் கலைமன்னு மெய்யோக
முற்பத ஞான முறைமுறை நாடியே
தொற்பத மேவித் துரிசற்று மேலான
தற்பரங் கண்டுளோர் சைவசித் தாந்தரே'

என்னும் திருமந்திரத்தால் அப்பெற்றித்தாய பெரியோர் நமது திருநெறித் தலைவர் என்பது அவர்களது அருளுரைகளால் இனிது விளங்கும்.

அதை, திருஞானசம்பந்த மூர்த்தி நாயனார்

'போதையார் பொற்கிண்ணத் தடிசில் பொல்லாதெனத்
தாதையார் முனிவுறத் தானெனை யாண்டவன்'

என்றும்,

'கழுமல முதுபதிக் கவுணிய னறியும்
அனைய தன்மையை யாதலின் நின்னை
நினைய வல்லவ ரில்லைநீள் நிலத்தே'

என்றும் பாடிய திருப்பாடல்களின் முதற் றிருப்பாட்டிலே தமக்கு முதல்வன் தையலோடு மெழுந்தருளி ஞானவாரமுத மீந்ததைத விதந்தோதும். இரண்டாவது திருப்பாட்டிலே முதல்வனைச் சுட்டிறந் தறியுமாற்றல் அவனது பொருட்காட்சி பெற்ற தம்மைப் போன்றார்க்கே யன்றி ஏனையோர்க் கெளிதல்ல வென்றுங் குறிப்பித்தமையாற் காண்க.

இவ்வாறே நமது சோற்கோவும்,

'ஒருத்தரா லறியவொண்ணாத் திருவுரு வுடையசோதி
திருத்தநான் காணவேண்டி நேர்பட வந்தவாறே'

'தேடிக் கண்டுகொண்டேன் றிருமாலொடு நான்முகனும்
தேடித் தேடொணாத் தேவனை யென்னுளே
தேடிக் கண்டு கொண்டேன்'

'தெள்ளத் தேறித் தெளிந்து தித்திப்பதோர்
உள்ளத் தேற லமுத வொளிவெளி
கள்ளத்தே கடியேன் கவலைக் கடல்
வெள்ளத் தேனுக் கெவ்வாறு விளைந்ததே'

என்னும் திருப்பாட்டுக்களிலே தமக்குப் பேரறிவு சுடர் கொளுத்தும் வண்ணம் இறைவன் எழுந்தருளிக் காட்சி யளித்ததையும், காண்டற்கரிய முதல்வனைத் தமது நுகர்ச்சியின்கட் பெற்றது தஞ்செயலற்றுத் தாமற்றவிடத் தென்பதையும், முதல்வன்பால் எய்தும் முடிவிலின்ப நுகர்ச்சி தமக்குக் கைவந்த திறத்தையும் தெள்ளிதின் விளக்கி யருளினமை காண்க.

நமது ஸ்ரீ சுந்தரமூர்த்தி சுவாமிகள்,

"நாயேன் பலநாளு நினைப்பின்றி மனத்துன்னைப்
பேயாய்த் திரிந்தெய்த்தேன் பெறலாகா வருள்பெற்றேன்
வேயார் பெண்ணைத் தென்பால்வெண்ணெய் நல்லூரருட்டுறை
ஆயாவுனக் காளாயினி யல்லேனென லாமே" [யுள்

என்றும்,

'ஏழிசையா யிசைப்பயனா யின்னமுதா யென்னுடைய
தோழனுமா யான்செய்யுந் துரிசுகளுக் குடனாகி
மாழையொண்கண் பரவையைத் தந்தாண்டானை மதியிலா
ஏழையேன் பிரிந்திருக்கே னென்னாரூ ரிறைவனையே'

என்றும்,

'இந்திரன் மால்பிரமன் னெழிலார்மிகு தேவரெல்லாம்
வந்தெதிர் கொள்ளவென்னை மத்தயானை யருள்புரிந்து'

என்றும் திருவாய்மலர்ந்தருளியவற்றில் முதல்வனுக்கு மீளாவடிமையாய்த் தாம் பெறலாகா வருள்பெற்ற திறத்

தையும் தம் பெருமை யறியாத அண்ணல், தம் அன்பராய தமக்கு எளிவந்தருளித் தோழனாய் வேண்டுவன உற்றுழி யுதவி யாட்கொண்ட வண்ணத்தையும், அரி யயன் முதலியோ ரேத்தும் பெருவாழ்வு தமக்கு முதல்வ னீந்தமையும் விளக்கி யருளினமை காண்க.

நமது மணிவாசகப் பெருந்தகையார்,

‘ தன்னே ரில்லோன் றானேயான தன்மை
என்னே ரனையோர் கேட்கவந் தியம்பி
அறை கூவி யாட்கொண் டருளி ’

என்றும்,

‘ புவனியிற் சேவடி தீண்டினன் காண்க
சிவனென யானுந் தேறினன் காண்க
அவனெனை யாட்கொண் டருளினன் காண்க ’

என்றும்,

‘ புத்தன் முதலாய புல்லறிவிற் பல்சமயந்
தத்த மதங்களிற் றட்டுளுப்புப் பட்டுநிற்கச்
சித்தஞ் சிவமாக்கிச் செய்தனவே தவமாக்கும்
அத்தன் கருணையினாற் றோணேக்க மாடாமோ ’

என்றும்,

‘ உலகேச் சமயங்க ளொவ்வாத சாத்திரமாம்
சலகேக் கடலுளனாய்க் கிடந்து தடுமாறும்
கலகேக் கெடுத்துக் கழலிணைகள் தந்தருளும்
செயலேப் பரவிநாம் தெள்ளேணங் கொட்டாமோ ’

என்னும் அருளிச் செய்த திருப்பாட்டுக்களானே முதல்வன் தமக்குத் தன் பேரியல்பு ஈதெனத் தம்மை வலிந்து ஆட்கொண்டு அறிவுறுத்தருளினமையும், முழுமுதற் கடவுள் தம்மை யாட்கொள்ளப் போந்தமையைத் தாம் தெளிந்தமையும், தமது சிற்றறிவு கொண்டு கலைஞானத்தான் முதல்வனை யுணரப் புக்கார் தட்டழிந் துழல்வரென்றமையும், திருவருணோக்கத்தாற் றமக்கு உண்மையறிவு தலைப்படத் தாம் பயன்பெற்றமையும் பசுமரத்தாணி போற் புலனாவது காண்க.

இனி, சித்தாந்த நூல் உரைக்கும் பொருளின் சுருக்கம் உணர்ந்து, அதன்பின் சித்தாந்த வரலாற்றினை யொருவாறு ஆராயப் புகுவாம். உலகத்திலுள்ள பொருள்களுள் உயிருள்ளன, அறிவுடையன. உயிரில்லன, அறிவில்லாதன. அறிவுள்ளது இயக்க அறிவில்லாதது இயங்கும். அறிவில்லாதது தானாகவே இயங்காது. உயிர் இயக்க உடம்பு இயங்கும். அது தானாகவே இயங்குதல் இல்லை. துயின்ற காலத்தும் உயிருண்மை பற்றியே உடம்பின் உட்கருவிகள் இயங்குவதும் அது பிரிந்தபோது அவை இயங்காமையும் தெள்ளிய. கண்டதின் வைத்துக் காணாததை யறியவேண்டும். உயிர்களை வேறு பிரித்தெண்ணுங்கால் இப்பெருஞாலமானது உயிரில் பொருட் பிண்டமாகக் காணப்படுதலின் அது தோன்றி நின்று மறையும் வண்ணம் தன்னை இயக்கும் ஓர் முதல்வனை யின்றியமையாதது. அற்றன்று, ஞாலம் தானே இயங்குமெனக் கொள்ளின் இழுக்கென்னை யெனின், அது பொருந்தாது. அங்ஙனமாயின், உயிரில் பொருளாய கல் முதலியன தாமே இயங்

கல் வேண்டும். அங்ஙனம் கண்டிலமாதலின் அக்கொள்கை நிலைபெறாது.

உலகின் பகுதிகளே ஞாயிறு, விண்மீன், நானிலம் முதலியவாகக் காணப்படும். அவைகள் ஒழுங்குபெறத் தம்முள் இயங்குதல் இயற்பொருள் நூலறிவால் விளங்கும். ஞாலப் பகுதிகள் தோன்றி நின்று மறையுமிடத்து ஞாலமுற்றுமே அவ்வாறும். ஞாலமோ அளப்பருந் தன்மையது. ஆதலால் அஃது அளவிலாற்றலுடைய ஓர் முழுமுதற் பெருமானை வேண்டி நிற்குமென்பது ஊகிக்கப் படும். உயிர் அறிவுளதாயினும் உடம்பில் பற்றுள்ளது. உடம்பு ஞாலத்தின் பகுதியாம். உடம்பின்பற்றுக் காரணமாகத் தோன்றி மறைதலாகிய பிறப்பிறப்பு உயிர்க்கும் அமையும். ஆதலால் உயிர் தன்வய மில்லாதது. ஞாலம் முதல்வனது ஆட்சிக்குட்பட்டு நடப்பது. இங்ஙனம் உயிர் உடம்பினிற் றுவக்குண்டு கிடப்பதொப்ப முதல்வனும் ஞாலத்திற் றுவக்குண்ணானோவென்னின்? உண்ணான். என்னை? அறிவற்ற உலகில் துவக்குண்டால் அவன் தன் பொருட்டு ஞாலத்தை வேண்டும். அவ்வாறு வேண்டின் முதல்வன் ஞாலத்திற்கு இழிந்தவனாவன். அவ்வாறாயின் அறிவில்லது அறிவுடையதின் மேலாம். ஆகவே, அறிவில்லதை முறைப்பட இயக்குதல் அறிவுடையதற்கு இயலாது. இதனால் ஞால முதல்வன் தன்வய முடையனென்பது புலனாம். இக்காரணம் பற்றியே முதல்வனுக்கு உலகத்தோடுள்ள தொடர்பு அவனது முற்றறிவிற்கு இழுக்காகாமை காண்க.

துவக்குண்ணாத முதல்வன் முற்றறிவுடையனெனவே துவக்குண்ணும் உயிர் சிற்றறிவுடையதென்பது தானே போதரும். தன்வயமுடைய தலைவன் ஞாலத்தை இயக்கு தல் தன்பொருட்டு அன்று என்பது தெளிவு. ஞாலத்தின் பொருட்டென்றலும் கூடாது. அறிவும் நுகர்ச்சியும் அதற் கின்மையின், அதனால் இறைவன் உலகைத் தொழிற் படுத்துவது உயிரின் பொருட்டென்பதே முடிகின் றது.

உலக உவர்ப்பு வந்த உயிர் முதல்வனைப் பற்றுவது எதனாலெனின் தானே தனித்து இயங்கும் ஆற்றல் அதற்கு இன்மையாலென்க. அஃதெவ்வாறுமெனின் தனித்தியங்கு மாயின் தானே அறியும் ஆற்றலுடையதாகவேண்டும். அங்ஙனம் இயற்கை அறிவுடையதாயின் உயிர் எஞ்ஞான் றும் உலகிற் கட்டுண்ண இடமில்லை. கட்டுண்மை தெளி வாதலால் உயிர் அறிவிக்க அறியும் இயல்பிற்று. ஆதலால் அறிவிக்கும் ஒரு முதல்வனை அஃது என்றும் வேண்டியே நிற்கும். கட்டுள்ள காலத்து உலகைப்பற்றி நின்ற உயிர்க் குக் கட்டொழிந்த காலை முதல்வனையின்றி வேறு தாரக மின்மையின் அவனை நாடிப் பற்றும் என்று முற்கூறப் பட்டது. முதல்வன் உயிரையாவது உலகையாவது தன் பொருட்டு வேண்டுபவனல்லன். உலகின் மூலமாகிய மாயையை முதல்வன் தொழிற் படுத்துவதற்குக் காரணம் உயிரின் மீது வைத்த பேரருளேயாம். ஆகவே உயிரை யும் உலகையும் இறைவனோடு தொடர்பு படுத்துவது அவனது திருவருளேயாகும். ஆதலால் முதல்வன் (படைப்பு முதலிய) ஐந்தொழில் நடத்துவதற்குத் திரு

வருளே காரணமாதலின் அத்திருவருளைத் தாயென வழங்குவர் பெரியோர். எல்லாந் திருவருளென்பது,

‘ உருவருள் குணங்களோடு முணர்வரு ளுருவிற் றோன்றும்
கருமமு மருளரன்றன் கரசர ணாதி சாங்கந்
தருமரு ளுபாங்கமெல்லாந் தானரு டனக்கொன் றின்றி
யருளுரு வுயிருக்கென்றே யாக்கின னசிந்த னன்றே ’

என்னுஞ் சித்தியாரா லுணரவிருக்கின்றது. அன்றி, முதல்வன் இயற்கை அறிவினனாதலாலும் உயிர் செயற்கையறிவுடையதாதலாலும் முதல்வன்கணின்று உயிர் தோன்றிய தென்று கொள்ள இடமில்லை. உலக மூலமாகிய மாயை அறிவில்லதாகலின் அதுவும் அறிவுடைய பொருளினின்று பிறப்பது அல்ல. ஆதலின் கடவுள், உயிர், உலகம் என்ற மூன்றும் வெவ்வேறே. முதல்வனது திருவருளொன்றுமே மூன்றையும் தொடர்புபடுத்துவதாம்.

இதுகாறும் கூறியதின் வைத்துச் சித்தாந்த உண்மையை விரித்து உணர்ந்து கொள்க. இனி அதன் வரலாற்றை ஆராய்வாம் :—

தமிழ் மொழியிலே சித்தாந்தக் கொள்கைகள் எப்போது எவ்வாறு எழுவதாயின வென்னும் வினாவுக்கு விடையே இவண் ஆராயத்தக்கது. மக்கள் யாவரும் முதலில் ஓரிடத்தில் தோன்றிப் பின் பல இடங்கட்குஞ்சென்று வாழ்ந்து, காலஞ் செல்லச் செல்ல இடம் முதலிய பல காரணங்களால் தம்முள் வேற்றுமைப்பட்டுப் பல்வேறு வகையினர் ஆயினர் என்று யாக்கைநூல் வல்லார் கூறுவர். அங்ஙனம் உலகெங்கும் பரவுதற்கு முன்னர் அவர்க்

குள மொழி தோன்றியதெனில் தோன்றிய அம்மொழியி னின்றே உலகின்கண் உள்ள பல மொழிகளும் எழுந்தன வெனக் கருத இடமுண்டு.

அவ்வாறன்றி மக்கட் கூட்டத்தினர் வெவ்வேறு நாடு களில் தங்கியபின் வெவ்வேறு மொழிகள் எழுந்தன வென்பர் சிலர். எவ்வாறாயினும் மக்கள் வெவ்வேறு நாடுகளில் தங்கித் தமது பொது வாழ்க்கையைச் செவ்வைப் படுத்திக்கொண்ட பின்னர்த்தான் அவர்க் குள் வழங்கும் மொழிகளிலே தத்துவ உணர்ச்சியைக் குறிக்கும் சொற்கள் எழுந்து நிலைபெற்றன என்பது இயல்பே.

இப்படைப்பின் தொடக்கத்திலேயே முற்படைப் பில் அறிவும் தவமும் முதிர்ந்த பெரியோர் தோன்றி மொழியையும் நூலையும் தோற்றுவித்து வளர்த்தனரெனி னும், அவர்கள் தத்துவ உணர்ச்சியைக் குறிக்க வழங்கும் சொற்கள், தம்பொருளை யறிந்துபோற்றும் ஆற்றல் இல் லாத மக்கள் நடுவே நிலைத்தல் அரிது. ஆதலின் அத் தகைய சொற்கள் எழுந்து நிலவா நிற்கும் மக்கட் கூட் டத்தாருட் சிலராதல் தத்துவ உணர்ச்சி யுடையராவர் என்று கோடற்கு யாதும் இழுக்கில்லை. சொற்கள் எழுந்த பின்னே நூல்கள் எழுதுவது இயல்பு. நூல்கள் அழிந்து போயினும் மொழி உள்ளளவும் சொற்கள் நிலவாதல் இருந்தே தீர்வனவாம். ஆதலால் நூல்கள் முதலிய சரித் திர ஆராய்ச்சிக் கருவிகள் ஒழிந்துபோயினும் சொல் லாராய்ச்சி பெரிதும் பயன்படவல்லதே. இது நிற்க.

சைவசித்தாந்தம் வேதாகம சாரமாதலாலும் வேதாகமங்கள் வடமொழியிலிருப்பதாலும் ஆரியத்தினின்றே தமிழிற்குச் சைவக் கொள்கைகள் வந்தனவென்பர் ஒரு வகையார். இக்கொள்கை யுடையாருட் சிலர் ஆரியமும் தமிழும் தமிழராது மொழிகளே யென்பர். ஆரியத்தின் சிதைவாகத் தமிழ் இருந்தாலன்றி ஆரியரும் தமிழரும் ஒரு வகையினரென்று கொள்வதற்கிடமில்லை. தத்துவ உணர்ச்சி ஒரு வகையாரிடம் முதற்கண் உண்டாய்ப் பிறிதொரு வகையார்க்குப் பின் பயன்பட்டிருக்கலாம். அல்லது இருவகையாரும் தாம் தாம் ஒரு சிறிது தத்துவ உணர்ச்சி முன்னெய்திப் பின் கலந்து அதனை விரிவு செய்திருத்தலும் கூடும். ஆரியத்தினின்றே தமிழராது ஒழுக்கம் ஞானம் முதலியன எழுந்தனவென்று கூறுதல் எத்துணைப் பொருத்தமுடைய தென்பதைப் பின்வரும் ஆராய்ச்சியின் வைத்துக் காண்க.

உரை, கருதல், காண்டல் என்னும் மூன்று அளவைகளுள் முதல் நின்றதைக் கடைப்பிடித்து ஆராயுமிடத்து அறிஞர் ஆரியத்தையுந் தமிழையும் ஒரு பெற்றியினவாகக் கருதுவது புலனும்.

'தமிழ்ச்சொல் வடசொல் லெனுமிவ் விரண்டும்
உணர்த்து மவனை யுணரலு மாமே'

'ஆரியமும் தமிழும் உட னல்கி
காரிகை யார்க்குங் கருணை செய்தானே'

என்ற திருமூலர் திருவாக்கினை இடைச் செருகல் என்று கூறுவாருமுளர். தத்தமது கருத்துக்கு இசையாதன

வற்றை அவ்வாறு கூறுவது ஒரு கொள்கை பற்றினார்க்கு இயல்பாதலினாலும் இடைச்செருகுவதும் ஒரு தீய வழக்க மாக நின்று நிலவுதலாலும் பிற இரண்டு அளவைகட்கும் ஒத்துவரும் உரையே கொள்ளற்பாற்றென்பது முடியும். இரண்டாவது மேற்கோளுள் உடன் என்றதனால் ஆரியத்தி னின்றே ஞானநூற் கொள்கைகள் தமிழிற்கு வந்தன வென்று கோடல் பொருத்த மில்லாததே. இம்மேற் கோளைப் புகுத்தலென்பார் 'தமிழ்ச்சொலும் வடசொலும் தாணிழற் சேர', 'தமிழினீர்மை பேசித் தாளம் வீணை பண்ணினல்ல முழவமொந்தை மல்குபாடல் செய்கையிட மேவரர்' முதலியவாகத் திருஞான சம்பந்த மூர்த்தி நாய னார் தேவாரத்துள்ளும், பிற திருமுறைகளிலும் காணும் பல மேற்கோள்களையும் புகுத்த லென்பாரோ யாம் அறி யேம்.

இனிச் செந்தமிழ் நிலத்து வழக்கினை நன்குஉணர்ந்து இயல் நூல் செய்த ஆசிரியர் தொல்காப்பியனார் தமிழ் நாட்டு மக்கள் வகையினை வாகைத்திணையுட் சுட்டுவான் ஓதிய "அறுவகைப்பட்ட பார்ப்பனப் பக்கமும்" என்ற முதற் குறிப்புச் சூத்திரத்துள் மூன்று காலமும் உணர வல்ல ஞானம் பெற்ற அறிவர் என்பாரும் அவர் சொல் வழி நின்றொழுகும் எண்வகைத் தாபதப் பக்கத்தாரும் தமிழ் நாட்டிற் குரியாரெனக் குறித்த இடத்தும் அறி வராகிய நிறைமொழிமாந்தர் பண்டைத் தமிழிற் போந்த எழுவகை இலக்கியங்களுட் சிறந்த மறைகள் இயற்றினா ரெனக் குறித்த விடத்தும் அவர் ஆரியரெனவும் அவர் இயற்றியன வடநூற் சார்பாயவெனவும் கூறுமை காண்க.

அங்ஙனங் கொள்வோர் தமிழ் நிலத்து வழக்குக் கூறும் இயல்நூலின் இயல்பு அறியாதவராவர். மேற்சுட்டிய தொல்காப்பியச் சூத்திரங்களாலே யாம் உணர்ந்து கொள்வது யாதெனின் தமிழ்நாட்டிலே இறைவனது திருவருள் பெற்றுத் தமிழ் மக்கட்கு ஒளி நெறி காட்டவல்ல பெரியோர் தமிழ்ப் பெருமக்களாய் விளங்கினரெனவும் அவர்வழி நின்றொழுகுவார் எண்வகைப்பட்டனரெனவும் அவர்கள் தாம் கண்ட அரிய நூற்பொருளையும் கடவுளருள்பெறு முறையையும் உணர்விக்கக் கருதி இயற்றியருளிய நூல்கள் மறை யெனப்படுமென்பதும் ஆம்.

வடநாட்டு ஆரிய முனிவரைத் தொல்காப்பியனார் ஐயரென்று ஓரிடத்திற் கூறியுள்ளார். அதை,

'பொய்யும் வழுவும் புகுந்த பின்னர்
ஐயர் யாத்தனர் கரண மென்ப'

என்ற இடத்துக் காண்க. ஐயரென்பது ஆரியரென்பதன் சிதைவாம். ஐயர் என்பதற்கு ஆசிரியர் நச்சினார்க்கினியர் இருடிக ளென்றது காண்க. தமிழ் நாட்டு அறிவர் இருடிகளென விசேடிக்கப்படுவதில்லை. அறிவர் அருளிய நூலை ஆசிரியர் நச்சினார்க்கினியர் காலத்தும் ஆகமம் என்ற பெயரால் குறிப்பது வழக்கம் என்று தெரிகிறது.

'ஆகம மென்ப தறிவ னூலாற்
போக புவன முண்டெனப் புலங்கொளல்'

என்ற மணிமேகலை அடிகள் உற்று நோக்கத்தக்கன. காஞ்சித்திணையுள் உலக நிலையாமை கண்டு துறவு புக்கோர் தம்

மனைவியரைத் தமது பணிவிடைக் குரியவராகக் கொண்டு வாழ்ந்தமை குறிக்கப்பட்டது. அந்தண ரென்பார்க்குரிய இலக்கணம் யாதென்று கூற வெழுந்த மரபியற் சூத்திரம் திருவள்ளுவர் குறித்ததுபோல அவரது பண்பினை உரையாமல் அவரது அடையாளங்களைக் கூறியது வியக்கத்தக்கதே.

'நூலே கரகம் முக்கோல் மனையே
ஆயுங்காலை அந்தணர்க் குரிய'

என்றவிடத்து நூலென்பது ஏட்டைக் குறிப்பதோ பூணூலைக் குறிப்பதோவென்னும் ஐயமெழற் பாலதே. அந்தணர் என்ற சொல்லும் தனித்தமிழ்ச் சொல்லாக விருப்பதால் அது பிற நாட்டினரைக் குறிக்க எழுந்த தென்று கூற இடமில்லை. கமண்டலம், திரிதண்டம், ஆசனம் என்னும் மூன்றையும் துறவியர்க்கு உரியனவாக நூல்கள் கோடலினாலும் துறவியர்க்குப் பூணூலின்மையாலும் நூலென்பது ஏட்டைக் குறிப்பதேயாமென்க.

அவ்வாறு கொள்ளுமிடத்து அந்தணர் ஒரு வகைத் துறவியராவர். இது பற்றியே அந்தணரது இலக்கணத்தைத் திருவள்ளுவர் 'நீத்தார் பெருமை' என்னும் அதிகாரத்து விதந்து ஓதினர். தமிழிலே அறம் பொருள் இன்பம் வீடு என்னும் நான்கினையும் இனிதுணர்த்தும் நான்மறைகள் இருந்தன என்பதைத் திருநான்மறை விளக்கத்திற் கண்டுகொள்க. உறுதிப் பொருள் நான்கினையும் உணர்த்தவல்ல நான்மறைகள் ஆதியில் தமிழில் இருந்தன வென்றும் அவைபோன்ற மறைகள் நிறைமொழி மாந்தராலே தமிழில் இயற்றப் பட்டனவென்றும், தமிழ் நன்மக்கட்கு

உண்மை யறிவுச்சுடர் கொளுத்தும் அறிவர் தமிழ் நாட்டின ரென்றும் யூகிக்கப்படும். கூறிய அந்நான் மறையும் முழு முதற் கடவுள் ஆலநிழற்கீழ் அறம் பகரக்கேட்ட நால்வர் வாயிலாக எழுந்தன எனத் தேவாரம் முழங்குதலானும் சைவ சித்தாந்த உண்மையறிவு தமிழ் நாட்டினர்க்குத் தமிழ்ப் பெரியோராலே பண்டைக் காலத்துக் கிடைக்கப் பட்டுள்ள தென்பது யூகிக்கப்படும்.

இக் கொள்கையானது நன்று நிலவுதற்கு இடையூறாக உள்ளன தமிழ்ப் பண்டை மறைகள் மறைந்தமையும் அள வற்ற செந்தமிழ் நூல்கள், தமிழ்மக்களது மடியினாலும் பழ வினையினாலும் இறந் தொழிந்தமையும், தமிழ் நூற்பொ ருள் விளக்கும் வடமொழி நூல்கள் பாதுகாக்கப் பெற்று நாடெங்கும் பரந்தமையும், வட நூலாளர் தம் நூல் மீது வைத்த பற்றும் தமிழரது நூற்பற்றின்மையும், அப்பற் றின்மையை நிலைபெறச் செய்யு மூலம் தமது உயர்வை நிலைநிறுத்தக் கருதும் ஆரியர் முயற்சியால் தமிழரது வடநூ லபிமானமும் வடசொற் பெருவழக்கமும் யாண் டும் தழைத்தமையும், இனைய பிறவும் ஆம் என்பதற்கு ஐயமில்லை.

ஆயினும் தமிழ் நெடுங்கணக்கின் அமைப்பையும் தமிழ் எழுத்தியல் நூல் நுட்பத்தையும் நுணுகி ஆராய் வோர் பேச்சொலிக் குழாத்துக்கு மூலமாகிய தனி ஒலி களும் துணை ஒலிகளும் ஒலி நூல் முறைப்படி தமிழில் அமைந்து நிற்குமுறை எம்மொழி யுள்ளும் கிடையாது எனவும் எம்மொழியையும் எவ்வொலியையும் திட்பமாக வரைதற்கு உரிய எழுத்துக்கள் தமிழிலே உள்ளனவென்

றும் உணர்தல் கூடும். இங்ஙனம் கண்ட பேரறிவாளராகிய திரு. P. V. மாணிக்க நாயக்கர் அவர்கள் தமிழ் இயல் நூலினை அதன் சொல்வரலாற்றினைக்கொண்டு பொருள் கொள்ளுமிடத்து அஃது ஒரு சைவ சித்தாந்த நன்னூலாக விளங்குகின்றது என்று கூறுகிறார்கள். நெடுங் கணக்கை யும் இயல் நூலையும் வகுத்த தமிழ்ப் பேரறிஞர் அவ்வியல் நூலிற் கூறியவாறே முக்காலமும் அறியும் ஆற்றலுடைய ராகலின் தமிழ் நூல்கள் தமக்குப்பின் அழிந்தொழிவனவா மென்பதை முன்னோக்கி மொழியுள்ளளவும் உண்மை நூற் கருத்து நிலைபெறுமாறு அதனை எழுத்தினும் சொல்லினும் இயல்நூல் அமைப்பினும் பாதுகாத்து வைத்தனர்போ லும். தமிழ் மக்கள் பண்டுதொட்டே தத்துவ வுணர்ச்சியில் தலைசிறந்தவரென்பதைப் பின்வரும் தமிழ்ச் சொல்லா ராய்ச்சியால் ஒரு சிறிது விளக்குவாம்.

அந்தணர் என்ற சொல்லைப்போலவே பார்ப்பார் என்ற சொல்லும் தமிழே. பார்ப்பார் என்றமையாலே அஃது ஆரியப் பிராமணரைக் குறிப்பதெனத் துணிவது தற்காலத்திற்குப் பொருந்துமாயினும் பண்டை நூலா ராய்ச்சிக்குப் பொருந்துமாறில்லை. ஆதலால் தமிழ்ப் பார்ப்பார்க்கு உரிய தொழில் ஆரியப் பிராமணர்க்கு உரிய வேள்வி முதலியனவே என்று கொள்ளுதலும் தவறே. நுணுகி ஆராயுமிடத்து அன்பு மிக்க வழிபாட்டினால் கட வுட் காட்சி பெறவல்ல தமிழ் மக்களே பார்ப்பார் எனப் பெற்றன ரென்பது விளங்கும். கடவுளை ஒரு வடிவத்திலே வழிபாடு செய்வதற்கு முதல் நின்றுதவுவாராகிய இற்றைக் காலத்தில் ஆதிசைவர் எனப்படுவோரே பண்டைப் பார்ப்

பார் என்று யூகிப்பதற்கு இடமுண்டு. முப்பொழுதுந் திருமேனி தீண்டுவாரும் அவரே. ஆதிசைவ ஆசாரியரை சுமார்த்தராய்ப் பிறந்து சைவம் புகுந்து ஆசாரியாபிடேகம் பெற்றவரினின்றும் பிரித்து வேறாகக் கருதும் வழக்கமும் கொள்கையும் இருவரும் ஒரே மக்கட் பகுப்பைச் சார்ந்தாரல்லரென்பதை நன்கு வற்புறுத்தும். என்னை?

இந்தியாவிலுள்ள இந்து மக்கள் அனைவரும் நான்கு வருணப் பகுப்புடைய ஒரே மக்கட் கூட்டத்தினர் ஆவரெனின் அவருள் ஒரே சமயத்தவராய் ஒரே மரபினராய் உள்ள இருவர்க்குள் வேற்றுமை காண்பதற்குக் காரணம் வேறொன்றும் தோன்றவில்லை. ஆதிசைவரும் மகா சைவரும் ஒரே கொள்கை யுடையராய் ஒரே முறையாக ஆசாரியாபிடேகம் பெற்றவராய் இருப்பினும் அவருள் ஆதிசைவரை வேறு பிரிவினராகவும் மகா சைவரைப் பிறிதொரு பிரிவினராகவும் கருதக் காரணமில்லை. ஒரே மிஷனைச் சார்ந்த புராட்டஸ்டண்டு கிறித்தவப் பாதிரிமாருள் ஐரோப்பியர், இந்தியர் என்ற பிரிவொன்று தவிர வேறு யாதுமில்லை. இவ்வாறே எச்சமயத்தும் கொள்ளப்படும். சமய வேற்றுமையும் வருண வேற்றுமையும் இல்லாத விடத்து ஐரோப்பியர் இந்தியர் என்றது போன்ற மக்கட் பகுப்பு வேற்றுமை யொன்றுமே யாண்டும் காணப்படும். ஆதலின் ஆதிசைவரும் மகாசைவரும் தமது பிறப்பினாலே வெவ்வேறு மக்கட் கூட்டத்திற்கு உரியாரென்பது நன்கு யூகிக்கப்படும். இவ்வேற்றுமை பற்றியே மகா சைவரது வருணத்தாராகிய சுமார்த்தர் ஆதி சைவரை இகழ்வதும் அன்னோர் மகா சைவராகியபோதும் திருக்

கோயிலிற் பரார்த்த பூசைக்கு அருகரல்லர் என்று ஆகமம் விதித்ததும் என்க. இதுபற்றியே திருமூலமா முனிவரும்,

"பேர்கொண்ட பார்ப்பான் பிரான்றன்னை யர்ச்சிக்கில்
போர்கொண்ட வேந்தர்க்குப் பொல்லா வியாதியாம்
பார்கொண்ட நாட்டிற்குப் பஞ்சமு மாமென்றே
சீர்கொண்ட நந்தி தெரிந்துரைத் தானே"

என்று அருளிச் செய்ததும் காண்க. இத்திருப் பாட்டினுள் பேர்கொண்ட பார்ப்பான் என்றது சுமார்த்தனையாவது மகா சைவனையாவது குறிக்கு மென்பதில் தடையில்லை. இன்னோர் பார்ப்பார் என்னும் பேரைக் கொண்டனர் என்பது குறிக்கப்பட்டது. அஃதாவது ஆதி சைவரின் பேராகிய பார்ப்பார் என்றதைத் தாமும் அவர் போல நடித்து ஊதியம் பெறுதற் பொருட்டுத் தமக்குப் பெயராக வழங்கினவர் ஆரியப் பிராமணர் என்று கருத வேண்டியதா யிருக்கிறது. இவ்வாறே அந்தண ரென்ற சொல்லையும் அவர்கள் தம் பெயராய்க் கொண்டனர் போலும். அவ்வாறு கொள்ளுதல் பொருத்த மன்றெனக் குறிப்பா லுணர்த்துவான் அந்தணர் இலக்கணத்தைத் திருவள்ளுவர் விதந்தோதினர் போலும். ஆகவே ஆதி சைவரே தமிழ் நிலத்தில் முதன் முதல் பார்ப்பா ரெனப் பட்டார் என்பது விளங்கும். விளங்கவே, சைவசித்தாந்த நெறியை அறிவுறுத்தும் ஆசிரிய வகையில் சிறந்தோர் தமிழரென்பது முடியும். இதனாலும் இப்போது சைவ சித்தாந்த மெனப்படும் திருநெறியானது பண்டைத் தமிழரது கடவுள் நெறியெனக் கருதப் பெறுமென்க.

ஞான முதல்வனைச் சுட்டும் பழந்தமிழ்ச் சொற்கள் கடவுள், இயவுள், கந்தழி யென்பன. 'கடவுள்' என்பதன் நேர்பொருள் 'கடந்துள்ள பொருள்' என்பது. எதனைக் கடந்தவனென உலக முதல்வனைக் கூறுதல் இயல் பெனின், காணப்படும் உலகத்தை என்பது. அறிவு முதிர முதிரக் கடவுள் உள்ளத்தைக் கடந்துள்ளவன் என்பது விளங்கும். விளங்கவே சொற் கடந்தவன் அவனெனச் சொல்ல வேண்டியதில்லை. இச்சொல்,

"நினைப்பதாகச் சிந்தைசெல்லு மெல்லையேய வாக்கினாற்
றினைத்துணையு மாவதில்லை சொல்லலாவ கேட்பவே
அனைத்துலகும் ஆயநின்னை ஐம்புலன்கள் காண்கிலா
எனைத்தெனைத்த தெப்புறத்த தெந்தைபாத மெய்தவே"

"அப்பாலைக் கப்பாலானை ஆரூரிற் கண்டடியேன்
அயர்த்தவாறே"

"எப்பாலவர்க்கும் அப்பாலாம் என் ஆரமுதேயோ"

என்னும் திருவாக்குக்களை நினைவுறுத்துகிறது. 'காண்டற்கரிய கடவுள் கண்டாய்' என்று உடம்பொடு புணர்த்துக் கூறிய வண்ணம் காணப்படும் யாவும் அழிதலின் அங்ஙனம் அழியும் பொருள்களுள் ஒன்றல்லாத முதல்வன் காணப்படாதவனாய், காணும் இவ்வுலகைக் கடந்து நிற்பவன் என்னும் பொருளையுடைய பெயரை ஞால முதல்வனுக்கு இட்டு வழங்கும் மக்கள் வகுப்பினர் படைப்புப் பொருளைக் கடவுளரெனக் கருதாத நிலையினரே யென்பது தெள்ளிது. கடவுள் என்ற சொல் தமிழில் மிக்க பழமையானது. அவ்வாறே இயவுள் என்ற

சொல்லும் ஆம். எல்லாவற்றையும் முதல்வன் இயக்கு கின்றான் என்னுங் கருத்தில்லாதவர் அவனை இயவுள் என்னக் காரணமில்லை. 'கந்தழி' என்ற சொல் பற்றி லான் சுட்டிறந்தவன் என்னும் பொருளையுடையது. கந்து என்பது முதலில் தறி, யென்பதை யுணர்த்திப் பின்பற்றும் ஓர் பொருளைக் குறிப்பதாய்ப் பின் பற்றுக்கோடாக உள்ள எதையும் உருவகிக்கப் பயன்பட்டது. "பழமை கந்தாக" என்ற விடத்து அப்பொருள் காண்க. கடவுளை வணங் கும் நிலையத்திற்கும் அப்பெயர் வருவதை 'கந்துடை நிலையினும்,' 'கலிகெழு கந்தங் கடவுள் கைவிட' என்ற விடங்களிலும் காண்க. கடவுள் பற்றி நின்று அருள் செய் தற்கும் கடவுளை நினைவூட்டுவோர் சுட்டுதற்கும் நிலையமாக நின்ற கந்தினுக்கு வேறாய்ச் சுட்டற்றவன் என்ற பொருள் கந்தழி யென்ற சொல்லிற்கு உள்ளதாம். எல்லாவற்றை யும் இயக்கும் முதல்வன் பற்றிலான் எனவே அவன் தன்வய முடையவனென்பதும், எல்லாவற்றையும் இயக்கு வது தன் பொருட்டன்று என்பதும், சுட்டிறந்தவன் எனவே தோற்றக் கேடுகளில்லாதவனாய் முற்றறிவுடையன் என்பதும், இயவுள் என்றமையினாலே அவன் இயற்கை யறிவை யுடையவனென்பதும், கடவுள் எனவே உலகைக் கடந்துளனாதலின் இயல்பாகவே பாசங்களினின்றும் நீங்கினவ னென்பதும், உயிரறிவுக்கு அப்பாற்பட்டவ னெனவே பொருள் தன்மையால் உயிரின் வேறாயனென்ப தும் இனிது விளங்கும். யாதொரு வடிவில் அவனை வணங்கினாலும் அன்பர்க்குத் தோன்றி அருள் புரிவா னென்பது ஓர் சிறந்த கொள்கை. கந்துடை நிலையில் கட

வுளைத் தமிழர் வழிபட்டமையானும் "முரணினர் உட்க முருகெழுவியனகர்" என்னு மிடத்துக் கடவுள் குறிஞ்சி நிலத்தார்க்குத் தோன்றுவது கூறப்பட்டமையானும், அது தமிழ் மக்களுள் பரவியிருந்தது என்பது இனிது போதரும்.

உயிர், உடம்பு என்ற சொற்கள் உருவகப் பொருளில் இலக்கணத்துள்ளும் வழங்குவதனால் தமிழ் நாட்டினர் யாவர்க்கும் உயிர் உடம்பு என்பதன் வேறுபாடு தொன்று தொட்டே நன்கு தெரிந்த தொன்று என்பது சொல்லாமலே அமையும். 'உடல்மேல் உயிர்வந் தொன்றுவது இயல்பே' என்ற ஆசிரியப்பா, உயிர் உடம்பின் பற்றுடைய தென்ற கருத்தை நயம்படக் குறித்தது காண்க.

'சிவம்' என்ற சொல் செம்மை யடியாகப் பிறந்தது. செம்மை என்பது நன்மை, நேர்மை, சிறப்பு, மங்கலம், சுகம் என்கின்ற பண்பினையும் செந்நிறம் என்ற நிறத்தை யுங் குறிக்கும் ஒரு சொல். செந்நிறம் என்ற பொருளில் அச் சொல் வழங்குமிடத்து அதினின்று 'சிவ' என்ற சொல் எழுந்து வழங்குதல் கண்களிரண்டுஞ் சிவந்தன வென்பதில் அது சிவந்தன வென்பதன் பகுதியாக அமைத லால் விளங்கும். கடவுளை ஆசிரியர் திருவள்ளுவ நாயனார் செம்பொருள் என்றார். செம்பொருள் என்னும் சொற் றொடரின் பொருளே சிவம் என்பதற்குங் கொள்ளப்படும். இப் பொருளிலே தான் 'சிவம்' என்பது வடமொழியிலும் வழங்குவது. சிவம் என்ற சொல்லை வடமொழியாகக் கொண்டு கூறும் தாதுப்பொருள் தமிழ்ச் சொற்பொருள் போல அவ்வளவு சிறந்ததன்று.

சிவ என்பதிலுள்ள சகரம் ஆரிய பாஷைகளுள் ஆதி கிடையாதென்று பாஷாதத்துவ விற்பனர் கூறுகிறார். ச என்பது தமிழ் எழுத்து. ஸ் என்பது ஆரியம். ல என்பது ஆரியத்திலுண்டு; ள என்பது தமிழிலேதான் ஆதியில் வழங்கியது. அப்படியே ண என்பதும் ஆதியில் தமிழிலேயேதான் இருந்தது. தமிழிலே யுள்ள சகரத்தின் ஒலியே சிவம் என்பதிலுள்ள சகரத்துக்கும் ஆம் என்பது டாக்டர் கால்டுவேல் செய்த ஆராய்ச்சியால் இனிது விளங்கும். இதனாலே பொருளாலன்றிச் சொல்லாலும் சிவம் என்பது தமிழே. சுகந்தருவது, மங்கலந் தருவது என்று கடவுளைக் குறிப்பது தமிழரது நினைவின் போக்குக்கு ஏற்றதேயன்றி, பண்டை ஆரியரது நினைவின் போக்குக்கு ஏற்றதன்று. காணப்படும் பொருட்கு அப்பாற் பட்டவனென்றும் இன்பந் தருபவனென்றுங் கடவுளை யெண்ணுவது பண்டைத் தமிழ் மக்களது இயல்பு. அளப்பருந்தன்மை வளப்பெருங் காட்சியதாகிய ஆகாயத்தைப் பார்த்தவுடனே எல்லையற்ற அவ்வாகாயமும் அங்கே தோன்றுகின்ற ஒளிப் பிழம்பாகிய ஞாயிறும் திங்களுமே முதல்வனும் என்று திரியக்கொண்ட மனநிலையில் எழுந்த சொற்களே கடவுளுக்குப் பெயர்களாக வடமொழியில் வழங்கின. பிரமன், விஷ்ணு, ருத்திரன் என்ற சொற்கள் பெரிதும் பரந்தன, செம்மையன் என்னும் பொருள்களில் ஆதியில் வழங்கின. பெரிது என்னுஞ் சொல்லில், அளப்பரிதாய உலகினின்றும் கடவுளைப் பிரித்தறிதற்கு உரிய பொருட் சிறப்பு ஒன்றுந் தோன்றவில்லை. முதலில் அளப்பரிய உலகையே பெரிதெனக்

கொண்டு உலகையும் முதல்வனையும் ஒன்றெனக் கருதி ேனார் கூறிய சொற்போல அது விளங்குகின்றது. எவ்வாறு பொருள் கொள்ளினும் கடவுள் என்ற சொல்லைப் போலப் பொருள் வளமுடைய தன்று. விஷ்ணு என்ற சொல் வியாபகன் எனப் பொருள்பட்டு எங்கு மிருப்பவன் என்று கடவுளைக் குறிக்கும். எங்குமிருந்து அவன் செய்வது யாதெனை அச்சொல் விளக்காததால் அஃது இயவுள் என்ற சொல்லைப்போல் பொருளாற்ற லுடைய தன்று. அதற்கு நேராய மால் என்ற சொல் அன்பு என்னும் பொருள்பட்டு, கடவுளுடைய திருவருளைக் குறிப்பது. விஷ்ணு என்பதின் பகுதிப் பொருளுடைய தமிழ்ச்சொல் இறைவனென்பது. அஃது 'இறு' என்பதனடியாகப் பிறந்தது. இறு என்பது தங்குதலென்னும் பொருளுடையது. ருத்திரன் என்ற சொல் பல பொருள் உடையதாயினும் செம்மையனென்ற பொருளில் முதல்வனை ஆரியர் நெருப்புவாயிலாக வழிபட்டமையை வெளிப்படுத்தும். துன்பம் நீக்குபவன் என்று அச்சொற்குப் பொருள் கொள்ளினும் அஃது இறைவனை மாத்திரம் குறிக்கும் நயம் உடையதாகத் தோன்றவில்லை.

இதுகாறுங் கூறியவாற்றால் முழு முதற் கடவுள் ஒருவன் உளனென்றும், அவனின் வேறாய் உயிரும் உலகும் உளவென்றும், அன்பினால் வழிபடுவார்க்கு முதல்வன் அருள் புரிவானென்றும், பண்டைத் தமிழர் ஆரியக் கலப்பின் முன்னே உணர்ந்தனர் என்பதைத் தமிழ்ச் சொற்களே இனிது விளக்குவது கண்டாம். இம்மொழிகள் தனித்தமிழ்ச் சொற்களாயும் மொழி பெயர்ப்பான்

அமைந்தன வல்லாதனவாயும் விளங்கலாலும் வடமொழிப் பண்டைநூலிற் காணப்படும் கடவுட் பெயர்கள் தமிழ்ப் பெயர்கள்போல அத்தகைய பொருள் நலமுடையதல்ல வாகலானும் இச்சொற்கள் குறிக்கும் அரிய உண்மைகள் ஆரியக் கலப்பின் பின் தமிழர்க்குத் தெரிந்தனவென்று கொள்வதற்கு இடமில்லை.

'மறைமொழிதானே மந்திர மென்ப' என்று தோல் காப்பியர் குறித்ததை ஆராயுமிடத்து வடமொழியில் மந் திரம்போலத் தமிழில் மறை மொழிகள் இருந்தன என் றும் அவை கருதிய பயனைக் கொடுக்கும் ஆற்றலுடையன வென்றும் விளங்குகின்றன. சொற்பொருட்கு ஏற்ப, மறை மொழியைத் தமிழ் மூதறிவாளர் தக்கார்க்கு மறைவாக ஈதலன்றி வெளிப்படக் கூறமாட்டார். ஆதலால் ஆசிரி யர் நச்சினார்க்கினியர் தமிழ் மந்திரங்களை வல்லார்வாய்க் கேட்டுணர்க வென்றார். ஈதறியார் மந்திர மென்பது தமி ழர் அறியாததொன்று என்று பிதற்றுவார்கள். எம்மந் திரத்திற்கும் மூலமாகிய பிரணவ மந்திரம் தமிழே என்பது,

'கொன்றைச் சடையார்க்கு ஒன்றைத் தெரியக்
கொஞ்சித் தமிழாற் பகர்வோனே'

என்ற அருணகிரிநாதர் திருவாக்கால் இனிது விளங்கும். பாதுகாப்பவன் என்கின்ற பொருளில் கடவுள், ஓம் எனப் படுவரென (வடமொழி)க் கூர்ம புராணத்திற் கூறியவாறே பாதுகாத்தல் என்கின்ற பொருளில் தமிழிலேதான் ஓம் என்பது சொன் மூலமாக விளங்குகின்றது, ஓம்பு என்பது அதனடியாகப் பிறந்த சொல். பகுதியின் பகுதியே சொன்

மூலமெனப்படும். எழுத்து வடிவானும் பிரணவம் தமிழே யென்பது சொல்லாமல் விளங்கும். செவிப்புலனாக ஒலிக் கப்படு மிடத்தும் அது தமிழ் நூல் விதிக்கு ஏற்றதாய் விளங்கு மென்று திருவாளர் பா. வே. மாணிக்க நாயக்க ரவர்கள் நன்கு விளக்கிப் போந்தனர். பிரணவத்தை 'மூத் தமிழ்' என்று கூறும் சித்தர் வழக்கினையும் உற்று நோக் குக.

இனி, மந்திரங்களுள் பிரதானமாகிய பீஜமந்திரம் எனப்படும் வித்தெழுத்து வடமொழி வேதத்தின் மிக்குப் புலனாவது அன்றென்றும், தந்திரத்திற்கே உரியதென்றும் கல்கத்தா ஐக்கோர்ட்டு நீதிபதி (High Court Judge, Calcutta) யாகிய சர். ஜாண் உட்ராவ் (Sir John Woodroffe) என்பவர் கூறியுள்ளார். வடமொழியில் தந்திர மெனப்படுவதும் தமிழில் நூலெனப்படுவதும் ஒரு பொரு ளுடையனவே. தமிழர் இமயமலை முதல் குமரி ஈறாக உள்ள நாடு முழுவதிலும் பரவியிருந்தனர் என்று சரித்திர நூலார் கூறுகின்றார்கள். ழகர எழுத்துள்ள மொழிகள் இமயமலைச் சார்பில் இன்றும் வழங்குகின்றன. தமிழ் மக் களுள் சிறந்த வேளாளரே கங்கை மைந்தர் எனபது, அவர் கங்கைத் துறையில் ஒருகாலத்தில் வாழ்ந்ததைக் குறிக்கும். இருக்குவேதத்தில் நன்கு ஆராய்ந்த மேல் நாட்டுக் கவிஞ ராகிய (Ragozin) ரகோசின் என்பவர் தமது (Vedic India) வேடிக் இந்தியா என்னும் நூலுள் 'சிவன்' என்னுந் தெய்வம் திராவிடரால் வணங்கப்பட்ட தென்றும், திராவிட மன்னர் பலர் வடநாட்டில் அரசு புரிந்தனர் என்றுங் கூறி யுள்ளார். வடநாட்டில் தமிழர் நிலவிய காலத்துப் பொன்

மலையின் ஒரு பகுதியாகிய கைலை என்னு மிடத்தைத் தமது சமய நிலையமாகக் கொண்டனர்.

ஆவும் கூவிளமும் கண்மணியும் வடநாட்டில் செழித் தோங்கிய பொருள்களே. இமயமலைச் சாரலில் ஆரியரும் தமிழரும் ஒருங்கு கலந்தனர். தமிழரது நூலை ஆரியர் தந்திர மென்றனர். ஆரிய மொழியிலுள்ள தந்திரங்கள் யாவும் தமிழ் நூல் வழியவென்பது தந்திரத்தை ஆரியர் அவைதிக மென்று கொண்டமையால் இனிது விளங்கும். தந்திரமென்பன ஆரியருக்குத் தமிழரிடமிருந்து புதிதாக வந்தமையால் 'வந்தது' என்னும் பொருளுடைய ஆகமம் என்னுஞ் சொல்லை அதற்கு இட்டு வழங்கினர்போலும். தந்திரத்தின் பல கருத்துக்கள் வேதத்துள் புகுவனவா யின. தமிழ் நாட்டு அறிவர் தமது மாணவர்க்கு ஆகமம் அறி வுறுத்தினர் என ஆசிரியர் நச்சினார்க்கினியர் தொல்காப் பிய வுரையுட் கூறியது காண்க. தந்திரச் சார்பாய நூல் கள் கூறும் மருத்துவம், மந்திரம், யோகம், ஞானம் முதலி யன வைதிகச் சார்பாய நூல்கள் கூறுமவற்றுள் நின்றும் வேறாகக் காணப்படுதலாலும் வைதிகச் சார்பாயெழுந்த சாங்கியம் முதலிய அறுவகைக் கோட்பாடுகளையும் தந்திர நூலார் புறமெனக் கழிப்பதாலும் அவ்வாறே தந்திரக் கோட்பாடு விசேஷங்களைப் புறமென வைதிக நூலார் ஒதுக்குவதாலும் தந்திர நூலோடு தமிழ் நாட்டுச் சித்தர் நூலினை ஒப்பிட்டுப் பார்க்குமிடத்து அவற்றுள் ஒற்றுமை மிகுதி காணப்படுதலாலும் கடல்கொள்வதன்முன் தமிழி லிருந்த அறிவர் நூலும் பின் எழுந்த வடமொழித் தந்திர நூலும் முதலும் வழியுமாமென யூகிக்கப்படும். தமிழ்

நாட்டு மூவேந்தரும் தமது அடையாளங்களை இமயத்தில் பொறித்தமை இமயம்வரை தமிழ்நாடு ஒரு காலத்தில் பரவியிருந்ததெனை யூகித்தற்கு இடந்தரும். எங்ஙனம் கைலைத்திருமலை தெய்வப் பொதுநிலையமாகக் கொள்ளப் பட்டதோ அவ்வாறே தென்னாட்டிலே பொதியின் மலையும் கொள்ளப்பெற்றதே. இமயமும் பொதியிலும் சைவரது நாட்டின் எல்லையென்பார்,

'கயிலையும் பொதியிலும் இடமென உடையாய்'

என்று தேவாரத்துள் அருளிச் செய்தமையுங் காண்க.

தமிழ்நாட்டுத் திருத்தொண்டர் வரலாறு கூறப்புகுந்த சேக்கிழார் பெருமான் திருமலைச் சிறப்புக் கூறியதும் இவ் வினைபுபற்றியே என்க. வடிவ வணக்கமானது முதல் முதல் தந்திர நூலினுள்ளே காணப்பட்டதென்று சர் ஜாண் உட்ராவ் என்பவர் கூறியுள்ளார். தமிழ்ப் பண்டை நூல் களும் இவ்வுண்மையை வற்புறுத்துகின்றன. ஆதலின் இமயத்துள்ள கோயில்கள் பலவும் தமிழரால் அவரது வழிச்சென்றோரால் அமைக்கப் பெற்றிருத்தல் வேண் டும். தென்னாட்டிலுள்ள பெரிய சிவாலயங்கள் யாவும் சைவ சித்தாந்திகளது முயற்சியால் அமைந்தன வென் பதை டாக்டர் கால்டுவெல் என்பவர் தெரிவித்திருக்கிறார். ஆதியில் எல்லா ஆகமங்களும் சிவபெருமானைப் பற்றி யனவே யென்பது 'சர்வாகம மயச்சிவ:' என்ற நாரத பரிவிராஜகத்தால் இனிது விளங்கும். வேதத்துள்ளும் உபநிடதத்துள்ளும் பலவிடங்களில் சிவனைப்பற்றிய உரை கள் காணப்படினும் சைவாகமத்துள்ளே தான் சிவனைப்

பற்றிய யாவும் பரக்கக் காணலாம் என்ற கருத்தை 'சிவச்சைவாகம ஸ்தானும்' என்ற அன்ன பூரண உபநிடதம் விளக்கியதாஉங் காண்க. இதனால் வேதத்துள் காணப்படும் சைவபாகம் ஆகமத்தினின்றும் போந்தமை தெளிவு. ஆகம ஞானமாகிய தமிழாதது தத்துவ ஞானத்தை ஆரியர் தமிழ் அரசரிடமிருந்து முதலில் உணர்ந்தன ரென்பது சாந்தோக்கியத்துள் குறிப்பால் உணர்த்தப்பட்டது. ஆரியர்க்குள் ஆதியில் கனல் வழிபாடே சிறந்து விளங்கிற்று. கனல் வழிபாட்டைச் சிறப்பாகச் செய்யும் ஆரியர், அம்மக்கட் கூட்டத்துள்ள ஏனையோரினும் சிறந்தவராதல் பற்றிப் பிராமணர் எனப்பட்டார். பிராமணர் என்ற சொல்லிற்குப் பெரியவரென்பது பொருள். எக்கூட்டத்தாருள்ளும் கடவுட் பூசைக்குரியார் பெரியார் எனப்படுதல் இயல்பே. தொன்றுதொட்டுக் கனல் வழிபாடியற்றிய நான்கு பிராமணர் தத்துவஞானம் உணரவேண்டி ஓர் அரசரிடம் சென்றனர் என்று சாந்தோக்கியங் கூறுகின்றது. இவண் நோக்கத்தக்க தொன்றுண்டு.

ஆரியருள் போர் புரிவோர் அரசராகவும், சமயத் தலைவர் பிராமணராகவு மிருந்தனர். ஆரிய அரசர் தத்துவ ஞானம் உணர்ந்திருப்பின் அவர் தமது கொள்கையைப் பிராமணர்க்கு அறிவித்து அன்னோர் வழிபாடும் தமது குடிகள் வழிபாடும் அக்கொள்கைக்கு ஏற்புடைத்தாக நிலவும் வண்ணம் ஒழுங்கு செய்திருப்பர். ஆதலானும் பின்வரும் அரச வாக்கியத்தாலும் பிராமணர் நால்வரும் சென்றடையப்பெற்ற மன்னன் ஆரிய மன்னன் அன்றென்பதும் அவன் தமிழ் வேந்த னென்பதும் தெளியப்படும். மேற்

குறித்த நான்கு பிராமணரையும் நோக்கி அரசன் கூறிய தாவது, 'நீவிர் எம்மிடம் வந்தது வியப்பைத் தருகின்றது; பிராமணன் ஒருவனும் இந்த ஞானத்தை இதுவரை பெற்ற தில்லையே' என்பதே.

இனி, ஆகமம் என்பதைப்பற்றி ஒரு சிறிது ஆராய் வோம். ஆகமம் என்னுஞ் சொல் சிவபெருமானிட மிருந்து வந்த ஞானநூலைக் குறிக்குமென்பர். சிவபெரு மான் அவர் ஞானத்தை விஞ்ஞானகலர் பதின்மருக்கும், ருத்திரர் பதினெண்மருக்கும் கூறிய முறையால் ஆகமம் இருபத்தெட்டாயின என்னும் சரிதம் ஒருபுற மிருப்ப, ஆகமங்களையெல்லாம் சிவபெருமான் உமாதேவியாருக்கு அறிவுறுத்தினர் எனவும் இறைவனது ஐம்முகங்கள் வாயி லாக ஆகமப் பொருளை அறுபத்தறுவர் கேட்டனரெனவும் கூறும் வரலாறுகளுமுள. ஆதிசைவர்க்குக் கோத்திரத் தலைவராகிய அகத்தியர் முதலிய ஐந்து முனிவர்க்குள் நான்கு முனிவர்க்கு அவ்வைந்தாகமங்களையும்; ஒருவர்க்கு எட்டு ஆகமங்களையும் ஐம்முகங்கள் வாயிலாகச் சதாசிவ மூர்த்தி அருளியதாகக் கூறுவதுமுண்டு.

இந்நில வுலகத்திலே ஆகமங்கள் 'மன்னுமாமலை மகேந்திர மலையில்' அருளப்பட்டன வென்று ஸ்ரீ மாணிக்க வாசக சுவாமிகள் அருளிச் செய்திருப்பதாலும் மகேந்திர மலை பொதியத்திற்குத் தென்பாலிருப்பதாகச் சிவதருமோத் தர முதலிய ஆகமங்கள் கூறுதலாலும், அஃதிருந்த நாடு தமிழ்நாடா யிருந்ததாலும், ஆகமங்கள் முதல் முதல் தமி ழிலே அருளிச் செய்யப்பட்டன வென்பது யூகிக்கப்படும்.

அவற்றின் திரிபுகளே இப்போதுள்ள வடமொழி யாகமங் களென்பர். தமிழிலே ஆகமமென்ற சொல்லானது பல வகைச் சமயத்தார்க்கும் உரிய சாதன நூல்களைக் குறிக் கப் பொது வகையாகவும் வழங்கும்; அது பரிமேலழகர் உரையிற் காண்க.

இங்ஙனம் கூறியவைகளால் நாம் தெளிதற் குரிய பொருளாவது ஆகமமென்பது ஞான நூலைக் குறிக்கும் ஓர் மொழி எனவும், அதனைப் பக்குவர்க்குத் தமது திரு வருள் வாயிலாக அவரவர் பக்குவத்திற் கேற்ப உணர்த்த அன்னோர் செய்த நூல் ஆகமமாமெனவும், அவ்வா றெழுந்த உயர் நூல் உஅ எனவும், அவற்றிற்குத் தலைவர் ஐம்முனிவரெனவும் யூகிக்கப்படும்.

பண்டைச் செந்தமிழ் அருள் நூல்கள் மறைந்த பின் னர் வடமொழி வேதங்களை நான்காக வகுத்த வியாசமுனி வர் அவ்வேதங்களிலே குறிப்புப் பொருளாகச் சைவநூ லுண்மைகளை அமைத்து வைத்தனர். சிறப்புப்பொருளாகச் சிவமாநெறிக் கொள்கைகளை யெடுத்து விளக்கும் வட மொழி நூல்கள் ஆகமமெனப் பெயர் பெற்றன. தமிழிலே பண்டை நான்மறை முறைகளை உலகிற்கு உணர்த்தக் கரு திய தெய்வப் புலமைத் திருவள்ளுவர் சைவ சித்தாந்தக் கருத்துக்களைப் பொதுவகையால் திறம்படத் தமது நூலுள் அறப்பகுதியில் ஓதியருளினர். பின்னர் சைவத் திருநெறித் தலைவராகிய முதல்வர் நால்வரும் தமது கட வுட் பழம் பாடல்களிலே தாம் நுகர்ந்த சைவசித்தாந்தத் தேனமுதத்தை நிறைத்து உலகிற்கு உதவினர். அவ்

வாறே இருமொழி நூற்கடலும் நிலைகண்டுணர்ந்த திருமூல மாமுனிவர் முதலிய பேரறிஞர் தமது அறிவு நூல்கள் வாயிலாகச் சைவசித்தாந்த ஒளியைத் திகழச் செய்தனர். அப்பெரியார் காலங் கழிந்தபின் செந்தமிழ் அறிவு நூல் களையும் சிவாகம நூல்களையும் ஆராயும் முயற்சி குறைந்த மையானும் வேத ஞானகாண்ட சாரமாய் வியாசர் செய்த பிரம சூத்திரத்தைப் பொதுப் பிரமாண நூலாகப் பலர் தழுவித் தத்தமக்குத் தோன்றியவாறே பொருள் கொண்டு உலகிற்குப் பெருமையல் விளைத்தனர். ஆதலால் பிரமசூத் திர பாடியங்களா லுண்டாகிய மயக்கத்திற்கு மருந்தில் லாது மன்பதைகள் அலமுறு நின்றனர். அப்பொழுது தென்முகத் தெய்வப் பரமாசாரியர் திருவருளால் பொல் லாப் பிள்ளையாரிடம் உண்மை நூல் உணர்வினை முழுதும் பெற்ற ஸ்ரீ மெய்கண்ட தேவ நாயனார் சைவ நன் மக்களது பெருந்தவக் கொழுந்தா யெழுந்தருளிச் சிவஞான போதம் என்னும் சைவ சித்தாந்தத் தலைமணி நூலைத் தமிழுக்கு உயிரான பன்னிரண்டெழுத்தென்னப் பன்னிரண்டு சூத் திரங்களால் திருவாய்மலர்ந்தருளி அதனை ஸ்ரீ அருணந்தி சிவாச்சாரியார் முதலிய தமது மாணவர் நாற்பத்தொன்ப தின்மருக்கும் உபதேசித்தருளினர். சிவஞான போதத் தின் வழிநூலாக வெழுந்த சிவஞான சித்தியார், சிவப் பிரகாசம் முதலிய நூல்கள் செய்யுள் வடிவாயிருந்தமை யால் பிற்காலத்தார் சைவ சித்தாந்த நூற் பொருளைத் தெள்ளிதின் உணர்ந்திற்றிலர். வடமொழிச் சிவஞான போதத்திற்குச் சிவாக்கிரயோகிகள் இயற்றிய உரை பெரி தும் பயனுடைத்தெனினும் சைவ சித்தாந்த நுட்பத்தைச்

செவ்வனே விளக்கும் ஆற்றல் மிக்குளதன்று. ஸ்ரீ உமாபதி சிவாச்சாரியார் செய்தருளிய பௌட்கர விருத்திப் பொதுப் பாகத்தை;வடமொழியில் நன்கு விளக்குவதாகும். எனினும் அது சைவ சித்தாந்த உண்மைகளை முழுவதும் கூறும் நூலன்று. வடமொழிச் சிவஞான போதத்திற்கு வித்தியாரணியர் முதலிய புற மதத்தினர் தத்தமக்குத் தோன்றியவாறே பொருள் கொண்டனர். ஆதலால் சிவ ஞானபோதப் பொருளை அளவை நூன்முறைக் கேற்பவும் இருமொழி அருள் நூல்முடிவிற் கேற்பவும் விரிவாக விளக்கும் பேருரைப் பெருநூ லொன்று வேண்டியதாயிற்று. அது துறைசை மாதவச் சிவஞான யோகிகளாலே இயற்றியருளப்பெற்றது. வடமொழியிலும் தென்மொழியிலுமுள்ள சைவசித்தாந்த வுண்மைகள் முழுவதையும் இனிது விளக்கிச் சைவசித்தாந்த நூல்களின் முடிபை உணர்தற்குரிய தெளிவினைக் கற்பார்க்கு நல்கும் கதிர் மணி நூல் இஃதேயாம் என்பது யார்க்கும் விளங்கும். இங்ஙனம் ஒருவாறு சைவ சித்தாந்த வரலாறு கூறி முடித்தாம்.



## குறிப்பு:

சைவ சித்தாந்த நன்மக்கள் யாவரும் தமது சமய நூல்களைக் குறிக்கொண்டு பாதுகாத்தலைத் தமது பெருங் கடனாக எண்ணக்கடவர். நூல் பாதுகாப்பு ஒன்றினாலேயே ஆரியர் தமிழரின் மேம்பட்டனர். நூல் பாதுகாவாமையினாலேயே தமிழர் தம் பெருமையை இழந்தனர். தமது சமய நெறி இன்னதென உணர்ந்து அதன்வழி ஒழுகுவதைக் கடைப்பிடித்தலினாலே ஏனையோர் உயர்ந்தனர். அங்ஙனம் செய்யாமையினாலே சைவர் அஃகி ஒழிந்தனர். அம்மட்டோ! நமக்குப் பெரு வாழ்வும் பெரு நிதியுமாகிய திருக்கோயில், திருமடம் முதலிய சைவ சமய நிலையங்களைப் புறச்சமயத்தார் பறிகொள்ள விடுத்து வாளாவிருக்க நேர்ந்தது. சைவ சித்தாந்த நூல்களை இனியாவது நாம் கைநழுவ விடாது போற்றிப் புரப்போமாக. சைவ சித்தாந்தத்தின் சார்பாய நூல்களனைத்தையும் தமிழிலே அச்சிடுவித்துப் பயன் கொள்ளுதலும் நமது கடமையே. ஆங்கிலத்திலே Science என்கிற பூதநூண்ணூல், புல நுண்ணூல்கள் போல் நுண்ணூல்கள் யாவும் சைவ சித்தாந்தத்திற்குச் சார்பாக இருப்பின் அவற்றையும் நாம் கொள்ளவேண்டும். வடமொழி தென்மொழிகளிலுள்ள சரியை கிரியா யோக நூல்கள் யாவும் சைவசித்தாந்த சார்பினவாதலால் அவற்றையும் தமிழிலே யாருமறிய அச்சிடல் வேண்டும். எளிதாக யாவர்க்கும் விளங்கும் வண்ணம் சித்தாந்தக் கொள்கையினைப் பரப்புதற்குச் சிறு நூல்கள் வெளிவரல் வேண்டும். திருவாசகம், சிவஞான போதம் என்னும் இரண்டு நூல்களையும் சொற்

பொருளாதல் விளங்கும்படி அச்சிடுவித்து யாவர்க்கும் குறைந்த விலைக்குக் கொடுக்க வேண்டும். சைவமாணவர் யாவரும் சைவ சித்தாந்த வுண்மைகளைச் சுருக்கமாகவும் விளக்கமாகவும் உணரும் வண்ணம் போதகர்கள் நியமித்து அவற்றைக் கற்பிக்கவேண்டும். கிறித்தவர்கள் தங்கள் நூலைக் கற்றுப் பாதுகாத்துப் பிறர்க்கு ஈதல் போன்று சைவர் ஒவ்வொருவரும் சைவ நூல்களைக் கற்றுப் பாதுகாத்துப் பிறர்க்குப் பயன்படச் சொல்லல் வேண்டும். இன்றேல் சைவரென்னும் பெயர்க்குப் புறம் பேயாவர். குடதிசைக் கிறித்தவக் குருக்களாகிய Dr. G. U. Pope, Dr. Gowdie முதலியவர்கள் திருவாசகம், சிவஞான போதம் முதலிய நூல்களைக் கற்றுச் சீராட்டிப் பாராட்டி நிற்கவும், நம்மவர்கள் தங்கள் பெருநிதி யிழந்து புறச்சமயிகள்முன் திகைத்து நிற்பது எத்துணை யிரங்கத் தக்கதாகின்றது. இந்நாட்டிலே பொருளாளரும், துறவிகளும் சைவசித்தாந்தம் இன்னதென்றுணராது கொன்னே வாழ்நாட் கழிக்காநிற்ப, சுமார்த்தரும் வைணவரும் தமது மொழியினையும் தமது சமய நூலினையும் அரசாங்கத்தாரும் சர்வகலாசங்கத்தாரும் மதித்துப் பேருதவி செய்யும் வண்ணம் முயன்று வெற்றிபெற்றிருக்கின்றார்கள். அம்மட்டோ! நமது சமய வளர்ச்சிக்காகவும் தமிழ் வளர்ச்சிக்காகவும் கோயில்களிலும் மடாலயங்களிலும் வைத்த பெருநிதிக் குவியல்களெல்லாம் தஞ்சமய வளர்ச்சிக்கும் தம் மேம்பாட்டிற்குமே உரிமையாக்கிக் கொண்டார்கள். சர்வகலா சங்கத்தார் வடமொழி வேதாந்தநூல் வல்லார்க்குச் சிரோன்மணிப் பட்டம் கொடுப்பதாக ஏற்

படுத்தியிருப்பதுபோல் சித்தாந்தப் புலமைப் பட்டங்கள் அமைக்கவேண்டுமென்று நாம் அறிவிக்க வேண்டும்.

ஆதலால் சைவ சித்தாந்திகள் தமது அரிய நூல்களையும் சமயத்திற்கு உயிராகிய நிலையங்களையும் ஊக்கந் தளராது பாதுகாக்க முயல்வதுடன் தமது ஒப்பற்ற சமயம் எங்கும் பரவுதற்குரிய முயற்சிகள் யாவும் செய்து வெற்றி பெறும் வண்ணம் விடாமுயற்சியையும் தளராத ஊக்கத்தையும் நிலைத்த பேரன்பையும் சிவபெருமான் பெருங் கருணையால் ஈந்தருளும் வண்ணம் திருவருளைப் போற்றுவோமாக.

சைவசித்தாந்த உண்மைவரலாறு

முற்றிற்று

கழக வெளியீடு - உ௩

உ

திருச்சிற்றம்பலம்

# தமிழ்நாட்டு இந்துசமயங்களின் சுருக்க வரலாறு



சென்னை
சட்டகலாசாலைப் பேராசிரியர்
திரு. கா. சுப்பிரமணிய பிள்ளை
எம்., ஏ., எம். எல்., அட்வகேட்,
அவர்கள் எழுதியது



திருநெல்வேலி, தென்னிந்திய
சைவசித்தாந்த நூற்பதிப்புக் கழகம் லிமிடெட்
திருநெல்வேலி & சென்னை
பிரபவ௵ ஆனி௴

# பதிப்புரை

'இந்து சமயங்களின் சுருக்க வரலாறு' என்பது செந்தமிழ்ச் செல்வி என்னுந் திங்கட்டாளின் முதலிரண்டு சிலம்புகளில் திருவாளர் கா. சுப்பிரமணிய பிள்ளையவர்களால் எழுதப்பட்டு வெளிவந்ததாகும்.

இதன்கண் இந்துசமயமென்று ஒரு தனிச் சமயம் உண்மையிற் கிடையாதென்பதும், சுமார்த்தம், வைணவம், சைவம் என்ற சமயங்களே இந்து சமயம் என்ற பொதுப் பெயரால் வழங்கப் பெறுகின்றன என்பதும், சுமார்த்த முதலிய மூன்று சமயங்களும் இன்ன என ஆராய்ச்சி முறையான் விளக்கி அவற்றின் தலைவர்கள் இன்னார் என்பதும், அருள் நூல்கள் இன்னவென்பதும், இப்போதுள்ள சைவசமயம் பண்டைத் தமிழரதேயாமென்பதும் சமயங்களின் அட்டவணையுடன் கற்றார் கல்லாதாராகிய எத்திறத்தவரும் எளிதில் உணரத்தக்கனவாய் எழுதப்பட்டிருக்கின்றன.

மேலும் இதன்கண் சைவத்திற்கும் சுமார்த்தத்திற்குமுள்ள வேற்றுமைகளைச் சைவர்களிற் பெரும்பாலார் உணராமையால் சிவபிரான் றிருக்கோயில்களில் சுமார்த்த மதக்கொள்கை பெரிதும். தழுவப்பட்டு வருகின்றதாகலான் சைவமக்களுக்குத் தங்களதுகொள்கையை உணர்த்துவதற்கு இந்நூல் எழுந்ததென்பதும், திருக்கோயில் வழிபாடு ஆகமமுறைக்கு மாறாக நடைபெறத் தலைப்பட்டு

விட்டதென்பதும், சைவமடபதிகள் தங்களுக்குக் குறிக்கப்பட்ட அறத்தொழில்களை அறவே கைவிட்டு மறச் செயல்களிற் புகுந்து விட்டமையால் சைவ மக்கள் தங்களது சமய அறிவை இழக்க நேரிட்டதென்பதும், சைவ மக்கள் தங்களது உயரிய நிலையினை மீண்டும் அடைய வேண்டுமாயின் அதற்குக் கைக்கொள்ளவேண்டிய முறைகள் இவை யென்பதும் தக்க சான்றுகளுடன் விளக்கப் பட்டிருக்கின்றன.

இவ்வரிய பெரிய ஆராய்ச்சியுரையினை எழுதிச் சைவ மக்களுக்குப் பயன்படுத்திய இதன் ஆசிரியருக்கு மறவா நன்றிபாராட்டுங் கடப்பாடு மிகவுடையோம்.

திருநெல்வேலி, 27-6-1927 — சைவசித்தாந்த நூற்பதிப்புக் கழகத்தார்



திருச்சிற்றம்பலம்

# தமிழ்நாட்டு இந்துசமயங்களின் சுருக்க வரலாறு

இந் நாட்டிலுள்ள சமய நிலையங்களின் இயல்பையும் வரலாற்றினையும் அறிந்து அந் நிலையங்களைத் தற்கால முறைக்கு இயையச் சீர்திருத்தஞ் செய்ய முயலவேண்டும். அவற்றின் உண்மை இலக்கணத்தையும் உயரிய நோக்கத்தையும் இதுவரை சட்ட மியற்றுவோரும் நீதிமன்றத் தலைவர்களும் உற்று நோக்கியதாகத் தெரியவில்லை. சமயம் பற்றிய சட்டங்களுந் தீர்ப்புக்களும் மிக்க பயனில்லாம லிருப்பனவாகவும் பொருத்தமற்றனவாகவும் உண்மைக்கு மாறுபட்டனவாகவுமுள்ளன. ஒரு சார்புடைய மக்கள் முயற்சியால் அவைகள் நிலைபெறுவதாயினமையே அதற்குக் காரணம்.

சமய ஆராய்ச்சிக் குறைவு காரணமாக ஆள்வோர் ஆளப்படுவோர் ஆகிய இருதிறத்தாருள்ளும் பெரும்பாலும், சுமார்த்தப் பிராமணர்களே இந்துக்கள் யாவர்க்கும் சமய ஆசிரியரெனவும், வடமொழி வேதங்களே உயர்ந்த பிரமாண நூல்களெனவுங் கருதுந் தப்புக்கொள்கை நாடெங்கும் பரவியுள்ளது. அக் கருத்து மிக்க கெடு

திலை விளைத்துள்ள தென்பது அடியிற் கூறப்படுவனவற் றால் நன்கு விளங்கும். முதன்முதல் உள்ளத்தே பதிக்க வேண்டியது யாதெனில் இந்துமதம் என்ற ஒரு சமயம் உண்மையிற் கிடையாதென்பது.

'இந்து மதம்' என்பது இந்திய நாட்டிலுள்ள மக் களின் சமயம் என்று கொள்ளப்படும். சிந்து நதிக்கரையி லுள்ளவர்களைக் குறிக்கும் 'ஹிந்து' என்ற பாரசீகச் சொல்லை, கிரேக்கர் 'இந்து' என வழங்க அவர் வழக்கைப் பின்பற்றிய மேலைத் தேசத்தார் யாவரும் இந்நாட்டிலுள் ளாரை இந்துக்கள் எனவும், இந்நாட்டை இந்தியா எனவும் வழங்கலாயினர். 'இந்து' என்ற சொல் இப்பொருளில் ஆரியம் பண்டைத் தமிழ் என்னும் இருமொழி நூல்களி லுங் கிடையாது. இந் நாட்டிலே சமயங்களைப் பற்றி யாதும் அறியாதவர்கள் தங்கள் மதத்தை இந்துமதம் என்று கூறுவார்கள். ஆனால் இந்நாட்டு மக்கள் புத்தர் காலத்திற்கு முன்னர்க்கூட ஒரு சமயத்தைத் தழுவினவ ராகக் காணப்படாமையின் இந்துமதம் என்ற சொல் புத் தம், சமணம், மகம்மதியம், கிறித்துவம் என்பவற்றை யொழித்து ஒழிந்த பிற சமயங்கள் அனைத்தையும் சுட்டும் பொது மொழியாகக் கருதப்படவேண்டும். ஆகவே, இந்து மதம் ஒன்று உண்டு என்பது கிடையாது. ஐரோப்பியம், அமெரிக்கம், ஆங்கிலம் என்ற சொற்கள் வாயிலாக அன் னோரது நாகரிகமும் மொழியும் குறிக்கப்படுவனவே யல்லது அவர்கள் சமயம் குறிக்கப்படாமைபோல இந்து என்ற சொல்லும் இமய முதல் குமரி வரையுள்ள பரத கண்டத்தாரது நாகரிகத்தைக் குறிப்பதே யன்றிச் சமய

ளையும் ஆவியையும் உலகிற் பல்வேறிடங்களில் தத்தஞ் செய்து தம் சமயத்தைப் பரப்பியிருக்கின்றனர். எண்ணில்லா மாக்களை மக்களாக்கி யிருக்கின்றனர். இகழ்ந்தொதுக்கப்பட்டாரை இயன்ற வரையில் அன்போடு ஆதரித்து வருகின்றனர். இந்த அன்பொழுக்கமே அம் மதவியாபகத்திற்கு அடிப்படையான காரணம். அதனோடு சாதி வேற்றுமை சடங்கு வேற்றுமைகளை அதிகமாகக் கருதாது தமது சமய வேலைகளை வெகு திறமையான கட்டுப்பாட்டுக் குட்படுத்திச் செய்துவருவது மற்றொன்று. அம்மதத்தினர் யாவரும் தத்தமக்கென ஓராலயங் குறிப்பிட்டுக்கொண்டு வாரத்திற்கொருமுறை ஆண் பெண் அடங்கலுமாய்த் தவறாது சென்று, தஞ்சமய நூல்களை நன்கு கற்றுள்ள போதகர் வாயிலாய்ச் சமயபோதனை பெற்றுவருதல் எவ்வளவு சிறப்புடைய ஏற்பாடென்பதை நம்மவர் இன்னுமுணரவில்லை. பாதிரிமார் சங்கங்கள் பலவா யிருப்பினும் அவை ஒவ்வொன்றுந் தத்தமக் கெனத் திடமான அமைப்புகளை வகுத்துக்கொண்டிருப்பதும், சமயாபிவிருத்தி நாடிப் பெருங்காரியங்கள் செய்யவேண்டி அவை யாவும் ஒன்றுகூடித் தங்கள் முயற்சியின் பயனை அவ்வப்போது சோதித்து, வேண்டிய புதிய முறைகளைக் கையாளுவதும் அவர் வெற்றிக்குத் துணைக்காரணங்களாம்.

இந்நாளில் சைவர்கள் தஞ்சமயக் கடமைகளைச் செவ்வனே செய்ய விரும்புவாராயின், மேற்குறித்துப் போந்த உண்மைகளை உள்ளவா றுணர்ந்தொழுக வேண்டும். அதாவது அவர்க்கும் சமயவொளி பரவ

வேண்டும் என்னும் பேரவா எழுதல் வேண்டும். அன்னைப் பேச்சில்மட்டுமன்றிச் செய்கையிலுங் காட்டி வரவேண்டும். கிறித்துவ சோதரர் போன்று நாம் நாட்டிற்கும் காலத்திற்கும் ஏற்றவாறு கட்டுப்பாடாக ஒன்றுகூடி யுழைத்தல் வேண்டும். "ஒன்றுபட்டா லுண்டுவாழ்வே,—நம்மில் ஒற்றுமை நீங்கில் அனைவர்க் குந்தாழ்வே" என்ற வாக்கு சமய ஊழியத் துறைக்கும் பொருந்துவ தொன்றெனப் புந்தியிற் கொள்ள வேண்டும். ஓரமைப்புக் குட்பட்டுச் சைவர் சமயப் பிரசாரஞ் செய்வதைப்பற்றி முன்னரே குறிப்பிட்டாயிற்று. முக்கியமாய்ச் சேரிகளில் சைவபோதனையை ஏற்ற பெற்றி செய்யும் பாடசாலைகள் விரைவில் ஏற்படவேண்டும். அங்குள்ள ஏழைகளின் வறுமையைப் போக்கி அவர்கள் நிலையை உயர்த்துதற்கான ஐக்கிய நாணய சங்க இயக்கம் மதுபான விலக்கு முதலிய நல்லியக்கங்களிற் சைவர் மனமாரக் கலந்து கொண்டு அத்துறைகளிற் செய்யும் ஊழியங்களைச் சிவத்தொண்டென மதித்து மன்னுயிர்க் கிதஞ்செய்தல் வேண்டும். மேல் வகுப்பினர்க்கும் ஒழுங்கான சமயபோதனை கிடைப்பதற் கேற்ற முறைகளைத் தேடவேண்டும்.

சைவ சமயம் அன்புச்சமய மென்பதை இவ்வாறெல்லாஞ் செய்கையிற் புலப்படுத்த விரும்புவோர் முதலில் தமிழ்நாட்டில் தொண்டு செய்யவேண்டும். பின்பு தெலுங்கு கன்னடம் மலையாளம் துளுவம் என்னும் தமிழ்த் தொடர்புள்ள மொழி வழங்கும் பண்டைத் தமிழ்நாட்டுப் பகுதிகளில் வேலை செய்யவேண்டும்.

அதன் பின்னரேனும் வட இந்தியாவுக்கும் சைவ சித்தாந்த மாண்பையும் தமிழின் பெருமையையும் தெரிவித்தல் வேண்டும். அங்குள்ள காஸ்மீரம், நேபாளம், ராஜபுதனம் இவற்றில் தொன்று தொட்டே சைவ சமயம் நிலைபெற்று வந்துள்ளது. அங்கெல்லாஞ் சென்று சமய சகோதர உரிமை பாராட்டி அவர்களையும் நமரெனப் பேணிக்கொள்ள வேண்டும். இமயமுங் குமரியும் இருகடல் வரம்பும் எல்லையாக் கொண்ட இந்திய நாட்டின் முழுப்பரப்பும் நந்தாயின் திருமேனி என்னும் உணர்ச்சி இந்நாளில் வலுத்து வருகின்றது. அம்மேனியில் ஒருறுப்பிற்குறும் இன்பதுன்பங்கள் மற்றையுறுப்புகட்கும் உரித்தாம். ஆகவே சிவாகம நெறி நிற்கும் நேபாள காஸ்மீரங்களோடு தமிழ்ச் சைவநாடு ஆன்மநேய உரிமை பாராட்டுதல் அவசியம். இம்மட்டோ ? வெளிநாடுகட்குச் சென்று குடியேறிய நம்மவர்களை மறந்து விடலாகாது. பத்திரிகைகள் வாயிலாகவும் தலைவர்கள் போக்கு வரவாலும் சமய சம்பந்தத்தை நழுவ விடாது போற்றி வரவேண்டும். இறைவன் பிறப்பிறப்பறியாப் பெம்மான் என்னுஞ் சைவர் கோட்பாட்டைத் தன்னதாகவுங் கொண்டுள்ள இஸ்லாம் மார்க்கமானது இந்துக்களுக்கு இவ் விஷயத்தில் ஒரு சிறந்த எடுத்துக்காட்டா யிருக்கின்றது. இஸ்லாம் மதத்தைத் தழுவினவர் எந்நாட்டி லிருப்பினும், எம்மொழி பேசினும், எந்நிறத்தவராயினும் எவ்வரசாங்கத்தின் கீழ் வாழினும் தாமெல்லாம் ஒரே கூட்டத்தவரென்னும் உரிமையைச் செய்கையிற் பாராட்டிக் காட்டுகின்றனர். வழிபாட்டு முறையிலும் அம்

மதத்தவர் காட்டும் சகோதர சமத்துவம் பெரிதும் வியக்கத்தக்கது. தொழுகைக்கு வாருங்களென்னும் ஒலி மசூதியினின் றெழுந்தவுடன், அரசனும் ஆண்டியும், முதியனும் இளைஞனும், உயர்ந்தோனும் தாழ்ந்தோனும் ஒரு தடையுமின்றித் தொழுமிடஞ் சென்று ஒன்று யுட்கார்ந்து வணங்கித் திரும்புகின்றனர். இந் நேர்நெறிக்கு முரணிய பல வேற்றுமைகளை இந்து ஆலயங்களிற் கற்பித்துக்கொண்டு ஆணவமலத்தை எருவிட்டு வளர்க்கும் நம்மனோர் செய்கை போற்றத் தக்கதாமோ? நிற்க.

இஙஙனம் பரந்த நோக்கங் கொள்ளுதல் இருபதாம் நூற்றாண்டில் தோன்றிய தொரு நவீனக் கொள்கையென அறிஞர் கருதார். இது இந்நாளில் பொதுஜன வுணர்ச்சிக் கெட்டும் வகையில் முன்னுளினும் விடப் பெரிதும் வற்புறுத்தப்படுவது மெய்யாயினும், கோட்பாடு பழையதே. சைவர் போற்றுந் **திருத்தொண்டர் புராணத்தில்** அப்பாலு மடிச்சார்ந்தார் புராணம் என ஒரு புராண முண்டன்றோ? அதில் தெய்வப்புலமைச் **சேக்கிழார்** அருளிச்செய்துள்ள திருப்பாட்டைக் கருத்தூன்றிப் பார்ப்போர்க்கு இவ்வுண்மை விளங்கும்.

"மூவேந்தர் தமிழ்வழங்கு நாட்டுக்கப்பான்
முதல்வனு ரடிச்சார்ந்த முறைமையோரும்
நாவேய்ந்த திருத்தொண்டத் தொகையிற்கூறு
நற்றொண்டர் காலத்து முன்னும்பின்னும்

பூவேய்ந்த நெடுஞ்சடைமே லடம்புதும்பை
புதியமதி நதியிதழி பொருந்தவைத்த
சேவேந்து வெல்கொடியா னடிச்சார்ந்தார்கள்
செப்பியவப் பாலுமடிச் சார்ந்தார்தாமே.''

என்பது அத்திருப்பாட்டு. இங்ஙனம் தமிழ்நாட்டுக் கப்பாலும் அடிச்சார்வார் உளராதலின், அவருக்கு நந் தமிழ்வேதத் திருமுறைகளையும் தமிழிலுள்ள பிற அரிய நூல்களையும் குறித்தறிவித்தல் இன்றியமையா தது. அவ்வாறே அவர்களிட முளவாகக் கூறப்படும் சிவாகமங்களையும் ஏனைய நல்ல நூல்களையும் நாம் விரும்பிப் பெற்றுத் தமிழ்ப்படுத்திக் கொள்ளலும் இன்றியமையாதது. இக் கொள்ளல் கொடுத்தல்களை முதலில் தெலுங்கு கன்னட நாடுகளில் தொடங்கி வட இந்தியா வரையில் பிணித்துக்கொள்ளுவதோடு, உலகமெங்கும் பரவியிருக்கும் அரசாங்கமொழியாம் ஆங்கிலத்தில் சைவசமய நூல்களை வெளியிடுதலும் பெரிதும் வேண்டற்பாலது. பல மேனாட்டறிஞர்கட்குத் தமிழ்நாட்டுச் சைவசமய நூல்களி னியல்பே தெரியாதாகையால், அவர்களுக்கு வடமொழியிலும் ஆங்கிலத்திலும் எளிதிற் கிடைக்கும் சங்கர ராமாநுஜ மத்துவமத நூல்களையும் பிற வட நூல்களையும் படித்து விட்டு இந்து மதம் என்பது இவற்றின் தொகுதியே யென மயங்கிவிட்டார்கள். இதனாலும் சைவசமயம் சில நன்மைகளை யிழந்திருக்க நேர்ந்தது. காலஞ் சென்ற திரு. நல்லசாமிப் பிள்ளையவர்கள் இவ்வுண்மை களை நன்கோர்ந்து சித்தாந்த சாத்திரங்கள் பலவற்றை ஆங்கிலத்தில் மொழி பெயர்த்ததோடு 'சித்தாந்த

தீபிகை' என்னுமோர் அரிய ஆங்கிலமாதச்சஞ்சிகையும் வெளியிட்டு வந்தார்கள். அதன் பயனாய்ச் சில மேனாட்டறிஞர்கள் சைவசமயக் கோட்பாடுகளை யுணர்ந்து அவற்றை வியந்து பாராட்டுவாராயினர். சைவத்தமிழ் நூல்களை ஆங்கிலத்தில் வெளியிடுதலால் மேல்நாடுகளில் மட்டுமன்று; இந்த நாட்டிலும் நன்மையுண்டாம்; இந்தியர்களிற் பலர் தந்தாய்மொழியினும் பார்க்க ஆங்கிலத்தில் மிக்க பயிற்சியுடையரா யிருக்கின்றனர். உயரிய நூல்கள் அம்மொழியிற் றான் கிடைக்கும் என்னும் எண்ணமுடையவர்போற் பலர் காண்கின்றனர். இன்னோர்க்கெல்லாம் சைவசமயத்தின் உண்மைகளைத் தெரிவித்தற்கு ஏற்ற கருவி ஆங்கில மொழிபெயர்ப்பேயாம்.

சைவசமயப் பாதுகாப்புக்குத் தற்காலத்தில் இன்றியமையாது வேண்டப்படும் பத்திரிகைகள் எத்தனை யுளவென்று கேட்டால் விடைதருதற்குச் சைவர் வெட்கப்பட வேண்டியவராவர். ஆங்கிலத்தில் வெளியாய்க்கொண்டிருந்த "தீபிகை", நெய்யுந் திரியுமின்றி முன்னமே பொன்றிப்போயிற்று. தமிழில் 'சைவம்' 'சித்தாந்தம்' என்னும் இரண்டு பத்திரிகைகள் தோன்றின. அவற்றுள் 'சித்தாந்தம்' முடிந்த முடிவைக் கண்டுவிட்டது. 'சைவம்' கொழுகொம்பில்லாக் கொடிபோல் வாடித் தவித்து வதங்கிப் போயிற்று. இவற்றின் பின்னர் "செந்தமிழ்ச்செல்வி" "குமரன்" என்னும் பத்திரிகைகள் தோன்றின. இவைகள் பாராட்டத்தக்க ஓரளவில் சைவத்தையும் தமிழையும் போற்றி வருகின்றன. "லோகோபகாரி" என்னும்

வாரப்பத்திரிகையையும் இவற்றுடன் சேர்த்தெண்ணலாம். இவற்றிற்குப் போதுமான ஆதரவைத் தமிழ்ச் சைவமக்கள் இன்னுந்தரவில்லை. பத்திரிகைகள் வாயிலாய்ச் சமயம் பேணுதல் இக்காலத்திற்கு இன்றியமையாதது என்னும் உண்மையை இனியேனும் பொதுவாய் சைவ மக்கள் யாவரும்—சிறப்பாய் சைவ மடாதிபதிகளும் நன்றாய் உணர்ந்து தங்கடமையைச் செவ்வனே செய்தல் வேண்டும்.

சைவர்கள் சில தலைமுறைகளாகத் தங்கள் சமயக் கடமைகளைக் கால வியல்புணர்ந்து ஒழுங்காய்ச்செய்து வாராமையால் சைவர்க்கும் அவர் தாய்நாட்டிற்கும் நேர்ந்த தீங்குகள் போதுமானவை. அவர் முன்னோர் அவர்பா லொப்பித்த ஞானச் செல்வத்தைப் போற்றி வளர்க்காது அழிய விடுவரேயாயின், அவர் பின்சந்ததியாருக்கு அவை எளிதிற் பயன்றர மாட்டாவாய்க் கெடும். இதனால் முன்னோர் தேடிய சொத்தை யழித்தாரென்னும் பழி பாவம் இத் தலைமுறையினரையுஞ் சூழும். பிறமதத்தினர் தம் மதக்கடமைகளைச் செய்யு மாண்மைக் கண்ணுறவேண்டும். தங்கடமைகளைச் செய்யாமையால் விளைந்த கேடுகளையும் காணவேண்டும். பல கிராமங்களில் சிவாலயங்கள் பாழடைந்திருப்பதைப் பார்த்தல்வேண்டும். கிறித்துவமதம் போனவர்போக எஞ்சி நிற்கும் இந்துக்களில் சைவ மரபினரிற் சிலர் சில வாண்டுகளாகத் திருநீறிடுவதை மறந்து நாமம் போட்டுக் கொள்ளுவதையும் நாடியுணரவேண்டும். சைவ மரபினர் வாழும் பல ஊர்களில் சிவநாமங் கேட்டலரிதாய் விட்டது. கற்றூரும்

மற்றாரும் நாத்திக வாழ்க்கை வாழ்ந்து வருகின்றனர். வாரத்திற் கொருமுறை பஜனை செய்யும் பழக்கமுடையோரும் அரிபஜனை செய்வது பெருவழக்கமாய்ச் சில ஜில்லாக்களில் பரவிவருகின்றது.

ஆத்திக சகோதர சமயமாகிய வைணவத்தின் மீது நமக்கு வெறுப்பும் பகைமையுஞ் சிறிதுமில்லை. சைவசமயத்திற் பிறந்தோர் அவர் சமயத்தையாராய்ந்து பார்த்து அது தமக்குப் பிடிக்காதென்று கண்டால் அவர் வைணவத்துக்கு மட்டுமல்ல, வேறெம் மதத்துக்குச் செல்லினும் சம்மதமே என்றிருக்கலாம். அவர் நேர்மையைப் போற்றவும் போற்றலாம். ஆனல் தாம் பிறந்த சமய இயல்பையேனும் தாம் புகும் பிற சமயத்தின் இயல்பையேனும் சிறிதும் ஆராயாது வேறு சமயம் புகுதல் பெருந்தவறே. அத்தவறு நிகழாதிருக்கும்பொருட்டுச் சமயப் பிரசாரஞ் செய்தல் சைவர்கட்குத் தலைமையான கடமையென்பதை மீண்டும் வற்புறுத்துகின்றோம். கடமை யுணர்ச்சியாலுந்தப்பட்டு உழைக்க முன் வருவரேல், உழைக்கும் வழியும் துறையும் உழைப்புக்கு வேண்டிய இடம் பொருள் ஏவல்களும் எளிதில் ஏற்படும். சில வழிகள் முன்னமே குறிக்கப்பட்டன. இவைபோல்வன பல வுள. சைவர் இனி விதண்டம் பேசுதலிற் பயனில்லை. பணிசெய்ய வேண்டும்.

இனி, நாட்டுக்கோட்டை நகரத்தாருக்கு இது பற்றி ஓர் தனி விண்ணப்பஞ்செய்து இந்தக் கட்டுரையை முடித்தல் தகுதியாம். இவர்கள் தொன்று தொட்டே சைவசமயப்பற்றில் தலை சிறந்து வரு

இவர்க ளீட்டிய பொருளில் எத்தனையோ லக்ஷங்கள் சிவாலயத் திருப்பணிக்குப் பயன்பட் டிருக்கின்றன. இன்றும் இவர்கள் மேற்பார்வையிலுள்ள சிவாலயங் களின் சிரும் சிறப்பும் வியக்கத்தக்கவா யுள்ளன. ஈத் துவக்கும் இன்பம் அறிந்து இசைபட வாழும் இவர் கள் சைவப் புலவர்களை நன்காதரித்து வந்திருக்கிறார் கள். ஆனால் பிற ஜன சமூகங்கள் போலவே இவர்கள் சமூகமும் காலசக்கிரத்தில் அகப்பட்டு வருவதாகக் காண்கிறது, இது பொய்த் தோற்றமென் றேற்ப டின் மிகவும் நன்றே. எதற்கும் முன் எச்சரிக்கை யாகச் சில உண்மைகளைத் தெரிவித்தல் கடன். சைவ சமயிகள் செய்யவேண்டிய அறங்களைப் பொது, சிறப்பு என இருவகையாய்ப் பிரிக்கலாம். இவற்றில் பொது அறங்களென்பவை, நல்லனசெய்து அல்லன விலக்கு முகத்தால் சைவனுவான் எல்லாச் சமயிகட்கும் பயன் படும் வகையிற் செய்யுந் தருமங்களாம். சைவபோதனை செய்யாப் பாடசாலை வைத்தல் தரும வைத்தியசாலை ஏற்படுத்தல் சாலைகள் சத்திரங்கள் அமைத்தல் பசி பிணிமூப்புத் துன்ப முற்றோர்க்குதவல் முதலியன வெல்லாம், பொதுத் தருமங்களாகும். இவைகளைப் பிறசமயிகளுஞ் செய்தற் குரியவர்களே. தத்தம் வசதிகட் கேற்பச் செய்தும் வருகின்றார்கள். இனிச் சைவர்க்குச் சிறப்பறங்களாவன சிவாலயம் சைவ மடம் சைவ சபை இவற்றை என்றும் சீர்கெடாது பாதுகாத்தலும், சிவாகமபாடசாலை, ஆரியவேத பாட சாலை, தமிழ்வேத பாடசாலை, சைவசமய போதனை செய்யும் ஆங்கில பாடசாலை, தமிழ்ப் பாடசாலை என்னு

மிவற்றை யமைத்து வளர்த்து வருதலும் சைவசமய வுண்மை யாண்டும் பரவுதற்பொருட்டுச் சைவ நூல் களைக் காலத்தின் தேவைக் கேற்பப் பலவகைகளில் வெளியிட்டு எவர்க்கு முதவுதலும், சமயப்பிரசாரகரை நியமித்து எங்கும் கட்டுப்பாடான முறையில் சமய போதனை நிகழுமாறு செய்தலும், **தமிழ்க் கல்விசைவக் கல்வியிற்** றேர்ந்த புலவரை மதித்துப் பேணலும் இவை போல்வன பிறவுமாம். இவற்றைப் பிற சமயி கள் தங்கடமைகளாக இதுவரையில் மேற்கொண்டது மில்லை, இனி வருங்காலத்து மேற்கொள்ளப் போவது மில்லை. ஆகவே, இவற்றைச் சைவ சமயிகள் செய்யா தொழிதல் பெருங்குற்றமாம். இவ்வுணர்ச்சி எங்கு நகரத்தா ரினத்தில் மங்கிவிடுமோ என்று சிற்சில சம யங்களில் அச்சமேற்படுகின்றது. சிறப்புத் தருமங்க ளாகிய சிவதருமங்களை இக்காலத்துக்கு வேண்டா தெனவென்று நழுவவிட்டு, உலகர் போற்றிப் புகழும் வகையில் பொதுத் தருமங்களைமட்டுஞ் செய்யும்படி இக்காலத்தில் பலர் அவர்களைத் தூண்டுதல் இயல்பு. அவர்கள் தருமப்பணத்தில் ஒரு பகுதி பெரும்பயன் தாராவழியில் தொலைவது மெய்யே. பழுதுபடாக் கோயில்களை இடித்துக் கட்டுதலும், வாகனாதிகட்கு வெள்ளியும் தங்கமும் வேண்டாவளவு செலவழித்த லும் அளவுக்குமிஞ்சி உற்சவாடம்பரங்கள் பண்ணு தலும் வீண்செலவாகலாம். ஆனால் அதுபற்றியே சிவாலயத் திருப்பணிக்கும் திருவிழாக்கட்கும் செய் யும் செலவெல்லாம் பாழாகின்றதென்று கூறுதல் அடாது. சிவாகம விதிக்கு மீறுமலும் சிவபெருமா

னிலக்கணத்துக்கு மாறுமலும் ஆலயத் திருப்பணி களும் திருவிழாக்களும் எந்நாளும் நடைபெறவே வேண்டும். ஆனால் இங்ஙனம் செய்வது மக்களுக்குள் சைவசமய அறிவையும் சிவபெருமானிடத்து அன்பை யும் பெருக்குதற்காக என்பதை மட்டும் மறக்கக் கூடாது. இந்நெறியிற் செய்யுஞ் செலவெல்லாம் பதி புண்ணியந் தரும். இந் நோக்கமில்லாது வேறு நோக்கங் கொள்ளினும், கொள்ளாவிடினும், செய்யுந் தருமம் சைவர் சிறப்புத் தருமமாகாது. அன்றியும் சைவமுந் தமிழும் தமிழ்த்தாயின இரண்டு மூச்சுப் பைகள் போன்றுள்ளன. என்னவே தமிழ்மொழி யோம்பலும் சைவர் சிறப்புக்கடனே யென்பது போதரும். இவற்றை யெல்லாம் சைவரன்றிப் பிறர் செய்ய முற்படக் கண்டிலோம். ஆதலால் பொது அறங்களைச் செய்து புகழ் பெறுவதை இரண்டாந் தானத்தில் இருத்தி, சைவச் சிறப்பறங்களைச் செய்யும் வகையிற் செய்து புகழும் சிவபுண்ணியமும் பெறுவ தைத் தலைமைத் தானத்தில் வைத்தல் நகரத்தார் நன்மைக்கும் வேண்டிய தொன்றும்.

சிறப்பறங்களைப் போதிய அளவு செய்தாய்விட் டது, இனிப் பொதுத் தருமங்களைப் பேணினால் போதுமென்று எவருங் கருத இடமில்லை. பாடல் பெற்ற எத்தனையோ சிவாலயங்கள் இன்னும் மிகப் பழுதுபட்டுக் கிடக்கின்றன. பல சிவாலயங்களில் நித்திய பூசைக்கே நிபந்தமில்லை. சிவவேதியர் செம் மையுறற்கு வேண்டிய வசதிகளில்லை. தமிழ்வேத ஆராய்ச்சி செய்தார் சிலர் பலர் இருப்பினும் அவ்

வாராய்ச்சி இன்னும் நூல் வடிவமாக வெளிவரவில்லை. சைவர் பலர் வீட்டில் தேவார திருவாசகங் காணக் கிடையாது: சமய அமைப்புகளெல்லாம் நிலைதளர்ந் துள்ளன. அறியாமை மிகுந்துள்ளது. அறுபான் மும்மை நாயன்மார் திருவீதிவலம் வரின் அவர்களைப் பார்த்து "இவ்வறுபத்து மூன்று பிள்ளைகளைப்பார்வதி பெற்றெடுத்தாள். இன்னுமொரு பிள்ளைக்குத் தவங் கிடக்கிறாள்" என்று பலபேர் இன்றும் பேசுகின்றார் கள். "வள்ளிக்கும் தெய்வயானைக்குஞ் சக்களத்தி போராட்டம்" என்பது போன்ற சுவடிகள் வெளிக் கிளம்புகின்றன. சமயகுரவர் சந்தான குரவர் பெயரறி யாத நீறுபூசிகள் இலக்கக் கணக்கிலுள்ளார்கள். தமிழ்ச் சைவ நாட்டின் கதியே யிப்படி யுள்ளது. இதன் நிலைமையைச் செம்மைப் படுத்துதற்கும், மேலே கூறியாங்கு இந்தியாவின் பிறபாகங்களிலும, உலகெங்கும், திருநீற்றொளி விளங்கக் காண்டற்கும் இன்னும் கோடிக்கணக்கான பொருளும் எண்ணிலா மெய்த்தொண்டர்களும் பல தலைமுறை யூழியமும் தேவையாயுள்ளனவன்றோ? தம் முன்னோர் சிறப் பியல்பைப் போற்றி இப்பெருந் திருத்தொண்டு செய்வதைத் தமது குறிக்கோளாக நகரத்துப் பிரபுக் கள் கைக்கொண்டால்சீரும் சிறப்பும் சிவபுண்ணியமும் வாராவோ? பொது அறமேபோது மென்று கருதத் தலைப்படுவார்களாயின், அவர்கள் தஞ் சிறப்பியல் பிழந்து பிற ஜனசமூகங்களோடு ஒரு சாதாரண சமூக மாகக் கணிக்கப்படுவர். அது அவர்க்குப் பெருநட்ட மாம் என்பதைத் தனவைசிய அறிஞர்கள் உய்த்து

ணர்வார்கள் என்று நம்புகின்றோம். வெள்ளம் வருமுன் அணைபோடுதலே அறிவுடைமைக் கழகு. அவர்கள் சமூக மேம்பாட்டிற்குக் காரணம் அவர் தம் முன்னோர் ஈட்டி வைத்திருக்கும் சிவ புண்ணியமே யென்பதை மறத்தலாகாது.

சைவர்கள் தங்கள் சமயக்கடமைகளை நிறைவேற்றி யின்புற வேண்டுமாயின் அவருள் மகளிராயுள்ளாரும் சைவப்பற்றும் சமயத் தொண்டில் பெருவிருப்பங் கொண்டவர்களாயிருத்தல் வேண்டும். இவர்கள் துணையில்லா விடத்துச் சைவ ஆடவர் செய்து முடிக்கக் கூடியது மிகச் சிறியதே யாகும். சத்தியின் துணையின்றிச் சிவம் உபகரிக்குமா றில்லையன்றோ? ஆதலால் இவர்களுள் பலர் மங்கையர்க்கரசியாராய் மாண்புறல்வேண்டும். **மங்கையர்க்கரசியார்** தோன்றினால் **சம்பந்தரும் குலச்சிறையாரும்** தோன்றுதல் ஒருதலை. அதற்கேற்ற கல்வியையும் நாகரிகத்தையும் சைவ சமூகம் தேடித்தரும் கடப்பாடுடையது.

இதுவரையில் எழுதியவாற்றால், **சைவசமயம்** சமயங்கட் கெல்லாந் தாயகமு நாயகமுமா மென்பதும், ஈடுமெடுப்புமற்ற சில சிறப்புக்களையுடைய தென்பதும், அச் சமயத்திற் பிறந்தார் சிலர் அதனுண்மையைப் பிறழ உணர்ந்தும் அடியோடுணராதும் பல தீங்குகட் காளாயினரென்பதும், அதனாற் சமய அமைப்புகளும் சைவ சமூகமும் சீர்கெட்டிருக்கிற தென்பதும், இவைகளைத் தமிழ் நாட்டில் முன்னர்த் திருத்தி யமைத்துக்கொண்டு, பின்னர் பிற இடங்

களிலும் சைவ வாசொளி பரப்புதல் வேண்டுமென்ப தும், அதற்கேற்ற சாதனங்க ளிவையிவை யென்ப தும், இச்சமயத் திருத்தொண்டில் நாட்டுக்கோட்டை நகரத்தார்க்குச் சிறப்புவகையிலுள்ள பொறுப்புக ளிவை யென்பதும், சமயம் தமிழ்மொழி, தாய்நாடு என்பதை இவற்றின் முன்னேற்றத்திற்குச் சைவ ஆடவர் சமய வழியில் தொண்டு செய்யும் போது சைவ மகளிரும் துணைநிற்றல் இன்றியமையாததா மென்பதும் பிறவும் எடுத்துரைக்கப் பட்டன. அறி ஞர்கள் இவ்வுரைச் செய்யுளில் காணக்கூடிய சொற் குற்றம் பொருட் குற்றங்களைப் பொறுத்து எழுதின நோக்கம் நன்மையா யிருப்பதைமட்டும் நாடி ஆதர வோடாராய்ந்து, சமயத் தொண்டு சிறப்பாய் நடை பெறற்கான வழிகளைத் தாமுங் கண்டறிந்து பிறர்க்கு முணர்த்தி யுபகரிக்கத் திருவருள் துணைசெய்வதாக.

முற்றிற்று

சிவகாமி விலாச அச்சுக்கூடம், சென்னை.

உ

திருச்சிற்றம்பலம்

# * சிவசின்னங்க ளணிவதேன்?

" குறிகளும், அடையாளமும், கோயிலும்,
நெறிகளும், அவர் நின்றதோர் நேர்மையும்,
அறிய ஆயிரம் ஆரணம் ஓதினும்,
பொறியிலீர்! மனம் என்கொல் புகாததே?"

திருநாவுக்கரசர்.

சிவசின்னங்களை அணிதல் சமய வாழ்க்கைக்கு அவசியமாதலை அறியாது, இந்நாளில் நம்மவரிற் பலர் அவற்றினிடத்து அருவையும் அசட்டையும் காட்டி வருகின்றனர். இந்துக்களின் ஜனத்தொகையும், அவர் தம் சமய ஒழுக்கமும் குன்றிவருமிந்நாளில், எவர்களும் கவனிக்கத் தக்க நியாயங்கள் சிலவற்றைக் காட்டுதலே இந்தக் கட்டுரையின் கருத்து. இங்கு, சிவ சின்னங்கள் என்று குறிக்கப்படுவன விபூதியும் உருத்திராக்கமுமாம். இப்பேருக்கு, " மங்களத்தைத் தரும் அடையாளங்கள் ' 'மங்களமாகிய அடையாளங்கள் ' ' சிவனை அடைதற்குரிய அடையாளங்கள் ' ' சிவனணியும் அடையாளங்கள் ' என்றெல்லாம் பொருள் விரிக்கலாகும. இச்சின்னங்களை நாமணிய வேண்

* இவ்வியாசத்தில் வரும் வடமொழி மேற்கோள்கள், பல ஆன்றோர்கள் தமிழிலெழுதிய சமய நூல்களிலிருந்து எடுத்துக் காட்டப்படுபவை.

டியதற்குப் பலதிறப்பட்ட காரணங்கள் உள. அவற்றிற் சிறந்தவை சில இனிக் காட்டப்படும்.

(1) ஒரு நாட்டினர் தொன்று தொட்டே ஒரு ஆசாரத்தைக் கைக்கொண்டு வந்திருப்பாராயின், அது தீயதென்றாவது பயனற்றதென்றாவது மெய்ப்பிக்கப் பட்டாலன்றி, அதைக் கைவிடுதல் நீதமன்று. பிற நாட்டறிஞரும் அவ்வாறு செய்தலை மெச்சுவதாக அறிகிலம். இந்நாட்டில் விபூதி உருத்திராக்க தாரணம் எக்காலத்தில் ஏற்பட்டதென்று கணிக்க முடியாத பண்டை வழக்கமாயிருந்து வருகிறது. அதை மேற்கொண்டொழுகுவோர் சாமானிய மக்கள் மட்டுமல்லர். வைதிக சம்பந்தமுள்ள சான்றோரனைவருமே யாவர். சைவர்களும் சுமார்த்தர்களும் இன்றுவரை விபூதி உருத்திராக்க தாரணமுடையராயிருத்தல் வெளிப்படை. சில நூற்றாண்டுகட்கு முன்வரையில், வைணவ சோதரர்கட்கும் இத்தாரணமே இருந்து வந்த தென்பது சமய சாத்திர வல்லோர் பலரது துணிபு. "மாதவாசாரியரும் சூதசங்கிதையின் தீபிகை என்ற வியாக்கியானத்தில், பஸ்மருத்ராக்ஷதாரணமானது தமக்குஞ் சம்மதமென்று காண்பித்திருக்கிறார்."[1] வேதத்திலுள்ள இந்நீறு, 'வானவர் மேலது' 'முனிவ ரணிவது' 'தக்கோர் புகழ்வது' தலைவனே அணிவது. இத்துணைப் பழமையான இந்த சிஷ்டாசாரமானது, மேல்நாட்டு நாகரீக வெள்ளத்தாற்றானும் முற்றும் அடித்துக்கொண்டு போய் விடப்படவில்லை; இமசேது பரியந்தம் பலகோடி மக்களிடம் இன்றளவும் விளங்கிக் கொண்டிருக்கின்றது. இத்

1 ஸ்ரீ தியாகராஜ தீக்ஷிதர்.

தகைய ஆசாரம் தீயதென்றாவது, பயனற்றதென்றாவது இன்னும் எவராலும் மெய்ப்பிக்கப்படவில்லை. மெய்ப்பிக்க ஒருநாளும் முடியாதென்றும் பின்னர்க் காட்டப்படும். ஆதலால், விபூதி உருத்திராக்க தாரணம் விதிக்கப்பட்டுள்ள சமயத்தைச் சார்ந்த ஒவ்வொரு இந்துவும், தன்மதிப்புடையனாயின், தான் எந்நிலையில் நின்றாலும் இத்தாரணத்தை நம் நாட்டுத் தீதிலாப் பண்டை ஆசாரம் என்னும் ஒரு காரணங்கொண்டே மேற்கொள்ளும் கடப்பாடுடையனாவன்.

(2) அன்றியும் சிவசின்னங்களை அணியுமாறு வேதம், ஆகமம், புராணம், இதிகாசம், மிருதி, சூத்திரம், தோத்திரம் முதலிய சமய சாத்திரங்கள் யாவும் மிகப் பெரிதும் வற்புறுத்துகின்றன. சமயநூல்வல்ல சான்றோர் சமன் செய்து சீர்தூக்குங் கோல்போலிருந்து செய்துள்ள அரிய ஆராய்ச்சிகளால் வைதிக சமய நூல்கள் விபூதி உருத்திராக்க தாரணத்தை விதித்துப்பாராட்டுவதுபோல் வேறெந்த சின்னத்தையும் விதித்துப் பாராட்டவில்லை என்றும் புலப்படுகின்றது. வைதிக கிரியைகள் செய்தற்கும் ஞானோபதேசம் பெறுதற்கும் ஈசுவர பூசை இயற்றுதற்கும் விபூதி உருத்திராக்கதாரணம் இன்றியமையாததென்று அந்நூல்கள் உறுதி கூறுகின்றன. அன்றியும், சமய சின்னங்களின்றி எந்த பெரிய சமயமும் உலகில்பலர்க்குப் பயன் தருவதாய் நிலவ முடியாதென்பதும் மறுக்கவொண்ணா உண்மை. ஆதலால், நஞ்சமய நூல்களில சிறிது பற்றுடையோரும், அவை சிறப்பித்து விதிக்கும் தீதிலா இச்சின்னங்களைப் புறக்கணியாது கைக்கொள்ள வேண்டியவராகின்றனர்.

(3) இச்சின்னங்களை அணிதலால் இம்மையே உட

னுக்காய நலங்களும் பல கிடைக்கும் என்று சுருதி கூறுகின்றது. "ருத்திராக்கினியின் மேலுள்ள வீரியம் பஸ்மம் எனப்படும். ஆதலின், எக்காலமும் விபூதி தரித்தவன் வீரியவான்." "பஸ்மம் அக்கினி சம்பந்த முற்றிருத்தலால் பஸ்மநிஷ்டனுடைய தோஷங்கள் ஒழிகின்றன." "பஸ்மத்திலே ஸ்நானஞ்செய்த தூயோன் பஸ்மநிஷ்டன் எனப்படுகிறான்[1]" திருநீறு, 'சுந்தரமாவது' 'காணவினியது' 'கவினைத் தருவது' 'பூசவினியது' 'உடம்பிடர் தீர்க்கும் இன்பந் தருவது.' உருத்திராக்கமும் அவ்வாறே. மருத்துவ குணமும் இவ்விரண்டிற்கும் உண்டென்ப.[2] ஆதலாலும் இவ்வாசாரம் கைவிடற்பாலதன்று.

(4) இவ்விம்மைப்பயன்களேயன்றி, சர்வ பாப நாசமும் சர்வ மங்களப் பிராப்தியும் இச்சின்னதாரணத்தால் கிடைக்கும் என்று உபநிடதாதி உயரிய நூல்கள் தற்கால அறிவு திகைத்து ஐயப்படும் வண்ணம் விரிவாய்ப் பேசுகின்றன. அவ்வாற்றாற் பலன் பெற்றார் சரிதங்கள் பலவும் சாற்றுகின்றன.[3] இத்தகைய பலன்கூறும் ஆப்தமொழிகளைக் கொள்ளுமாறு கொள்ளமாட்டாதார், இவற்றில் ஐயமுற்று ஒருபுடை ஒதுக்கினும் ஒதுக்குக. இவர்களும் மற்றெவர்களும் கூர்ந்து கவனித்தற்குரிய குறிப்புகள் இச்சின்னங்களில் உள என்பதுமட்டும் உணரப்படின், அவ்வுண்மையொன்றே கருதி நவீன மதியினரும் அவற்றை நாடியணிதல் கூடும். ஆகவே, விபூதி உருத்திராக்கங்கள்

---

1 பிருஹஜ்ஜாபாலம்.

2 ஸ்ரீ தடிசைக்கிழார். அ. சிதம்பரனார் எழுதிய 'உருத்திராக்க விளக்கம்' காண்க.

3 உதாரணம்: ஜாபால உபநிடதம், ஸ்காந்த புராணம்.

'குறிகளும் அடையாளமு'மாய்க் கொளப்படுந் தன்மையை இனி விளக்கத் தொடங்குவோம்.

விபூதி

முதலில் விபூதிதாரணக் கருத்தை விளக்கலாம். பிறவி நோயைத் தீர்க்கும் மணிமந்திர ஔடதங்களில் விபூதியே ஔடதமாகுமென்ப. "ஐசுவரியத்தைக் கொடுக்குங் காரணத்தினால் பூதி எனவும், சமஸ்தபாவங்களையும் போக்குதலால் பஸ்மம் எனவும், பிரகாசித்தலால் பசிதம் எனவும் ஆபத்தைப்போக்குதலால் க்ஷாரம் எனவும், பூதப்பிரேத பிசாச பிரஹ்மராக்ஷஸ அபஸ்மார பவபீதிகளினின்று காத்தலால் ரக்ஷை எனவும், விபூதிக்குத் திருநாமங்கள் போந்தன." 1 (விபூதி-மேலான ஐசுவரியம்). இதற்குத் தமிழ்த் திவாகர நிகண்டுகளில் காணப்படும் மற்ற பெயர்கள், திருநீறு, காப்பு, பொடி, பற்பம், ஹோமப்பொடி, புண்ணிய சாந்தம், வெண்டாது என்பனவாம். ஆயினும், விபூதி திருநீறு, என்னும் இரண்டு பெயர்களே தமிழுலகில் பெரிதும் வழங்குவன.

இவ்விபூதியை அணியுமாறு ஆரிய வேதம் எவ்வளவு வற்புறுத்துகின்றதென்பதை உணர்ந்த இரண்டு பிரமாணங்கள் சாலும்: (i) "சத்தியம், தருமம், நன்மை, பூதி இவைகளிலிருந்து தவறுதே" 2 (ii) "பஸ்மமில்லாத நெற்றியைச் சுடு". 3 இவைபோன்ற சுருதி வசனங்கள்

1 பிருஹத் ஜாபாலம்.—'தேவார வேதசார'த்தில் பிரமாணிக்கப் பட்டது.

2 தைத்திரி யோபநிடதம்.

3 பிருஹஜ்ஜாபாலோபநிடதம்.

பலவுள. இவற்றைப் பின்பற்றி முழங்கும் மற்றை நூல்களின் வாக்கியங்கள் எண்ணில. விபூதியின் வகைகளையும், உண்டாகும் விதங்களையும், தரிக்கும் விதிகளையும் வேதங்களும் ஆகமங்களும் விரிவாய்க் கூறுகின்றன. சுருங்கச் சொல்லின், ஞானசம்பந்தப் பெருமான் திருநீற்றுப்பதிகத் தமிழ் மறையில் கட்டுரைத்த வெல்லாம் ஆரியமறையும் அறைவனவே என்னலாம்.

ஆனால் இங்கு விளக்கப் புகுவது சிவசின்னங்கள் குறிகளாந்தன்மையையே யாதலால் அவற்றின் ஏனைய பல சிறப்புகளை விளக்க இடனின்று. ஆதலின், மகாபாரத அநுசாசநிகபருவத்தில் வரும் வசனமொன்றைத் துணைக்கொண்டு மேற்செல்லுவோம். அது, "உமையே! ரக்ஷணத்துக்காகவும், மங்களத்துக்காகவும், சுத்தத்துக்காகவும், அடையாளத்துக்காகவும், பக்தர்களுக்கு நான் பஸ்மத்தை முன்காலத்தில் கொடுத்தேன்" 1 எனவுள்ளது. மந்திரமாவதும், முத்திதருவதும், சுத்தமதாவதுமாயுள்ள திருநீறும் கண்டிகையும் அடியார்கட்கு அடையாளமென்று பண்டைப் பிரமாண நூல்களாலும் ஸ்ரீ திருமூலயோகிகள் ஸ்ரீ சங்கராசாரியர் முதலிய ஆன்றோராலும் நன்கு கூறப்பட்டுள்ளது. எவ்வாறு விபூதி அடையாளமாகின்றது?

சுவானுபூதிச் செல்வராகிய ஸ்ரீ சுந்தரசுவாமிகள், சாதனமாக வேதத்திற் கூறப்பட்ட விபூதியைப்பற்றிப் பின்வருவாறு எழுதியுள்ளார்:—

'ஒருவன், குண்ட மண்டபாதிகளை அமைத்து, அக்

---

1 'விபூதி ருத்ராக்ஷதாரண நிரூபணத்'தில் பிரமாணிக்கப்பட்டது.

கினியை வளர்த்து, அதில் பரமசிவத்தை மந்திராதிகளினால் பாவித்து, தத்துவ ஓமங்கள் பண்ணி, கோமய பிண்டங் களைச் சிவ பிண்டங்களாக மந்திராதிகளாற் பாவித்து, ஓமஞ்செய்ய, அச்சிவ பிண்டத்திற்கும் முன் அக்கினியில் பாவித்த பரமசிவத்திற்கும் மந்திர விசேடத்தால் ஏற்படும் ஐக்கியத்தைப் பரம குருமுகமாக விசாரித்து, அவ் விபூதி யைப் பரமசிவத்துக்கு வேறில்லாததாக எண்ணி, உத் தூளன திரிபுண்டரங்களாகத் தரித்திட, சகல பாவங்களும் நீங்கி, மேலான விபூதியின் பொருளை யடையத்தகும் சித்த சுத்தி யுடையவனாய்ப் பவிப்பான்.' 1

திருநீறு விளக்கும் விதத்தை உற்றுப் பார்க்கில், பெரிதும் வியக்கத்தக்க உண்மைகள் சில புலனாகும்: பசு வின் மலமாகிய சாணத்தை மந்திர பூர்வமாக ஏற்று உலர்த்தி நெருப்பிலிட்டு நீற்ற, உயர்வகைத் திருநீறுண்டாகின்றது. பசு என்னும் பெயர் ஆன்மாவையும், மலம் என்னும் பெயர் அதை அநாதியே பந்தித்துள்ள ஆணவ கன்மம் மாயை என் னும் மும்மலத்தையும் குறிப்பது எவர்க்குந் தெரிந்ததே. இனி, ஆன்மாவின் மலமானது ஞானசாரியன் அருளும் ஞான நெருப்பினால் வலியிழந்தொழியும் என்பதும், ஒழிய வே ஆன்மா சுத்தமடைந்து சிவகுணம் பதியப்பெற்று ஆனந்த மயமாய்ப் பிரகாசிக்கும் என்பதும் சிவஞான சாத்தி ரங்களில் செம்மையாய் விளக்கப்படும். விபூதி தாரண முக் குறிகள் மும்மலநாசங்குறிக்கும் என்னலாம். 1 வெண்மை

1 சுவாநுபவ ரசமஞ்சரி.

1 அவை பிரணவத்தின் மூவெழுத்து, மூவுலகு, முச்சத்தி, மூவ்வேதம், மூவக்கினி முதலிய திரிபுடிகளைக்குறிக்கும் என்று உபநிடதம் கூறும்.

சுத்தத்திற் கறிகுறி என்பதும் வெளிப்படையே. இவ்வாறு, மூவகைத் துரிசுடனிருந்த ஆன்மா துரிசற்றுச் சுத்த சிவத்தோடு அத்துவிதமாய்க் கலக்கும் அருநெறியையன்றோ திரிபுண்டர விபூதிதாரணம் குறிக்கின்றது. ஒரு சமய சின்னம் சுட்டக்கூடிய குறிக்கோள் இதனிலும் சிறந்ததொன்றுண்டோ? மற்றுஞ் சில உண்மைகளும் இச் சின்னத்தின் மூலமாய் நினைப்பூட்டப் படுகின்றன. அவை யாவன :

(i) உலகவாழ்க்கை அநித்தியம் என்பது. நாடோறும் "முடிசார்ந்த மன்னரும் மற்றுமுள்ளோரும்முடிவிலொரு பிடிசாம்ப ராய் வெந்து" போவதைக் காண்கிறோம். சர்வசங்கார காலத்தில் எல்லாப் பிரபஞ்சங்களும் நீற்றின் மயமே அடைகின்றன.

(ii) இத்தகைய நீறானது எல்லாவற்றின் வீரியமாகும். 'எரிபோல்மேனிப்பிரானும்' 'மெய்யெலாம்வெண்ணீறு சண்ணித்த மேனியனும்' ஆகிய பரமசிவனது சொரூப அறிகுறியும் அதுவே.
'பராவணமாவது'ம் நீறே. அஃது எக்காலமும் அழியாதது.

(iii) பசுவின் மலம்நீறிய பின்னரே,—பிரபஞ்சப் பற்றைவிட்ட பின்னரே,—சீவன் சிவனாவன்.

இவ்வாறு விபூதி தாரணமானது, உத்தமமான குறிக்கோளையும், உயரிய கருத்துக்களையும் நினைப்பூட்டும் உலகறிந்த சமய சின்னமாய்க் கொள்ளுமாறு அமைந்துள்ளது. ஆதலால், திருநீற்றைக் காணுந்தோறும் உடம்பில் அணி

யுந்தோறும் அது சுட்டும் பொருளையும் உள்ளூற நினைப்பவர்கள் மேன்மேலுந் தூய்மையுடையராய்ச் சமயநெறியில் மேம்படுவர் என்பது திண்ணம்.

இவ்வளவு கருத்துக்களையும் தற்கால குயுக்தியால் கற்பித்து விட்டோமில்லை. யுத்தியே என்று ஒருவர் சாதிக்கினும் அது சாத்திர சம்மதம் பெற்ற யுத்தியே யாதலின் தழுவத்தக்கதே என்க. உண்மைப் பெரியோர்க்கும் இஃது ஒப்ப முடிந்ததே என்றுங் காட்டுவோம். திருநீறு பரிசுத்தத்திற் கடையாளமென்பது,

" தூயவன், தூய வெண்ணீறு மேனிமேல்
பாயவன்.............................." (1)

" தூயவன் காண், நீறு துதைந்தமேனித்
துளங்கும் பளிங்கனைய சோதியான் காண்" (2)

என்னுந் தமிழ்மறை உரைகளில், இறைவனின் தூய தன்மை கூறிய வுடனே திருநீற்றின் உத்தூளனங் குறிக்கப்பட்டிருப்பதால் உய்த்துணரக் கிடக்கின்றது.

" மாசிலாத மணிதிகழ் மேனிமேல்
பூசு நீறுபோல் உள்ளும் புனிதர்கள்"

என்னும் பெரிய புராணத் திருவாக்கும் இதனை ஆதரிக்கும்.

புறந்தூய்மை நீரானும், நீறானும் அமையும். அது வாய்மையால் வரும் அகந்தூய்மை யுள்வழி சிறக்கும்.

திருநீறணிவதன் குறிப்பென மேலே விளக்கிய கருத்தை மெய்ஞ்ஞானியாகிய ஸ்ரீ சிதம்பர சுவாமிகள்,

---

1. சம்பந்தர். 2. அப்பர்.

"ஆதிபகவன் ஞானவடி வழலிற் பூத்து, நித்தியமாய், [ய்,
அணிந்தோர்தமக்கு வசிகரமாய், அருந்திறனோர்கட் காரமுதா
நீதியறியும் பசுமலத்தை நீக்குமோருநற் குறிகாட்டி,
நிகழ்பேரின்பக் கடலூட்டி நின்ற புகழ் வெண்டிருநீறே"*

என்று அருளிச் செய்துள்ள அடிகளில் இனிது காணலாம். முன்னர்க் குறித்த ஸ்ரீ சுந்தரசுவாமிகளும் இதனையே மிக விரிவாக ஒரு பிரகரணத்தில் விளக்கி, "ஜகத்துக்கு அழியுந்தன்மை என்ன, வஸ்துவுக்கு அழியாத்தன்மை என்ன, சுத்தத்தன்மை என்ன, பசுவின் மலந் தகிக்கப்பட்டுச் சித்தித்திடுதலென்ன, இவ்வளவும் விபூதியைக் கையி லெடுத்த மாத்திரத்தில் விவேகிகளுக்குத் தெரிய வரலாம். ஆகையால் அதற்கு அவ்வளவு மகிமை கூறியது" என்று முடிக்கின்றார்கள்.† "பேணியணிபவர்க் கெல்லாம் பெருமை கொடுப்பது நீறு"‡ என்னுந் திருவாக்கு முக்காலும் மெய்ம்மையே.

## II

இரண்டாவது, உருத்திராக்கத்தைப் பற்றிச் சிறிது ஆராய்வாம்; "உருத்திரருடைய கண்ணினின்று பிறந்தவை உருத்திராக்ஷம் என உலகத்திற் கூறப்படுகின்றன." *ருத்திரன் + அக்ஷம் என்னு மிரண்டு சொற்களாலாகிய இப் பேருக்கு வடநூல் வல்லார்† கூறும் பொருள் பின்வருமாறு: "(ருக்கை) சம்சார துக்கத்தை (திரவிப்பதால்)

* திருப்போரூர் சந்நிதிமுறை: காப்புப்பருவம்.
† சுவாநுபவ ரசமஞ்சரி.
‡ சம்பந்தர்.
* ஜாபால உபநிடதம் ('தேவார வேதசாரத்'தில் காண்க.)
† கோடகநல்லூர்—ஸ்ரீ சுந்தரசுவாமிகள்.

நீக்குவிப்பதால் (ருத்திரம்) அதுவாயுள்ள (அக்ஷம்) கண், என்னப்படும்" உருத்திராக்ஷமாலைக்கு, அக்ஷமாலை (அக்குமாலை), கண்டிகை (கண்டி), தாழ்வடம் முதலிய பெயர்கள் தமிழ் நூல்களில் வழங்குகின்றன. இஃதும் வேதம் முதலிய பிரமாண நூல்களால் விபூதியோடு சேர்த்து வற்புறுத்தி விதிக்கப்பட்டதொரு சின்னமே. விபூதியைப் போலவே இஃதும் ஆன்றோ ரநுஷ்டானத்திலும் இருந்து வருகின்றது. சிவபெருமானே "கண்டியிற்பட்ட கழுத்துடையோன்" என்று தமிழ்மறையில் பேசப்பட்டுள்ளான். விபூதியணிதற்குக் கூறிய நியாயங்கள் யாவும் இதற்கும் பொருந்தும். இங்கு விளக்க விரும்புவது இதனை ஒரு சமயக்குறியாக, அடையாளமாக, கொள்ளுமிடத்து, அது காட்டும் கருத்தையே.

இஃது உருத்திராக்க வரலாற்றைக் கவனிக்க வெளியாகும். இவ்வரலாறு முதன் முதல் பூசண்ட முனிவருக்குக் காலாக்கினி ருத்திர பகவானால் உபதேசிக்கப்பட்டதென்று உபநிடதம் உரைக்கும். இதன் சாரமாவது, திரிபுரசங்காரத்திற்காகச் சிவபெருமான் தனது திருக்கண்களை மூட, அவைகளிலிருந்து வெளிப்பட்டுப் பூமியில் விழுந்த நீர்த்துளிகள், யாவர்க்கும் அருள்புரிய வேண்டும் என்று கருதிய இறைவன் சங்கற்பத்தின்படி, தாவரமாகுந் தன்மையடைந்து உருத்திராக்க மரங்களாயின என்பதாம்.

இச் சரிதத்திலிருந்து இரண்டு உண்மைகளைப் பெரியோர் நமக்குணர்த்துகின்றனர். அவையாவன:—

(1) முப்புரங்களை எரிக்கும்பொருட்டு முதல்வன்

உருவத் திருமேனியோடிருந்து ஞானக்கினி சுபாவமான தனது திருநேத்திரங்களை இயக்கினன் என்பதால், ஆண்டவன் ஆன்மாக்களின் பக்குவத்திற்கேற்பத் திருமேனி தாங்கிவந்து அவற்றின் மும்மல காரியங்களைத் தனது திருவருள் நோக்கால் நசிக்கப் பண்ணுவன் என்பதொன்று. இக்கருத்து விபூதி தாரணத்தின் உட்கருத்தோடு இயைபுடையதே.

(2) மற்றொரு சீரிய கருத்து மேற்சொன்ன ஸ்ரீ சிதம்பர சுவாமிகள் திருவாக்கொன்றால் இனிது விளங்குகின்றது.

"அரிய மனமும் அறிவரிதாய், அருவாய், நிறைவாயிருந்தும்,முனமமரர் திரிபுரஞ்செய் குறை அறையக்கேட்டு முக்கண் வழிக் [ர் கரியகளச் செம்புயல் கருணைபொழியப் பெருகுங் கடல் பிறந்து கருதுமடியார் பவக்கடலைக் கடத்து மணியைத் துதித்திடுவாம்"*

என்பது அத்திருவாக்கு. இதனால், ஆண்டவன் மனதுக் கெட்டா மாண்பினனும், அருவனும், பூரணனுமானவனயினும், திரிபுரங்கள் தமக்குச் செய்த இன்னலைப்பற்றி முறையிடத் தேவர்கள் தன்னை அடைந்தகாலத்து, அவர்கள்காண முக்கண்ணும் நீலகண்டமும் உடைய மூர்த்தியாய் விளங்கி நின்று, அவர் தம் குறைகேட்டவழி, பெரிதுமிரங்கி அருட்கண்ணீர் பொழிந்தான் என்று அறிகின்றோம். ஆகவே ஆண்டவன் பேரருளுடையான் என்னுமுண்மை புலப்படுத்தப் பட்டதென்க. இறைவன் கண்களினின்று விழுந்த நீர்த்துளிகள் உருத்திராக்க மரங்களானது

---

*திருப்போரூர் சந்நிதிமுறை: காப்புப்பருவம்.

"சகலருக்கும் அனுக்கிரகம் செய்வதற்காக" என்று உபநிடதங் கூறுவதும் இதனை வற்புறுத்தும்

இதனால், திருநீறணிதல் தூய்மை நாட்டத்திற் கறிகுறியாயவாறுபோல, உருத்திராக்கமணிதல் அருட்குண வளர்ச்சிக் கடையாளமாகும் என்று கொள்ளுதல் ஏற்புடைத்தாம். ஆறறிவுடைய மக்கள் பெருமுயற்சி செய்து அடைய வேண்டிய குணநலங்கள்யாவும் தூய்மை, அன்பு என்னும் இரண்டிலடங்கும். இவற்றைத் தமது வாழ்க்கைக் கப்பலை ஓட்டும் மாலுமிகளாகக் கொண்டு சம்சார சாகரத்தில் பயணஞ்செய்யும் சீவர்கள் முத்திக் கரையைத் திட்டமாயடைவார்; அவ்விருகுண பூரணனாகிய முதல்வனோடொன்றிப் பொன்றா இன்ப முறுவர்.

தம்மையும் தலைவனையும் மறந்துழலும் சீவர்கட்கு, உண்மைப் பொருளினியல்பையும், உயிரடைய வேண்டிய பேற்றின் தன்மையையும், அதற்குரிய சாதன இயல்பையும் எளிதில் அடிக்கடி நினைப்பூட்டத்தக்க சமயசின்னம் அத்தியாவசியமே. இதுகாறும் கூறியதிலிருந்து விபூதி உருத்திராக்கங்கள் அத்தகைய ஒப்புயர்வற்ற சின்னங்களாய் அமைந்துள்ளன என்று தெரியவரும். சமய அநுட்டானங்களும் அடையாளங்களும் எவ்வளவு உயரியனவாயிருப்பினும், கருத்தறியாது அநுட்டிக்கப்பட்டுவரின், நாளடைவில் மக்களை நல்வழிப்படுத்தும் ஆற்றலை இழந்து, நிலைமாறி, குருட்டு வழக்கமாக இழிந்து, பின்னர் மறைந்துபோமியல்பினவாம். பல காரணங்களால் இவ்வாறு இக் கருத்துமறதி மக்கள்பால் நிகழும்போதெல்லாம் ஆன்றோர் வெளிப்பட்டு உண்மையை நினைப்பூட்டி எம்

மஞேரை உய்விப்பர். விபூதி உருத்திராக்க தாரணத்தைக் கேவலம் ஒரு சமய சின்னமாகமட்டும் மதிக்க ஒருப்படு வோரும் அச்சின்னம் நினைப்பூட்டும் சீரிய குறிக்கோளைக் கருதி அத்தாரணத்தைக் கைவிடாது பொருளுணர்ந்து அநுட்டித்தல் கடமையாம். அடிக்கடி நமது குறிக்கோ ளுணர்த்தப்படுதலால் நமது கரணங்கள் நல்வழிச்செல்லல் அநுபவசித்தமே. இப்போது, 'சிவ சின்னம் அணிய வேண்டுவதேன்' என்னும் வினவிற்கு, 'சிவன் சிவனுதற் பொருட்டே' என்று விடை கூறலாம்.

## III

இந்தக் கட்டுரையை இதனேடு முடித்து விடலாமா யினும், விபூதி உருத்திராக்க தாரணத்தோடு சார்த்திக் கைக்கொள்ளப்படும் பிறிதொரு சின்னத்தையும் சிறிது விளக்குதல் இழுக்காகாது. பலர் நெற்றியிலணியும் விபூதி யின் மேல் சந்தனப் பொட்டொன் றிடுகின்றனர். இது வேதாகமாதிகளில் விதிக்கப்பட்டிருப்பதாகத் தெரிய வில்லை. எவ்வாறே உலக அநுஷ்டானத்தில்மட்டு மிருந்து வருகிறது. அதன் உண்மை வரலாற்றைக் கண்டு கூறும் பொறுப்பை மதிநுட்ப நூலோடுடைய பெரியார்பால் விடுத்து, இதை எழுதுவோரது சிற்றறிவிற்கெட்டும் இரண்டு ஊகங்களைமட்டும் இங்குக் குறிப்பிடலாகும்.

(i) தேவாதிதேவனுகிய சிவபெருமான் நெற்றியிற் கண்ணுடையான்; "நுதல்விழிநாட்டத் திறையோன்." அவனை வணங்குவோர், சாதனவிபூதியை அணிவது அவ னது மேனியிற் பூத்த மஹாவிபூதியை நினைப்பூட்டுதல்

போல, நெற்றியிற் பொட்டிடுதல் மலநாசம் பண்ணும் ஞானக்கினி ரூபமாகிய நெற்றிக் கண்ணையுடையான் எம்மிறைவன் என்பதை நினைப்பூட்டுவதாகலாம்.

(ii) அன்றியும்,

"விந்துவு நாதமும் மேருவி லோங்கிடற்
சந்தியி லான சமாதியிற் கூடிடும்
அந்தமி லாத அறிவி னரும்பொருள்
சுந்தரச் சோதியும் தோன்றிடுந் தானே"

"நெற்றிக்கு நேரே புருவத் திடைவெளி
உற்றுற்றுப் பார்க்க ஒளிவிடு மந்திரம்
பற்றுக்குப் பற்றாயப் பரம னிருந்திடம்
சிற்றம்பல மென்று தேர்ந்துகொண் டேனே"

என்னும் திருமந்திரங்கள் உணர்த்துகின்றபடி, ஆஞ்ஞைத்தானமாகிய புருவமத்தியில் யோகியர்க்குத் தோன்றும் தாமரையிலே ஆன்மாவானது அறிவு மாத்திரையாய விந்து நாதங்களோடு கூடிச் சமாதியிற் பொருந்தி நின்று சிதம்பர நாதனைத் தரிசனஞ் செய்யும். இப்பெரிய யோகாநுபவத்தைச் சுட்டுதற்காகவே புருவமத்தியிற் பொட்டிடும் வழக்கம் உண்டாயிருக்கலாம் என்னும் ஓர் ஊகம் தோன்றுகின்றது. நிற்க,

இந்நாட்டில், சுமங்கலிக்கு மஞ்சட் பூச்சும் மாங்கல்ய தாரணமும் இன்றியமையாத அடையாளங்களாதல் போல, வைதிக சமயிகட்கு விபூதிப் பூச்சும் உருத்திராக்க தாரணமும் விலக்கலாகாச் சின்னங்களாமென்று நமது முன்னோர் விதித்துள்ளார்கள். அறனறிந்து ஆன்ற அறிவுடையார் இன்னும் பலகாரணங்கள் காட்டக்கூடும். சோப்

புப் பூச்சும் மோதிர தாரணமும் இந்து சுமங்கலிகட்குப் போதுமென்றெண்ணு நாகரிகமேழுமே லது கண்டிக்கத் தக்கதாமாறு போலவே, சமய சின்ன தாரணத்தின் கருத் தறியா மாந்தர் அதனைக் கழித்துப் பேசும் உரையும் கருணை யாலும் நியாயத்தாலும் கடியத்தகுந்ததாம். இவ்வடையாளங் கள் இறைவன் நின்றதோர் நேர்மையினையும் அவனை ஆன்மா அடையு நெறியின் முக்கிய லக்ஷணத்தையும் புலப்படுத் துஞ் சிறப்பின என்று மேலே விரிவாக விளக்கப்பட்டது.

இத்தகைச் சிறப்புடைய சின்னங்களை அணிதற்குரிய சமயத்திற் பிறந்தோர் அனைவரும், அவற்றை அசட்டை செய்யாது கருத்துணர்ந்து அணிந்து உயர்கதியினை அடை யக் கண்ணுதற் பெருமான் கருணை புரிவாருக.

"ஞாலநின் புகழேமிக வேண்டுந்தென்
ஆலவாயி லுறையு மெம்மாதியே"

---

☞ இது பேரூர் சாந்தலிங்க சுவாமிகள் மடத்தைச் சார்ந்த ஸ்ரீ சத்வித்யா சன்மார்க்க சங்கத்தில் 1923-ம் வருடம் நிறைவேறிய ஆண்டு நிறைவு விழாவில் வாசித்தற்காக எழுதப் பெற்றது.

---

THE PROGRESSIVE PRINTERS, 17, CORAL MERCHANT ST., MADRAS.

ஔவையார்

# *திருவெண்பாப்பொருள் விளக்கம்

"உலகமும் பல்லுயிரு மொன்றி நிறைந்தோங்கி
யிலகுஞ் சிவனெம் மிறை"

அவ்விறைவன் நிறுத்தியருளிய இந்நிலவுலகத்தில், எந்நாட்டினுஞ் சிறந்து பொன்னாட்டினும் உயர்ந்த நன்னாடிதுவென்று பன்னுவலர் புகழும் திருப்பாண்டித் தென்னாட்டு மன்னர் சிகாமணியாகிய, ஸ்ரீமத் பாஸ்கர சேதுபதி மகாராஜா அவர்கள் கனசமுகத்தில், பலகலைகளும் நிலை கண்டுணர்ந்த பண்டிதர் பலர் நிறைந்த மகாசபையில் இச் சிறியேனை ஒரு சித்தாந்த சைவப்பிரசங்கம் புரியுமாறு பணித்தருளினார்கள். மாங்குயிலின் தீங்குரல் கேட்டு மகிழ்ந்திருக்கும் திருச்செவிகள் காகங் கரையு மொலியுங் கேட்டல் போல, மெய்நிலைகண்ட மேதகு புலவர் செய்திடும் உபந்நியாஸங்கள்கேட்டு மகிழ்ந்திருக்கும் பெரியோர் உய் நெறியறியாப் பொய் செறி சிறியேன் பெய்திடும் உபந்நியாஸமுங்கேட்க விரும்புதல் ஏற்குமோர் நெறியேயாம். அது நிற்க; திருஞானசம்பந்தர், வாகீசர், சுந்தரர், மாணிக்கவாசகர் என்னும் பரமாசாரியசுவாமிகள் நால்வரும் ஏனைய உண்மை நாயன்மார்களுந் திருவாய்மலர்ந்த அருட்பாக்களெனப்படும் தேவார திருவாசக மாதிகளில் ஒரோவொன்றை யெடுத்துக்கொண்டு அதன் பொருள் சிறிது

---

* இஃது இராமநாதபுரம் திரு. பாஸ்கரசேதுபதி அவர்கள் முன்னிலையில், சாமக்குளம் வெங்கடரமணதாஸர் என்னும் திரு சுப்பிரமணிய சர்மா அவர்கள் செய்த சொற்பொழிவின் ஒரு பகுதியாகும்.

விளக்குதற்கோ புழுத்த நாயினுங் கடையேனுகிய சிறியேன் அத்துணை யாற்றல் பெற்றிலேன். ஆதலின் பூலோக சரசுவதி யென்று மேலோராற் புகழப்பெற்றுச் சிவாநுபவ முற்றிருந்த ஔவையார் அருளிச்செய்த பல நூல்களுள் ஒரு நூலினுள்ள ஒரு வெண்பாவை யெடுத்து அதன் பொருளைச் சிற்றறிவுக் கெட்டியவாறு சிறிது விளக்கத் துணிவுற்றேன். அது வருமாறு:—

வெண்பா.

**சிவாய நமவென்று சிந்தித் திருப்பார்க்**
**கபாய மொருநாளு மில்லை—யுபாய**
**மிதுவே மதியாகு மல்லாத வெல்லாம்**
**விதியே மதியாய் விடும்.**

இத் திருவெண்பாவின் முதற்கண் ஸ்ரீ பஞ்சாக்கரத்தைக் குறிப்பிட்டருளினர் ஔவையார். அது, தூலபஞ்சாக்கரம், சூக்கும பஞ்சாக்கரம், அதிசூக்கும பஞ்சாக்கரம் என முத்திறப்படும். அவை பீஜங்களது சேர்க்கைகளால் ஓரெழுத்து முதல் பதினெழுத்துக்கள் வரையில் தொகை யேறியுங் குறைந்தும் பல திறத்தனவாக விளங்கும்.

" அஞ்செழுத்து மெட்டெழுத்தும் ஆறெழுத்து நாலெழுத்தும்
பிஞ்செழுத்து மேலைப் பெருவெழுத்தும் "

என்றபடி பல திறப்பட்டு விளங்குமவை யெல்லாம் பொதுவில் ஸ்ரீ பஞ்சாக்கரமென்றே அழைக்கப்படும். மற்றிதன் திறமெல்லாம் "எண்ணிலி யூழி தவஞ்செய்திங் கீசனை—யுண்ணினைவுபெற்ற துணர்வு"—என்றபடி எண்ணிறந்த பிறவிதோறும் சோபான முறையாய் அடிபட்டு வந்த புண்ணிய விசேடத்தால் ஒரு ஜன்மத்தில் இருவினையொத்து மலபரிபாக மெய்திச் சத்திபதிவுற்றுப் பிறவியை யஞ்சி வீடுபேறு காதலித்துச் சித்தாந்த சைவநெறி கடைப்பிடித்துச்

சற்குரு சந்நிதி யடைந்து சமயவிசேட நிருவாணமென்னும் சம்ஸ்காரங்கள்பெற்று அருள்வழி நிற்கும் பெருந்தகை வாய்ந்த சற்சீடர்கட்கு அதிகாரானுகுணமாக அவ்வாசிரிய ஞல் அறிவுறுக்கப்பட வேண்டியதொரு பரமரகசிய மெய்ந் நெறி யாதலின், அதனைத் தெளிந்த பெரியோர் வெளிப்பட விள்ளார். விள்ளுத லிழுக்காம். விள்ளினும் பக்குவரல்லா தார்க்கு அது விளங்கிப் பயன்றருமாறுமில்லை. இச் சித் தாந்த சைவப்பேற்றி னருமையைப்

"புறச்சமய நெறி நின்று மகச்சமயம் புக்கும்
புகன்மிருதி வழியுழன்றும் புகலுமாச் சிரம
. . . . . . .
. . . . சென்றேற்சைவத்
திறத்தடைவ ரிதிற்சரியை கிரியா யோகம்
செலுத்தியபின் ஞானத்தாற் சிவனடியைச் சேர்வர்"

எனவரும் சிவஞானசித்தித் திருவிருத்தத்தாற் காண்க.

இங்ஙனம் ஸ்ரீ பஞ்சாக்கரத்தைக் குறித்தெடுத்துக்-கொண்ட ஔவையார் "சிவாய நம வென்று" என்றார். "என்று" என நிற்கும் இவ்வெச்சம் என்று கணித்து, என்று செபித்து, என்று உச்சரித்து என்னும் பொருளைப் பயக்கும். இது வாக்குகளின் றொழில். வாக்குகளாவன:— வைகரி ; மத்திமை ; பைசந்தி ; சூக்குமை யென நாற்றிறப் படுவதாம். இவை முறையே தாலுமூலம், கண்டம், இதயம், நாபி என்னும் தானங்களைக் கொண்டு விளங்கும். இவை சுத்த மாயையின் காரியம். இவற்றி னியல்பெல்லாம் மெய் கண்டசாத்திரங்களுள் விசாரித்துத் தெளிக. ஈண்டு விரிக் கிற் பெருகும்.

மேல், சிவாயநம வென்று "சிந்தித்து" என்றார். சிந் தித்தல் மனத்தின் றொழில், (மனத்துக்கும் சித்தத்திற்கும் வேறுபாடு சிறிதாதல்பற்றி அவையிரண்டையு மொன்றாகக்

கொண்டு அந்தக்கரணம் மூன்றே யெனக் கூறும் சில தத்துவ நூல்கள்.) ஈண்டுச் சிந்தித்தலாவது அங்ஙனங் கணிக்கப்படும் ஸ்ரீ பஞ்சாக்கரத்தின் பொருளைச் சிந்தித்து என்பதாம். பொருளாவது, பதி பசு பாசமென்னும் முப்பொருளும் அதனு ளடங்கி நிற்கும் நிலையைச் சிந்தித்து, அதாவது, சிவம், சத்தி, ஆன்மா, திரோதம், மலம் என்னும் ஐம்பொருளும் முறையே திருவெழுத்தைந்தில் விளங்கி நிற்கும் அந்நிலையைச் சிந்தித்து, "தோற்றந் துடியதனில்" எனவும், "சேர்க்குந் துடிசிகரம்" எனவும் வரும் பிரமாணங்களின்படி இறைவனது திருவுருவமும், சிருட்டி முதலிய ஐந்தொழிலும், அயன் முதலிய ஐங்கர்த்தாக்களும், ஈசான முதலிய ஐம்மனுக்களும், ஈசானிமுதலிய ஐஞ்சத்திகளும், அவ்வைந்தெழுத்தாலமைந்த அந்நிலையைச் சிந்தித்து என்க. விரிக்கிற் பெருகும்.

மேல் "இருப்பார்க்கு" என்றார். ஈண்டிருத்தலாவது அங்ஙனம் சிந்தித்துத் தெளிந்த அந்நிலையைச் சாதித்து நிற்றலாம். அருள்வழி நிற்றல், இறைபணி நிற்றல், தானற நிற்றல், சிவமாய் நிற்றல், ஞேயத்தழுந்தல் என்பனவாதி பல வாசகங்களால் இறைவனூல்களில் உணர்த்தப்படும் மெய்ஞ்ஞான நிஷ்டையாகிய சமாதிநிலை இதுவே யெனக் காட்டுவார் "இருத்தல்" என்னு மொரு சொல்லாற் கூறினார். உச்சிப் பொழுதி னேர்பட்ட படிகம் பிறிதொன்றைக் கவராது அக்கதிரொளியே கவர்ந்து அதுவாய் விளங்குமதுபோல், கண், படிகம், ஆகாசம்போலச் சார்ந்த தன் வண்ணமாம் உயிர். இவ்வைந்தெழுத்தைச் சாதித்து நிற்கு நிலையில் சிவமுமருளு மோர்பாலும், மலமுந் திரோதமு மோர்பாலும் முன் பின்னாகச் சூழ்ந்து நிற்க நடுநின்ற யகாரமாகிய ஆன்மா மலத்தைப் பற்றாது அருளைப்பற்றி அவ்வருள் தாரகமாகச் சென்று பொருளோடுகூடி அதுவாய்

விளங்கி நிற்கும் அவ் வத்துவிதநிலை இதுவேயாம். "வெளியே புறப்பட்டு மெய்யருளாம்-தாயுடன் சென்று தாதையைக் கூடிப் பின் றாயை மறந்-தேயுமதே நிலை யென்றுனெழிற் கச்சியே கம்பனே." எனப் பட்டினத்துப் பிள்ளையார் அருளிச்செய்ததுங் காண்க. அத்துவிதமென்ப தனுள் அகரம் இன்மை அன்மை மறுதலை யென்னும் முப்பொருள் பயக்குமன்றே! அவற்று ளொன்னும் பெயர் மேல்வந்த நகரம் அன்மைப்பொருள் மாத்திரையே யுணர்த்திப் பொதுவில் நிற்பதன்றி ஏனைப் பெயர்மேல் வந்த நகரம் போல இன்மை மறுதலைப் பொருள்க ளுணர்த்தல் வழக்கின்க ணின்மையான் "அப்பிராமணன்" என்பதுபோல் அன்மைப் பொருளே யாண்டுப் பொருந்தற்பாலதாம். அங்ஙனமாக இன்மைப் பொருளே யவ்வகரத்திற்கு வடமொழியியலால் நாட்டப்படுவ தென்றும், அன்மைப் பொருள்கோடல் நவீனர் சிலரது போலிவழக்கென்றும் இக்கால வடமொழிப்புலவர் சிலர் மயங்கிக் கூறுவர். அவர் மெய்கண்டான் நெறியை விரோதித்துப் பொய்கொண்டிழியும் மாயாவாதப் புறச்சமயி யாகலின் அன்னோர் பொருள் எம்பால் மெய்யாதலின்றித் தூரம்போய்த் துச்சமாய் விடுமென்க. இது பற்றியன்றே "பொய்கண்டார் காணாப் புனிதமெனு மத்துவித, மெய்கண்ட நாதனருள் மேவுநா ளெந்நாளோ?" என்றார் தாயுமானப் பெரியாரும்! "வேதாதிகாரம் பிராமணருக்கே "யன்றி" சத்திரிய வைசியருக்குமுண்டு." "வேதாதிகாரம் சூத்திரருக் "கின்றி" உயர்ந்த மூன்று வருணத்தார்க்குண்டு." இந்த இரண்டு வாக்கியங்களின் மத்தியில் நிற்கும் அன்றி, இன்றி என்னும் பதங்களின் அர்த்தவேற்றுமை போலவே அத்துவைதச் சொல்லின் அகரத்திற்கு அன்மைப் பொருள் இன்மைப் பொருள் வேறுபாடுண்மை யறிக.

"இன்றெனக் கருளி யிருள்கடிந் துள்ளத்
தெழுகின்ற ஞாயிறே போன்று
நின்றநின் றன்மை நினைப்பற நினைந்தே
னீயலாற் பிறிதுமற் றின்மை
சென்றுசென் றணுவாய்த் தேய்ந்துதேய்ந்
தொன்றும் திருப்பெருந் துறையுறை சிவனே
யொன்றுநீ யல்லை யன்றியொன் றில்லை
யாருன்னை யறியகிற் பாரே."

என்று வாதவூர்ப்பரமாசாரியர் அருளிய அம்மெய்ந்நிலையே சித்தாந்த சைவத்தாற் பெறப்படும் புனிதாத்துவித நிலை யென்றுணர்க. தானற நிற்கு மத்துவித நிலையிஃதென நன்கு விளக்குதற்கன்றே சிவஞானபோதச் சிற்றுரையின்

"நானவனென் றெண்ணினர்க்கு நாடுமுள முண்டாத
லானெனவொன் றின்றியே தானதுவாய்—நானெனவொன்
றில்லென்று தானே யெனுமவரைத் தன்னடிவைத்
தில்லென்று தானு மிறை"

என்னும் வெண்பாப் பொருளில் நாடுமுள முள்வழித்தா னிலனாதலும் அஃதில்வழித் தானுளனாதலும் யாங்ஙனம் பெறுதுமெனிற் காட்டுதும்:—தூல வொளியாகிய கண்ணொளியும் சூக்குமவொளியாகிய விளக்கொளியும் அத்துவிதமாய்க் கலந்துநிற்கு நிலையை உற்றுநோக்க வல்லார்க்குப் பிரித்தறியவாராமையின், விளக்கொளியாய்க் காணுங்காற் காட்டுந் தன்மையே முனைத்துத் தோன்றுமாகலான் அவ்வழிக் கண்ணொளியிருந்து மில்லைத்தானே; அன்றிக் கண்ணொளியாய்க் காணுங்காற் காணுந்தன்மையே முனைத்துத் தோன்றுமாதலால் அவ்வழி விளக்கொளியிருந்து மில்லைத் தானே; இனி இது கண்ணொளி இது விளக்கொளியெனப் பகுத்துக் காணப்புகினும் காணுந்தன்மையே முற்படத் தோன்றுதலின் அவ்வழி விளக்கொளி திரிவுபுலனாய்க் காட்

சிப் படுவதல்லது தெளிவு புலனாய்க் காட்சிப்படுமா றில்லை. இனி யாது திரிவுக்காட்சி? யாது தெளிவுக்காட்சி? யெனிற் கூறுதும். அங்ஙனம் கலந்து நிற்புழியும் இது விளக்கொளி, இது கதிரொளி, இது மதியினொளியென அவ்வப்பெற்றிய வேயாய்க் காணுங்காட்சி தெளிவுக்காட்சி யெனவும் அங்ஙன மன்றி அவற்றினோடொப்பக் கண்ணொளியை வேறு காண டல் திரிவுக்காட்சி யெனவும் கண்கூடாக அறியக் கிடத்த லின் பொருளினும் இவ்வாறாய்த்துணர்ந்து கொள்க. அற் றேல், கதிர்முன் விளக்குப்போல விளக்கொளிமுன் கண் ணொளி சத்தி மடங்கிப்போதலின் அஃதவைபோலக் காட் சிப் புலனாகாதாயிற் றென்னாமோவெனின்; என்னும்: என்னை? கண்ணொளி சத்திமடங்கிற்றாயின் விளக்கொளி காட்சிப்புலனாதல் பிறிதோராற்றாற் பெறப்படாமையின்; அற்றேல், மின்மினித் துணையேனும் தானொன விளங்கு மியல்பில்லாத கண்ணுக் கொளிக்குண முண்டென்பதற்குப் பிரமாணமென்னையோ வெனின்,—அறியாது கடாயினாய். ஆகாயத்தின் கண்ணதாகிய சத்தகுணம் வியஞ்சகத்தானன் றித் தினைத்துணையும் தானே விளங்குமா றின்மையின் அது பற்றி எதிரொலிவடிவாகிய அவ்வோசையை காயத்தின் குணமன்று வியஞ்சகப்பொருளின் குணமேயென்பார் யாரு மில்லை. அதுபோலக் கண்ணொளியும் தன்னை விளக்கும் வியஞ்சக முள்வழி விளங்கி அல்லுழி விளங்காமை மாத்தி ரையே பிறிதில்லை யென்றுணர்க," என்றிங்ஙன மருளிச் செய்தார் திராவிடமகாபாஷ்யகர்த்தாவாகிய துறைச் சிவ ஞானயோகிகள். இவ்வுண்மை ஒரு சிறிதும் உணரப்பெறாது ஊகமில்லாப் பசுஞானிகள் சிலர் பிரம்மவித்தியாப் பத்தி ரிகை முதலியவற்றில் கதிரொளி யொன்றுதானே கட் பொறியிற் றாக்கி எதிரோடிப் பல்பொருள்களைக் காண்பதன் றிக் கண்ணுக் கெனவோ ரொளியில்லை யென்று வம்பளப்பா

ராயினர். கண், ஒளியோடு சார்ந்து ஒளியாய்க் காண்டலும் இருளோடு சார்ந்து இருளாய் நிற்றலும் நாம் கண்ட அநுபவமாம். அஃது அவ்விரண்டுமாகாத வோரியல்பிற்றாகலான். வியஞ்சகத்தால் விளங்கிக் காணும் அக்கண்ணினது சத்தியையோ யாமிங்குக் கண்ணொளி யென்கின்றும். காண்பது கதிரொளியேயன்றிக் கண்ணொளியல்லவெனின், நள்ளிருள் செறிந்த நடுச்சாமத்தில் நெடுந்தூரத்துள்ளவோர் மலையின் மீதெரியும் விளக்குக் கண்ணிற்குத் தோன்றுதலும் அவ் விளக்குக்கும் கண்ணிற்கு மிடையிலுள்ள பொருள்களி லொன்றுந் தோன்றாது அந்தகாரமே தோன்றுதலும் என்னையோவென்று கடாவி மறுக்க. விரிக்கிற் பெருகும். இஃது இங்ஙனம் நிற்க.

இங்ஙனம் கூறியவிதனுற் கன்மவேள்வி, தவவேள்வி, ஜபவேள்வி, தியானவேள்வி, ஞானவேள்வியெனத் திவ் யாகமங்கள் கூறும் ஐவகை வேள்விகளுள், முன்னைய இரண்டும் சித்தாந்தசைவர்க்கே யன்றி ஏனைப் புறச்சமயத்தார்க்கு முரியனவாய்ப் பொதுவில் நிற்பதொன்றாகலானும் அவற்று லெய்தும் பயனும் "பசித்துண்டு பின்னும் பசிப்பானை யொக்கும் இசைத்த இருவினையிலின்பம்" என்றபடி அனித்தியமா யொழிதலன்றி பின்னவைபோல முத்திக்கு நேர்வாயிலாகாமையானும் அவ்விரண்டையும் வேறுவைத்து, மேற் சித்தாந்தசைவர்க்கேயுரிய விசிஷ்ட வேள்விகளாய் முத்தி சாதனங்களாய் நிற்கும் ஜபம், தியானம், ஞானம் என்னும் மூவகை வேள்விகளையே விதந்தெடுத்துக்கொண்டு, என்னல், சிந்தித்தல், இருத்தல் என்னும் இம்மூவகைச் சொற்களால் இங்ஙனம் நிறுத்தியருளினார் அவ்வையார்; என்க.

என்னை? கன்மவேள்வி தவவேள்விகள் சித்தாந்த சைவரல்லாதார்க்கும் பொதுவகையாய்ச் சேறல்பற்றி வேறு

வைத்தெண்ணியவெனின், ஜபவேள்வியு மவ்வாறே சைவரை யொழித் தொழிந்த சமயிகட்கும் பொதுவகையாற் சேற லுண்மையின் இத்தனையு மவ்வாறே வேறுவைத்தெண்ணுதல் கூடும்; அற்றன்றிச் சித்தாந்த சைவர்க்கே யுரித்தாமென்றல் கூடாதாவெனின், அங்ஙனம் வரும் ஆசங்கை யொழித்து அஃதன்னோர்க்கே யுரித்தாமாறு காட்டுதற்கன்றே மந்திரங் கணித்து எனப் பொதுவகையாற் கூறாது ஸ்ரீ பஞ்சாக்கரத்தையே கிளர்ந்தெடுத்தோதி யருளினார் அவ்வையா ரென்றவாறு. ஸ்ரீ பஞ்சாக்கரம் கணிப்பார் சைவரேயன்றிப் பிறரன்மையான். அற்றேல், ஸ்ரீ பஞ்சாக்கரஜபம் முதலியன ஆகமங்களினன்றி வேதத்துள்ளுங் கூறப்படுதலானும், வேதத்தின்வழி வேறுவேறு முடிபுகள் கொண்டொழுகும் வைதிகசமயத்தார் பலரும் அதனைக் கணித்த லுண்மையா னும், அஃது சித்தாந்தசைவர்க்கே யுரியதென்றல் பொருந் துமா றெங்ஙனெனின், அறியாது கடாயினாய்! அவ்வா சங்கை யொழித்தற்கன்றே பஞ்சாக்கரமெனப் பொதுப் படக் கூறாது முத்திபஞ்சாக்கரத்தையே ஈண்டு ஔவையார் விதந்தெடுத் தோதுவாராயிற் றென்பது.

என்னை? ஏகான்மவாத வேதாந்திகள், சிவாத்துவித சைவர், முதலியோர் ஸ்ரீ பஞ்சாக்கரங் கணித்தலுண்டெனி னும், அவ்வைதிகர் பாசஞான பசுஞானிகளாய் ஆணவமலத் துண்மை கொள்ளமாட்டாத அகப்புறச்சமயத்தாரா யிருத்த லின், அன்னோர் கொள்வது முத்திபஞ்சாக்கரமாகாமை யானும், சமய விசேட நிர்வாண மென்னும் சம்ஸ்காரங்கள் ஆகமவழிப்பெறாத அன்னோர்க்கு முத்தி பஞ்சாக்கரத் துண்மை யுணர்த்துவாரொருவரும் இன்மையானும், ஒரு போது வலிந்து மேற்கொள்ளினும் (கதிரோனெதிர்ப்பட்ட கூகையின் கண்ணுக்குப் பொருள் காட்சியாகாது அந்த காரஞ் சூழ்வதுபோல) அத்துவசுத்தி யில்லாத அன்னோர்க்கு

அதன் பொருள் விளங்கிப் பயன்றருமா றின்மையானும், "பாச மூன்றையுந் தவிர்ப்பதும் மேலானதுமாகிய தீக்கையைத் தவிர இவ்வுலகத்தில் முத்திக்கு வழியில்லை; தீக்கையாலேதான் மோக்கம், ஆச்சிரமங்களாலும் பிற கருமங்களாலும் முத்தியில்லை. அத்துவசுத்தியின்றி முத்தியைப் பெற விரும்புகிறவன் கோலின்றி நடக்கத் தொடங்கிய குருடன் போல்வன்; தோணியின்றிக் கடல்கடக்க நினைத்தவனுமவன்" என்று வாயுசங்கிதை சிவகீதை முதலிய உண்மை நூல்களில் அகத்தியர் உபமன்னியர் முதலிய உயர்ந்தோராற் றுணிந்து கூறப்பட்டமையின், ஈண்டுக் கூறியது பொது நீக்கிச் சித்தாந்த சைவர்க்கே சிறப்புவகையா னுரித்தாகிய முத்தி பஞ்சாக்கரமென்பது தெற்றென உணர்க. அஃது அன்னவாதல் அகத்தியர் வரத்தான் அவதரித்து இருமொழிக் கடலும் ஒருங்கு பருகித் திராவிடமாபாடியம் வகுத்த சிவஞானயோகிகள் சிவஞானபோதச் சிற்றுரைக்கண்,—"ஈண்டுப் பஞ்சாக்கரமென்பது முத்தி பஞ்சாக்கரத்தை. திருவைந்தெழுத்தாற் சாதிக்கப்படும் பொருளு மதுவேயாகலான் வேறு கூறவேண்டாமையின் விதிப்படி யெனமாட்டெறிந் தொழிந்தார். இவ்வாசிரியர்மாட் டெறிந்தது முணராதார் ஓதுமுறை வேறே சாதித்து நிற்குமுறை வேறேயெனச் சித்தாந்த வழக்கொடு முரணிக் கூறுவர்; ஓதுமுறையும் சாதித்து நிற்கு முறையும் தம்முளியைபில்வழி அஃததற்குச் சாதனமாமாறியாண்டையதென்க" என்று விரித்துக் கூறினமையானும் விளங்கும். இது நிற்க. மேற்

சரியை, கிரியை, யோகம், ஞானம் என நால்வகைப்படும் சிவபுண்ணியங்களுள், சரியையுங் கிரியையுமொன்றாக்கிச் சிவதன்ம மென்றும், யோகத்தைச் சிவயோகமென்றும், ஞானத்தைச் சிவஞானமென்றும் சித்தாந்த நூல்களிற் கூறப்படுவதுண்மையால், சிவதன்மம் ஸ்ரீ பஞ்சாக்கரங்

கணித்தலினும், சிவயோகம் அதன் பொருளைச் சிந்தித்தலினும், சிவஞானம் சிந்தித்துத் தெளிந்த அப்பொருளைச் சாதித்து நிற்றலினும், அடங்கியிருத்தல் நோக்கி, என்று, சிந்தித்து, இருப்பார்க்கு, என்னும் இம்மூவகைச் சொற்களால் அந்நால்வகைச் சிவபுண்ணியங்களையே இங்ஙனமெடுத்தோதினர் அவ்வையாரெனப் பொருள் கூறுதலுமொன்று.

அறம் என்பது பற்பலவாமாக, "ஈதலறம்" எனத் தலைமையும் பயனு நோக்கி ஈதலொன்றன்மேல் வைத்துக் கூறியதுபோல், ஈண்டுச் சிவதன்மம் பலவாக, அவற்றுள் விசிஷ்டம் நோக்கி ஸ்ரீ பஞ்சாக்கர ஜபத்தின்மேல் வைத்துக் கூறினரென்பது—"விரும்புஞ் சரியை முதல் மெய்ஞ்ஞான நான்கும் அரும்பு மலர் காய்கனிபோலன்றோ பராபரமே." என மேலோர் கூறலின், இச்சிவபுண்ணிய நான்கு மோரினமாய் ஒன்றற்கொன்று விசிட்டமாய் நின்று முற்றும் முத்திசாதனமாமாறு காட்டுவார் அங்ஙனம் முறைபடக் கூறியருளினர்; இம்மூவகைச் சிவபுண்ணியங்களும் முறையே நிகழ்ந்தன்றிச் சிவஞானம் விளங்கலும் வீடுபேறெய்தலும் கூடாமையால். அற்றேல், அறுபத்துமூம்மை நாயன்மாருள்ளிட்ட சிவபத்தர் பலருக்குச் சரியைமுதலியனவின்றி ஞானம் நிகழ்ந்தவாறென்னெனின் அன்னோர் முன்னைத் தவப்பயன் கொண் டின்னிலத் துதித்த சாமுசித்தராதலின் அஃதிங்கு கடாவன்றென்க. விரிக்கிற்பெருகும். இதுநிற்க,

ஞானமொன்றுதானே கேட்டல், சிந்தித்தல், தெளிதல், நிஷ்டைகூடலென நால்வகைப்படுமாதலின், அவற்றுட் கேட்டலை என்று என்னுமெச்சத்துட் குறிப்புப் பொருள்பட நிறுத்திவைத்து, தெளிந்தபின்னர் நிஷ்டைகூடுதற்கு இடையீடில்லாமையால் வேறு கூறவேண்டாது நிஷ்டையுளடக்கி, என்று, சிந்தித்து, இருப்பார்க்கு என்னு முச்சொற்களால் அந்நால்வகை ஞானங்களையுமே இங்ஙனம் கூறியருளினர்

அவ்வையாரெனப் பொருள் கொள்ளுதலுமொன்று. இது நிற்க. மேல்:

" அபாயமோருநாளுமில்லை" என்றார். இங்ஙனம் முத்தி பஞ்சாக்கரம் கணித்து, அதன் பொருள் சிந்தித்து, அவ்வழிச் சாதித்து நிற்கும் சித்தாந்தசைவராகிய மெய்ஞ்ஞானிகள் அபாயத்தினின்று நீங்குவாரென்றபடியாம். ஈண்டபாய மாவது யாது ? ஜநநமரணங் கட்குட்பட்டுச் சொர்க்க நரகாதிகளிற் சென்று திரிதரலாகியவபாயம்; அதுதான் ஏகதேசப் படுதலும் பாதந்திரமாதலுமாகிய அபாயம். விரித்துரைக்கிற் காலத்திரயத்திற்கட்டுண்டு, கன்மத்திரயத்திற் கலக்குண்டு, தேகத்திரயத்திற் சிக்குண்டு, அவஸ்தாத்திரயத்தில் அலைப் புண்டு, ஈஷணாத்திரயத்திலிழுப்புண்டு, தாபத்திரயத்திற் றுக்குண்டு, புவனத்திரயத்திற்புக்குண்டு, சுழலு மபாயமாம். மல மாயா கன்மங்களின் காரியங்கள் எல்லாம் அபாயமேயென் பது தோன்ற "அபாயம்" என்று ஒரு சொல்லாற் கூறினார். இஃது பாசநீக்கங் கூறியவாறும். பாசநீக்கங் கூறவே சிவத்துவ விளக்கம் வேறு கூறவேண்டாதாயிற்று. என்னை? கரையாற்றடையுற்றிருந்த யாற்றுநீர் அத்தடை நீங்கியவழி முடுகியோடிக் கடல்நீர்புக்கு அந்நீரேயாய்ப் பின் னீங்கா முறை போல், உயிர் பாசமொருவியாண்டுத் தண்ணிழலாய் நிற்கும் பதியோடிரண்டற நிற்றலன்றி வேறிடமின்மை யான்.—" ஊசல்கயிறற்றாற்றாய் தரையேயாந்துணையான்" எனவரும் மெய்கண்டார் திருவாக்குமது. "அங்கியானது தானுமொன்றை யணைந்து நின்று விளங்கிடும் பங்கியாதுயிர் தானுமிப்படிப் பற்றியல்லது நின்றிடா" தென்றார் அருணந்தி சிவாசாரியார். "ஆணவத்தோ டத்துவிதமானபடி மெய்ஞ் ஞானத் தானுவோடத்துவிதம் சாருநாளெந்நாளோ." என்றார் கருத்துமது. இவ்வத்துவிதநிலை யுணரமாட்டாதார் ஒன்றென்றும் இரண்டென்றும் அன்றென்றுமாமென்றுந்

தத்தமக்கு வேண்டியவாறே கூறியிடர்ப்படுப. "நன்றென்றுந் தீதென்றும் நானென்றுந் தானென்று, மன்றென்று மாமென்றுமாகாதே நின்றநிலை-தானதாந் தத்துவமாம்" என அவ்வையாரருளிய வாய்மையைத் தெரிந்தோர்பாற் றெளிந்திடுக. ஈண்டு விரிக்கிற் பெருகும்.

இனி, அன்னோர் அவ்வபாயத்தில் "நீங்குவ" ரென்னாது "இல்லை" யென்றதென்னெனின், நீங்குதலொருதலை யென்பதும் அது விரைவினு மென்பதும் காட்டுவார் "இல்லை" யென்னுஞ் சொல்லாற் கூறினார். அற்றேல், அவ்வபாயமில்லை யென்னு மவ்வளவே யமைவதாக "ஒருநாளு மில்லை" யென்ற தென்னையோவெனின், அது, பசுபுண்ணியங்களெனப்படும் "தானம் யாகம் தீர்த்த மாச்சிரமம் தவங்கள் சாந்தி விரதம் கன்மயோகங்கள் சரித்தோர், ஈனமிலாச் சொர்க்கம் பெற்றிமைப் பளவின் மீள்வர்" என்றமையால் இச் செறிவந்த சிவஞானிகளும் அவ்வாறு மீளுதலுண்டோ என வரும் ஆசங்கை யொழித்து, அவரவ்வாறு நிலைநிற்று அவ்வபாயத்தில் யாண்டும் வீழ்வாரல்ல ரென்னு முறுதி காட்டுவார் "ஒருநாளு மில்லை" என விசேடித்தருளினார். "ஈசன்யோகக் கிரியாசரியையினி னின்றோர், ஊனமிலாமுத்தி பதம்பெற் றுலகமெல்லா மொடுங்கும்போ" தெனவருஞ் சித்தியாருமது. இவையே பதிபுண்ணியங்களென்பது. இனித் தான யாகதீர்த்தமாதிகள் சரியைகிரியா மார்க்கத்து முளவாக, அவை பசு புண்ணியமாமாறு யாண்டையதெனின், பசுபுண்ணியம் பதிபுண்ணியமென வேறுபட்டது, செய்வோரது கருத்து வகையானன்றிப் பிறிதின்மையால் அஃதாசங்கை யன்றென்க. இது நிற்க.

மேல் "உபாயமிதுவே" யென்றார், அவ்வபாயத்தினீங்கி வீடு கூடுதற்கு ஈண்டுக் கூறிப்போந்த சித்தாந்தசைவ நெறி

யொன்றே நேர்வாயிலா மென்றவாறு. ஏகாரத் தேற்றத்தா லிஃதொழிந் தொழிந்த நெறியெல்லா மதற்கு நேர்வாயிலாகா வென்பதும் பெறப்பட்டது. இனி "உபாயம்" என்னும் சொல் எளிது எனவும் பொருள்படுத லுண்மையின், சத்தி நிபாதத் துத்தமராயினோர்க்கு இந்நெறி யெய்தி வீடு கூடுதல் எளிதின் முற்றுறு மெனக் கூறுதலு மொன்று.

மேல் "இதுவேமதியாகு" மென்றார். ஈண்டுநின்ற "மதி" யென்னுஞ் சொல் உண்மை ஞானத்தின் மேற்று. அதுவே பரஞானமெனவும், பதிஞானமெனவும், திருவருள் ஞான மெனவும் படும். இதுவே என்பது பின்னும் வருவிக் கப்பட்டது. இது, என்னுஞ் சுட்டு மேற்கூறிப்போந்த சித்தாந்தசைவத்தின்மே னின்றது. ஏகாரம் பிறிதினியைபு நீக்கிற்று.

மேல் "அல்லாதவெல்லாம்" என்றார். இச்சித்தாந்த சைவநெறி யொழிந் தொழிந்தவெல்லாம் என்றவாறு.

"விதியே மதியாய் விடும்" என்றார். ஈண்டுநின்ற "மதி" ஏனைச் சமயஞானங்களின்மேற்று. "விதி" யென்னும் சொல் பாசகாரியத்தின்மேற்று மலநடையென்னும் பொருட் டாம். உலகாயதமுதற் பாஷாணவாத சைவமீறான சமய ஞானங்களெல்லாம் பாசஞான பசுஞானங்களாவதன்றிப் பதிஞானமாகாமையானும், அந்த ஞானங்களாலடையவரும் முத்திகளென்பது அறிவைய றின்புறுமுத்திமுதற் பாஷாண முத்தியீறான பழிசேர் முத்தியேயன்றித் திரிமலமுமகல உயிர் அருள்சேர் முத்தியாகாமையானும், அவ்வச்சமயத்தார் முடி பாகக்கொண்ட அந்நிலைகளெல்லாம் எம்மிறைவனு லதிஷ்டிக் கப்படும் சுத்தமாயா அசுத்தமாயா தத்துவங்களில் ஒவ் வொன்றேயாவதன்றித் தத்துவாதீத நிலையாகாமையானும், அவையெல்லாம் மலநடையாய்ப் பிறிதில்லையென்னு முண்மை

கூறுவார் விதியேமதியாமெனப் புணர்த்தோதினர். இனி "ஆகு" மென்பதே யமைவதாக "ஆய்விடு" மென்றதென்னை யெனின், அவை யங்ஙனம் மலைவுடையேயாயினும் "புறச் சமயநெறி நின்றும் அகச்சமயம்புக்கும் புகன்மிருதிவழியுழன்றும்" இங்ஙனம் பல்பிறவியினும் அவ்வச்சமயநெறி நின்றுபரிபாக முதிருந்தோறும் விட்டுவிட்டுப் போய் மேலேறிச் "சென்றுற்சைவத் திறத்தடைவரிதிற் சரியைகிரியாயோகஞ் செலுத்தியபின் ஞானத்தாற் சிவனடியைச் சேர்வர்" ஆதலின் அவை யதற்குச் சோபான முறையாய் இறைவனால் நிறுத்தப்பட்டு நடப்பனவன்றி யாண்டு மொரு பெற்றித்தாய் நிலைபெறுதலின்மையால் ஆகுமென்றமையாது ஆய்விடுமெனக் கூறியொழிந்தார். இதனை லேனைச்சமயத்தார்க்கு மோருறுதி கூறியவாறு. "சமயகோடிகளெலாந் தந்தெய்வமெந்தெய்வமென் றெங்குந்தொடர்ந்தெதிர் வழக்கிடவுநின்றதெது—அந்தப் பெரியபொருளைப் பணிகுவாம்" என்றமையின் எல்லாச் சமயங்கட்கும் எம்மிறைவனே இறைவனென்றுணர்க. "யாதொருதெய்வங்கொண்டீ ரத்தெய்வமாகி யெங்கள் மாதொருபாகனார் தாம்வருவர்" என்பதூஉமது. விரிக்கிற் பெருகும்.

சோற்பொழிவு முற்றும்

---

இக்காலத்து ஏகான்மவாத வேதாந்திகளும் பசுஞானப் பண்டிதருமாகிய சிலர் காமிகாதி திவ்யாகமங்களை அவைதிக மெனவும் அப்பிரமாணமெனவுந் தூஷித்து அல்லல் விளைப்பாராயினர். அவர்தங் கொள்கையை நிறுத்தற்கு வாயுசங்கிதை முதலிய நூல்களையும் சான்றாகத் தேடினர். இவர் புரியும் சிவாகம நிந்தனைக்குச் சிவாகமசித்தாந்த மணங் கமழும் திவ்யபுராணமாகிய வாயுசங்கிதையைச்

சான்றுதேடிய துணிவு அம்மம்ம! சால வியக்கத்தக்கதே! அற்றேல், வாயுசங்கிதையில் காமிகாதிகளை "அசிரௌதங்கள்" என்று கூறுவதென்னையெனிற் கூறுதும். உண்ணும் பதார்த்தங்கள் பலவும் உப்பைச் சார்ந்து சுவைபெறுவனவாகப் பால்மாத்திரம் அதனுதவிவேண்டாது இயற்கையிற் சுவை மலிந்து விளங்குமதுபோலும், மந்திரங்கள்பலவும் பிரணவத்தின் சம்பந்தத்தால் வலிபெற்று விளங்குவனவாக ஸ்ரீ பஞ்சாக்கர மட்டும் அதனுதவியின்றியும் இயற்கையில் ஆற்றல்பெற்று விளங்குமதுபோலும், நூல்களெல்லாம் வேதத்தைத் தழுவியே ஆதிக்கம்பெறுவதாக, காமிகாதி சிவாகமங்கள்மட்டும் அதன் துணை வேண்டாது இயற்கையிலே சுதந்திராதிக்கம்பெற்று விளங்கும் சிறப்புடைத்தென்பதே வாயுசங்கிதையி னுட்கருத்தென்றுணர்க. வேதத்தின் உத்தரபாகம் போன்று சிவஞானம் பெருக்கி அவ்விறைவன் றிருவாக்காய் நிலைபெறுவது காமிகாதிகளாகலின், இவ்வுண்மை யுணரப்பெறுது அந்தோ! பழிப்புரை பகர்ந்து பாவிகளாயினர். காமிகாதிகள் அவைதிகமும் அப்பிரமாணமுமாயின் வைதிகமாகிய வேறு ஆகமங்களைத் தேடிக் கொள்ளாது இக் காமிகாதிகளையே அகஸ்தியர், உபமன்னியர் முதலிய உயர்ந்தோர்பலரும், ஸ்ரீ நீலகண்டர், அரதத்தர், அப்பய தீக்ஷிதர் முதலியனரும் தேடியுய்ந்ததென்னையெனக் கடாவி அவர் வாயையடக்குக. இப் புலவரது முகாலரம்பனமும் இனி நம்மவர் செய்யாதொழிக விரிக்கிற் பெருகும்.

மெய்கண்ட தேவர் விரைகழல் வாழ்க
சிவஞானசுவாமிகள் சேவடி வாழ்க

---

The Imperial Printing Works, Madras.—400/9-32.

திருநெல்வேலி சைவசித்தாந்த சங்க வெளியீடு-௫

உ

திருச்சிற்றம்பலம்

---

# சைவசமய வளர்ச்சிக்காக
# நாம் செய்யவேண்டிய வேலை யாது?



இஃது
இரத்தாட்சி ஆண்டு ஆனித் திங்கள் எட்டாம் நாளன்று
திருக்குற்றாலத் திருத்தலத்தில் குழுமிய இச்சங்கத்
தின் நிறைவேற்றற் கூட்டத்தில்

காரைக்குடி

திருவாளர் அரு. சோமசுந்தரச் செட்டியாரவர்கள்

நிகழ்த்திய சொற் பொழிவின் சாரமாகும்.



திருநெல்வேலி
சைவ சித்தாந்த சங்கம்
ஆங்கீரச ௵ வைகாசி ௴

திருச்சிற்றம்பலம்

## சைவ சமய வளர்ச்சிக்காக நாம் செய்யவேண்டிய வேலை யாது?

சைவப் பெருமக்களாகிய நாம் நமது சமய வளர்ச்சி கருதி இந் நாளில் செய்யவேண்டிய வேலைகள் பலவுள. அவ் வேலைகளை நிறைவேற்றுதற்கு முன் வந்து பணி செய்து பயன்விளைத்தற்குரிய தொண்டர்கள் பல ரிலர். இதுகாலை அத்தி பூத்தது போல், ஆங்காங்கு ஒரு சில மெய்யன்பர்கள் சமயப் பிரசாரஞ் செய்து வருகின்றார்கள். பெரும்பாலோர் இன்னுந் தங்கள் கருத்தைப் பணி செய்தலிற் பதிக்கவில்லை. சைவ மகா சபைகள் பலவற்றில் சைவப் பெருமை பெரிதும் பேசப்படுகின்றதே யொழியச் சைவப் பணி நன்கு வலியுறுத்திப் பேசப்படவில்லை. சொற்பொழிவாளர்களும் கேட் டின்புறுவோரும், சொல்நயம் பொருள்நயம் முதலிய நலன்களையே நாடுகின்றார்களே யன்றி, வேலை நலத்தை நாடுகின்றார்களில்லை! இவ்வாறு சமயச் சபைகள் பல ஆண்டுக் கொருமுறை இன்பவிழா வெடுத்து மகிழ்வதோடு அமைந்து விடுகின்றன. பின்னர் அயர்ந்து உறங்க ஆரம்பித்து, அடுத்த ஆண்டின் தொடக்கத்திற்றான் ஆண்டு நிறைவுவிழாக் கொண்டாடுதற்காகக் கண்

விழிக்கின்றன. ஆனால் பயனற்ற அறிக்கை யேடுகளை மட்டும் அழகாகத் தயாரித்து அச்சிட்டுப் பரப்பிவிடு கின்றன. இஃது ஓர் பெருங் குறையாகும். முதற் கண் நாம் இக் குறையினை யொழித்தற்கே முயலுதல் வேண்டும். சமயச்சபைக ளனைத்தினையும் சமயத் தொண்டு செய்வதில் ஈடுபடுமாறு செய்தல் வேண்டும். ஒவ்வொரு சபையையும் சார்ந்துள்ள அங்கத்தின ரனைவரும் சமயத்தொண்டராக விருத்தல் வேண்டும். சந்தாப்பணம் ஒன்றை மட்டும் கருதிச் சங்கத்தில் அங்கத்தினர் எண்ணைப் பெருக்குத லாகாது. சமயத் தொண்டு செய்ய முன்வருவோரே அங்கத்தினராக விருத்தல் வேண்டும். மற்றவ ரனைவரையும் நன்கு அபிமானிகளாகச் சேர்த்துச் செல்வநிலையைப் பெருக் கிக்கொள்ளலாம். இவ்வழிபற்றிப் பணிசெய முன் வரும் திருக்கூட்டங்களும் திருத்தொண்டர்களுமே யாண்டும் பெருகுதல் வேண்டும். ஒரு திருக்கூட்டத் திற்கு ஐந்து திருத்தொண்டர்கள் இருந்தாலும் போதும். இத் திருக்கூட்டங்களுக்கு மிக அதிக மான செல்வ நிலையையுந் தேட வேண்டுவதில்லை. திருத்தொண்டர்கள் மட்டும் தன்னலங் கருதாது, பொதுநலம் நாடுபவராக, இலவசப்பணி செய்வாராக விருத்தல் வேண்டும். அன்னார் நாடோறும் இவ் வேலையையே செய்தல் வேண்டுமென்பதில்லை. ஒரு மாதத்தில் பத்து நாட்கள் இப் பிரசார வேலையிற் செலவழித்தாற் போதும். முக்கியமாகத் தொண்ட ராவா ரனைவரும் இறை சிவன் திருவருளை முன்

விட்டு, ஒற்றுமையோடும் நிறைந்த ஊக்கத்தோடும் பணிசெய்து அன்புநெறியினை வளர்க்கத்தக்க பேருணர்வுடையோரா யிருத்தல் வேண்டும். அன்னோர் உடம்பிலுள்ள இரத்தநாளங்க ளனைத்திலும் சைவசித்தாந்தத்தேன் கலந்த இரத்தவெள்ளம் கொதிப்புற்றோடுதல் வேண்டும். எல்லோரும் பெரும் பண்டிதர்களாக விருக்கவேண்டும் என்ப தில்லை. பிரசார வேலை செய்தற்குப் போதிய வளவு பிழையறச் சைவசித்தாந்த நுண் பொருள்களை அறிந்து கொண்டவர்களாக விருந்தாற் போதும். நான் எனும் அகந்தையின்மையும் அடக்கமும் அவசியம் அன்னோர்க்கு அணிகலன்களா யிருத்தல் வேண்டும். உண்மை, உறுதி, அஞ்சாமை, பொறுமை, நல்லொழுக்கம் முதலிய நறுங்குணங்களுக்கு அன்னார் எடுத்துக் காட்டா யிலங்குதல் வேண்டும். அன்னோர் சிரங்களில் நால்வர் பொற்றாளும், கரங்களில் சைவசாத்திரங்களும் தோத்திரங்களும் திகழ்தல் வேண்டும். சிறப்பாக மெய்கண்ட சாத்திரம் பதினான்கும் திருமுறை பன்னிரண்டும் அவர்க ளுள்ளத்தில் ஊறித் ததும்பிப் பொங்குதல் வேண்டும். பணி செயுங் காலத்து, "பயன் பயன்" என்று பதறாது பணியைச் செவ்வனே செய்துகொண் டிருத்தல் வேண்டும். பணியைச் செவ்வனே செய்துகொண்டு சென்றால் பயன் விளைந்தே தீரும். இவ்வாறு, "என் கடன் பணி செய்து கிடப்பதே" எனும் இன்பவாக்கை முன்னிலைப் படுத்திக்கொண்டு, தொண்டராவா

ரனைவரும் நாட்டினைக் கலக்குதல் வேண்டும். இளை ஞர்தான் பெரிதும், "நான் வருகின்றேன், நான் வருகின்றேன்" எனத் திருக்கூட்டங்களிற் சேர்ந்து திருத்தொண்டு புரிய முன்வரல் வேண்டும். ஒவ்வோ ரிளைஞனும், அழியும் இவ்வுடலை அழியாப் புகழை நிறுவுவதிற் பயன் படுத்துவேன் என்று இறு மாந்து இந் நெறியில் ஈடுபடுதல் வேண்டும். திருத் தொண்டர்கள் தெய்வ நீற்றினை நிறையப் பூசிக் கொண்டு, கண்டிகை பூண்டு கம்பீரமாக உரத்த குர லோடு மக்கள் மனத்தைக் கவரும்படி தெய்வத் தமி ழைப் பற்றியும் சைவப் பொருள்களைப் பற்றியும் சொற் பொழிவுகள் செய்தல் வேண்டும். ஜனங்கள் திரளா கக் கூடுமிடங்களிலெல்லாம் சைவப் பிரசங்கங்கள் நடைபெறல் வேண்டும். சிறப்பாகக் கிராமப் பிரசா ரத்திலேயே தொண்டர்கள் கண்ணுங் கருத்துமா யிருத்தல் வேண்டும். நாட்டின் பொதுஜனங்கள் கிரா மங்களிலேயே வசிக்கின்றார்க ளாதலால், கிராமப் பிரசாரந்தான் பெரும்பயனை யளிப்பதாகும். கிறித் தவப் பாதிரிமார்கள் கிராமப் பிரசாரத்தினாலேயே, திரளான மக்களைக் கொள்ளைகொண்டு வருகின்றார் கள்; எனவே, நமது திருத்தொண்டர் குழாங்களும் கிராமங்களுட் புகுந்து, சிவமணத்தைப் பரப்பி, நம் மக்கள் புறமதம் புகாதவண்ணம் தடுத்தல் வேண்டும். அன்னோர்க்கு நமது சமய மாண்பினை நன்கு அறி வுறுத்துதல் வேண்டும். நல்ல தாளில் பெரிய எழுத் துக்களில் எளிய நடையில் அழகிய சித்திரப்படங்க

ளோடு விளக்கப்பட்டுள்ள துண்டுப் பிரசுரங்களை யாண்டும் பரப்புதல் வேண்டும். சமயாசாரியார், சந்தானாசாரியார் முதலியவர்களுடைய படங்களை யெல்லாம் ஐந்து ஆறு நிறங்களோடு கூடிய அழகிய சித்திரப்படங்களாக அச்சிட்டுச் சிறியதோர் விலைக்கு விற்றல் வேண்டும். அடியவர்களனைவரும், போற்றித் திருவகவல், திருத்தொண்டத் தொகை, திருவங்க மாலை முதலிய திருப்பாசுரங்களைப் பாராயணஞ் செய்துகொண்டு பஜனைக்கோஷ்டிகளாகச் செல்லலாம். ஒவ்வொரு திருக்கூட்டத்திற்கும் ஒரு ரிஷபக் கொடியும், ஒரு சுதிப்பெட்டியும், சில தாளங்களும், பெரிய படிக்கு இரண்டு மூன்று படி கொள்ளக்கூடிய நறுமணங்கமழுந் திருநீற்றுப்பை யொன்றும் அவசியம் இருத்தல் வேண்டும். கையெழுத்துப் பிரதிக ளெடுக்கும் பெட்டி (Cyclo-style) ஒன்று இருந்தால் சிற்றறிக்கைகள் வெளியிடுதற்குச் சுலபமாக விருக்கும். சில தொண்டர்கள் சிறப்பாக விளக்குப் படங்களோடு சொற்பொழிவு நிகழ்த்துவோர் (Magic-lantern lectures) ஆக விருக்கலாம். இனி, இத் திருத்தொண்டர்கள் முக்கியமாகப் பரப்பவேண்டிய கொள்கைகளைப்பற்றிச் சில உரைகள் கூறுகின்றேன். முதலாவது எல்லா அறங்களுக்கும் அடிப்படையாகவுள்ள சீவகாருண்ய நலத்தையே நன்கு வலியுறுத்தல் வேண்டும். மக்களாவா ரனைவரும் மாமிச உணவை நீக்கிவிட்டு, மரக்கறி உணவுகளையே மாந்தும்படி செய்தல் வேண்டும். ஒவ்வொரு திருக்

தொண்டரும், "நான் இந்த ஆண்டில் நூறு பெயர்களைச் சைவம்பிடிக்கும்படி செய்திருக்கின்றேன்" என எண்ணி எண்ணி இன்புறுமாறு தாம் தாம் இவ்வேலையினைப் பெருவேட்கையோடு செய்தல் வேண்டும். கட்குடியையும் அறவே யொழித்து விடுதற்குப் பெரும்பாடு படுதல் வேண்டும். எக் காரணத்தை முன்னிட்டும் எவரும் சிறு தெய்வங்களுக்கு உயிர்ப்பலி யிடாது, சுத்த ஆராதனையே செய்து சுகமாக வாழும்படி செய்தல் வேண்டும். வைதிகரென்போர் செய்யும் உயிர்க்கொலை யாகத்தை எவ்வகையானும் எவரும் ஆதரிக்காத வண்ணம் செய்தல் வேண்டும். பத்தி மார்க்கத்தையே மக்களுக்குப் பெரிதும் வற்புறுத்துதல் வேண்டும். இந்நெறியை வளர்த்தற்குத் துணையாக, ஆறுமுக நாவலரவர்கள் வரைந்துள்ள திருவிளையாடற் புராண வசனம், பெரிய புராண வசனம், கந்தபுராணவசனம் முதலிய புத்தகங்களை நூற்றுக்கணக்காக வாங்கி வைத்துக்கொண்டு அசல் விலைக்கு விற்றல் வேண்டும். சில திருத்தொண்டர்கள் சிறப்பாக விபூதி உருத்திராக்கப் பிரசாரஞ் செய்யலாம். இவர்கள் ஆயிரக்கணக்கான விபூதிப் பைகளைத் தைத்து வைத்துக்கொள்ளுதல் வேண்டும். ஏராளமாக ஐந்து ஆறுமுக உருத்திராக்கங்களைக் கயிற்றில் கோத்து வைத்துக்கொள்ளுதல் வேண்டும். மாமிச உணவினை விலக்கிய மக்க ளனைவருக்கும் சிவநாமத்தினைச்சொல்லி இவ்வுருத்திராக்க மங்கல நாணைப் பூட்டி விடுதல்வேண்டும். உருத்திராக்க தாரணஞ்

செய்து கொள்ளுவோர் அனைவருக்கும் ஒவ்வொரு விபூதிப் பையும் கொடுத்தல் வேண்டும். கிராமங்களி லுள்ள சிறு பள்ளிக்கூடங்களுக் கெல்லாம் சென்று மாணவர்களுக்கு மிட்டாய், வாழைப்பழம், ஸ்லேட் பென்சில், சிறுகதைப் புத்தகங்கள் முதலியவற்றைக் கொடுத்து, அவர்களனைவரையும் மாமிச உணவை விலக்கும்படி செய்து, அன்னோர்க்கு உருத்திராக்க தாரணஞ் செய்தல் வேண்டும். சிறுபிள்ளைகளே இனி வருங்காலத்து மக்களாதலால் சிறு பள்ளிக் கூடங்கள் முதல் பெரிய பள்ளிக்கூடங்கள் வரையில் நமது தொண்டர்கள் புகுந்து மாணவர்களைச் சிவ நெறியிற் பழக்குதல் வேண்டும். பெரிய ஆங்கிலக் கல்லூரிகளிலும், உயர்தரக் கலாசாலைகளிலும் மற்ற நடுத்தரப் பாடசாலைகளிலும், நமது அன்பர்களிற் சிலர் வாரம் ஒருமுறை ஒவ்வொரு வகுப்பிற்கும் சன் மார்க்கத்தைப் போதிக்கும் சமய போதகராகச் சென்று பணி செய்தல் வேண்டும். இஃது ஒரு முக்கியமான வேலையாகும். இவ் வேலையினைச் செய் தற்குத் துறவிகளும், உத்தியோக ஓய்வுபெற்றுள்ள அன்பர்களும் (Pensioners) அவசியம் முன்வருதல் வேண்டும். இந்நாளில் நமது சைவப் பெருமக்களிற் பலர் ஐந்தெழுத் தருளுபதேசம் பெற்றுக்கொள்ளு கின்றார்களில்லை! சுமார்த்தர்களால் உபநயனச் சடங்கு எவ்வாறு சமயப்பிரவேசக் கிரியையாகக் கட்டாய மாக அநுட்டிக்கப் படுகின்றதோ, அவ்வாறே இவ் வைந்தெழுத்தருளுபதேசம் நமது சமயப்பிரவேசக்

கிரியையாதலால், கட்டாயமாக எல்லோராலும் அவசியம் அநுட்டிக்கப்படல் வேண்டும். இந் நெறியினை வளர்த்தற்கு ஒவ்வொரு திருக்கூட்டத்தாரும், "நாங்கள் இந்த ஆண்டில் நூறு பெயர்களைச் சமய தீக்கை பெற்றுக்கொள்ளுமாறு செய்துள்ளோம்" என எண்ணி இன்புறுமாறு வேலை செய்தல் வேண்டும். ஆலய வழிபாடு இந்நாளில் பெரிதும் மறக்கப்பட்டு வருதலால் பொது ஜனங்களுக்கு ஆலயவழிபாட்டின் அவசியத்தை நன்கு வற்புறுத்துதல் வேண்டும். அன்பர்க ளனைவரும் நாடோறும் அருட்பாக்களைந்தினையும் அவசியம் பாராயணஞ் செய்யுமாறு செய்தல்வேண்டும். இவ்வாறு பாராயணஞ் செய்வதற்கு, ஆறுமுகநாவல ரவர்களால் வெளியிடப்பட்டுள்ள அகத்தியர் தேவாரத்திரட்டுடன் கூடிய அருட்பாப் புத்தகம் சாலச் சிறந்ததாகும். இவ் வருட்பாப் புத்தகத்தை நூற்றுக்கணக்காக வாங்கிவைத்துக்கொண்டு, பாராயணஞ் செய்ய விரும்புவார்க்கு அசல்விலைக்கு விற்கலாம். அருச்சித்தற்கு, "வேற்றாகி விண்ணாகி நின்றாய் போற்றி" முதலிய அருச்சனைப் பதிகங்களைப் பாடி மகிழச் செய்யலாம். பலர்க்கு நமது சமயாசிரியர் யாவர் என்பது நன்கு விளங்கவில்லை. அப்பர், சம்பந்தர், சுந்தரர், மாணிக்கவாசகர் ஆகிய அருட்குரவர் நால்வருமே நமது சமயாசாரியர்கள் என்பதை நன்கு வலியுறுத்தி அன்னோர் திருவடிகளை அனைவரும் முடிகளிற் புனைந்து போற்றுமாறு செய்தல்வேண்டும். இனிச்

சைவப் பெருமக்களாகிய நமக்குச் சிவபெருமானே முழுமுதற் கடவுளாவா ரென்பதையும், மூவரில் ஒருவராகிய உருத்திரரல்லர் என்பதனையும் எல்லோரும் இனிது உணருமாறு செய்தல் வேண்டும். மற்றும் நமது சைவ நன்மக்க ளனைவரும், "நாங்கள் செய்த தவத்தால் சைவ சமயத்திற் பிறந்து பேரின்பப் பெருவாழ்வு பெறும் பேறு பெற்றுள்ளோம்" என இறுமாப்பெய்தி இன்புறுமாறும், எவரும் எக்காரணங் கொண்டும் புறச்சமயங்களைக் கனவினும் கருதாதிருக்குமாறும் செய்தல் வேண்டும். இதற்கு முன்னர் நமது சமயமாட்சியினை யறியாது புறச்சமயம் புகுந்துள்ளோரில், இது காலை நமது சமய மாண்பினை யுணர்ந்து திரும்பி வர விரும்புவோரைத் தாராளமாகச் சேர்த்துக்கொள்ளுதல் வேண்டும். இவ்வாறு புறச்சமயம் புகுந்து திரும்பி வருவோரை மீட்டும் அழைத்துக் கொள்வதை நாம் ஒருகாலும் மறுத்தலாகாது. நமது சமயாசாரியர் நால்வரில் இருவர் இதற்குப் பெரும் வழிகாட்டிகளாக விருக்கின்றார்கள். அப்பரெம்பெருமானார் தாமே சமண் சமயம் புக்கு அதிற் சின்னாளிருந்து, மீட்டும் சைவ சமயத்திற் பிரவேசஞ் செய்தருளினார்கள். திருஞான சம்பந்தப் பெருமானார் மதுரைமா நகரத்தில் சமணர்களை வாதில் வென்ற காலத்தில் பசுவின் சாணத்தைப் பச்சையாகப் பூசிக்கொண்ட பத்தர்க ளனைவரையும், பசுவின் கன்றுக்குட்டிகளைத் தம் தோள்களிலே தூக்கிக்கொண்டு நின்ற அன்பர்க ளனைவரையும் சம

ணர்களென ஒறுக்காது சைவரெனக் காத்தருளி ஞர்கள். இனிப் புறச்சமயம் புகுந்தவர்கள் சைவ சமயப் பிரவேசஞ் செய்கின்றகாலத்து, அன்னோர் பிராயச்சித்தம் முதலியவற்றிற்காக அதிகச் செலவு செய்து வருந்தும்படி செய்தலாகாது. திலகவதியார் திருவாளன் திருநீற்றினை அள்ளித் திருவைந்தெழுத்தை யோதித் திருநாவுக்கரசடிகளின் நெற்றியில் சாத்தி அன்னாரைச் சைவ சமயப் பிரவேசஞ் செய்வித்ததுபோல், பெரியோரைக்கொண்டு அன்னோர் திருக்கரங்களால் தெய்வ நீற்றினை அள்ளித் திருவைந்தெழுத்தை யோதி நிறையப் பூசுவித்து வருவோரனை வரையும் எளிதிற் சேர்த்துக் கொள்ளுதல் வேண்டும். சேர்த்துக் கொள்ளாவிட்டால், நமது சமயத்திற் குரிய ஜனப்பெருக்கும் வரவரக் குன்றுவதோடு, நமது சமய தர்மமும் பிறழ்ந்து போவதாகும். இனித் தாழ்ந்த வகுப்பாரை உயர்த்துதற்கு நம்மால் எவ்வளவு தூரம் பாடுபட முடியுமோ, அவ்வளவு தூரம் அவசியம் பாடுபடல் வேண்டும். புறமதம் புகுவோரிற் பெரும் பாலோர் தாழ்ந்த வகுப்பாரே யாவர். காரணம் நாம் அவர்களுக்குச் சமயஞான போதனையும் செய்யாது, நம்மை நண்ணவும் விடாது அடித்துத் துரத்துதலே யாம். அன்னோரும் மக்களே யென நினையாது, இவ்வாறு நாம் அவர்களை அடித்துத் துரத்தும் வரையில் நமது சமயம் வளருதற்கு இடமே யில்லை! ஒரு சமயம் என்பது, பலரும் வந்து சேர்ந்து பயன்பெற் றுய்யுமாறு தனது வாயில்களைத் திறந்து வைத்திருந்தா

லொழிய, அது சமயம் எனப்படமாட்டாது. விரிந்த நோக்கத்தோடு ஒரு சமயத்தை உலகம் முழுவதும் பரப்ப வொண்ணாது, இலை மறை காய்போல், ஒரு சிலர்க்குமட்டும் பயன்படுமாறு மறைத்து வைத்துக் கொள்ளுதல் தகாது! தகாது!! தாராளமாக மக்களாவா ரனைவரும் தன்னை யடைந்து ஆனந்த வெள்ளத்தில் திளைக்கும் வண்ணம் எல்லோரையும் அறை கூவி யழைத்து ஆட்கொள்ளுவதே ஒரு சமயத்திற்குச் சிறந்த அடையாளமாகும். எனவே, நமது அருமைச் சகோதரர்களாகிய தாழ்ந்த வகுப்பாரை உயர்த்தி அன்னோர்க்கும் நம்மத உரிமைகளை நல்கி நல்வழிக் குய்த்தற்குரிய நெறிகளை வகுத்துக் காட்டுதலில் நாம் ஒருநாளும் பின்வாங்குத லாகாது. சில தொண்டர்கள் தம் வாழ்நாளை அவர்களுக்கெனச் சிறப்பாகப் பாடுபடுவதில் ஈடுபடுத்துதல் வேண்டும். சுகாதார நெறிகளை அவர்களுக்கு நன்கு போதித்தல் வேண்டும். அன்னோரிற் சிலர் நாம் உண்டு எறியும் எச்சிலை உண்டலையும், மாடுகளை வெட்டித் தின்றலையும், கட்குடித்தலையும் அறவே யொழித்து விடுமாறு செய்தல் வேண்டும். அவர்களுடைய பிள்ளைகளுக்கெனச் சிறப்பான கலாசாலைகளைத் தாபித்து, நல்ல ஆசிரியர்களைக் கொண்டு அப்பிள்ளைகளை நன்னெறியிற் பழக்குதல் வேண்டும். அவர்கள் குடிசைகளுக்குச் சமீபத்தில், அவர்களுக்கெனச் சிறப்பாகப் பிள்ளையார் கோவில்களை யேற்படுத்தி, அவைகளில் அவர்கள் தினந்தோறும் வந்து வழிபாடு செய்யும்படி

செய்தல்வேண்டும். இதற்கு ஒரு திருத்தொண்டர் நூறு இருநூறு பிள்ளையார்களைச் செய்து அவர்களிருக்கு மிடங்களி லெல்லாம் சென்று சமீபத்தி லுள்ள அரசமரத் தடியில் பிரணவப்பொருளாம் பெருந்தகையைப் பிரதிஷ்டை செய்தல் வேண்டும். இனிப் பெண்மக்களுக்குச் சமயஞானத்தை ஊட்டுதலிலும் நாம் நமது கவனத்தை நன்கு செலுத்துதல் வேண்டும். நமது பெண்மக்களில் நூற்றுக்குத் தொண்ணூற்றைந்து பெயர் நமது சமயக் கொள்கைகளை நன்கு உணராதவர்களாகவே யிருக்கிறார்கள். சமய ஞானம் பெண்மக்கள்பால் வளர்ந்தாற்றான், வருங்காலத்துப் பிள்ளைகள் எல்லோரும் சமயஞான வடிவமாகத் தோன்றுவார்கள். எனவே, இந் நெறியினைத் திருத்தொண்டர்கள் சிறிது வளர்ப்பதோடு, கல்வியறிவுள்ள தாய்மார்களும் பலர் முன்வந்து இதற்காகப் பெரிதும் பாடுபடல் வேண்டும். குருடர், செவிடர், ஊமையர் முதலியவர்களுக்கும் நமது சமயச்சார்பில் ஒரு சில இடங்களில் பாடசாலைகள் தாபிக்கப்படல் வேண்டும். திக்கற்ற குழந்தைகளை வைத்து வளர்த்தற்குரிய அநாதரக்ஷாலயங்களும் நமது சமயச் சார்பில் ஆங்காங்கு அரும்புதல் வேண்டும். இது சிறந்த பெரிய வேலையாகும். இதற்குப் பெரும்பொருள் வேண்டும். இப் பெரும்பொருளைப் பெறுதற்கு இலேசான வழி யொன்று உண்டு. ஒரு பெரிய நீர் நிலை வீண் கமர்நிலத்தில் பாய்ந்துகொண்டிருக்கின்றது. அதனை இவ்வழியில் திருப்பிவிட்டாற்

போதும். அப்பொழுது வீண் சோம்பேறிகள் வயிறார வுண்டு எப்படியிட்டுக்கொண்டு திரிதற்குக் காரணமாக வுள்ள அன்ன சத்திரங்களை, "ஆதுலர்க் கன்னசாலை ஓதுவார்க்கு உண்டி" எனும் ஆன்றோர் வாக்கிற் கிலக்காக இவ் வழியில் பயன்படுத்துதல் வேண்டும். அன்னசத்திரங்கள் வைத்திருப்போர் இதனை நன்கு கவனித்து அவசியம் சீர்திருத்துதல் வேண்டும். இனி, நமது சைவப் பெருமக்கள் வைத்திருக்கின்ற தரும வைத்தியசாலைகளில், காலையும் மாலையும் கடவுள் வணக்கம் செய்வதோடு, சமய சம்பந்தமான துண்டுப் பிரசுரங்களினையும் வழங்கி, நோயாளி களுக்கும் அவர்களோடு கூட வருவோர்க்கும் சமய போதனை செய்தல் வேண்டும். நமது அருந்தமிழ்ப் பாடசாலைகளில் சமய போதனையும் ஓர் முக்கியமான பாடமாகக் கருதப்படல் வேண்டும். இந்நாளில் இது நன்கு கவனிக்கப்படாதது பெரிதும் வருந்தத் தக்கதே யாம். சமய ஞானம் கலவாத கல்வியறிவு எட்டு ணையும் பயன்படாது. எனவே, அருந்தமிழ்க் கலா சாலைகளின் அதிகாரிகள் சமயக் கல்வியினையும் முக்கி யமானதாகக் கருதுதல் வேண்டும். இவ்வாறு பாட சாலைகளில் சமயக் கல்வியினைப் போதிப்பதற்குப் பேரறிஞர்கள் சிலர் உதவிகள் மிக இன்றியமையாதன வாம். முதற்கண், செய்யுள் வடிவமாகவுள்ள சமய நூல்களனைத்தினையும் இனிய எளிய வசன வடிவ மாகவும் ஆக்கித் தரல் வேண்டும். மெய்கண்ட சாத் திரம் பதினான்கினையும் பன்னிரு திருமுறைகளினை

யும் வடித்துத் திரட்டி ஒன்றுக் கூட்டி, ஸ்ரீ ராம கிருஷ்ண பரமஹம்ச தேவர் உபதேச மொழியைப் போல், சிறு சிறு உவமானங்களாலும் கதைகளாலும் சரித்திரங்களாலும் பெரிய தத்துவங்களை விளக்கிக் காட்டும் வண்ணம், சைவ சித்தாந்த அமுத மொழிகள் எனும் பெயரோடு ஓர் இனிய நூல் எழுதித் தரல் வேண்டும். "சைவ சமயம் என்பது என்ன?" எனும் பெயரோடு சைவ சமயக் கொள்கைகளனைத்தினையும் வெள்ளிடை மலைபோல் விளக்கிக் காட்டும் இனிய வசன நூல் ஒன்றும் அவசியம் எழுதப்படல் வேண்டும். இவ்விரு நூல்களும் ஆங்கிலத்திலும் யாக்கப் பெறல் வேண்டும். ஆண்டு தொறும் தலபுராணங்களையே எழுதி எழுதிக் குவிக்கும் புலவர் பெருமக்களும் வீண் விவாதங்களையே எழுதி வெளியிடும் அன்பர்களும், இவ்வழியில் இறங்கி வேலை செய்தல் பயனுடையதாகும். பொதுவாக மாணவர்களுக்குச் சிறந்த நூல்களைக் குறிப்பிட்டு ஆண்டிற்கொருமுறை சமயப் பரீக்ஷைவைத்து அதிற் றேறுபவர்களுக்குப் பரிசுகளும் யோக்யதா பத்திரங்களும் வழங்குதல் வேண்டும். பொதுவாகவும், சாத்திரங்களிலும், தோத்திரங்களிலும் ஆக மூன்று திறமாகப் பரீக்ஷகள் வைத்து நடத்தலாம். தோத்திரப் பரீக்ஷயினைக் குறிப்பிட்ட எண்ணுள்ள பாடல்களைப் பிழையற ஓதுவார்க்கு நடத்தலாம். இனி, வேத-ஆகம-தேவார பாடசாலைகளை யெல்லாம் சோற்றுச் சாலைகளாக நடாத்தாது கலாசாலைகளாக

நல்ல முறையில் நடாத்தி, அவைகளிற் பயிலும் மாண வர்களுக்கும் பரீக்ஷைகள் வைத்துப் பரிசுகள் வழங்கு தல் வேண்டும். மறந்தும் நம்மக்களைக் கிறித்தவப் பாதிரியார் பாடசாலைகளுக்கு அனுப்புத லாகாது. பெண் மக்களுக்கு அவரவர் வீட்டுக்கு வந்து கல்வி கற்பிக்கும் ஜனானாமிஷனைச் சேர்ந்த கிறித்தவ உபாத் தியாய பெண்மணிகளை நம்முடைய தூய இல்லங் களிலே அடியெடுத்து வைக்க விடலாகாது. மேற் கூறிப் போந்த இரண்டனுக்கும் இடங் கொடுப்பதால் வருங் கேடுகள் பல. அவை யாவும் அன்பர்கள் நேரிலே அறிந்தனவே யாம். ஆகவே, நம்முடைய மக்களுக்கு நம்முடைய உபாத்தியாயர்களைக் கொண்டே கல்வி கற்பித்தல் வேண்டும். பெற்றோர்கள் இதிற் பெருஞ் சிரத்தை செலுத்துதல் வேண்டும். இனித் திருக்கோயில்களிலுள்ள திருவோலக்க மண்ட பங்களில் அவசியம் தினந்தோறும் புராணபடனம் நடைபெறல் வேண்டும். ஆங்கு வடமொழிச் சுலோ கங்களைச் சொல்லி அர்த்தஞ் செய்வதால் எள்ளளவும் பயனில்லை. நமது இன்றமிழ் மொழியில் பத்திச் சுவை நனி சொட்டச் சொட்டப் பாடப்பட்டுள்ள திருவிளையாடற்புராணம் பெரியபுராணம் கந்தபுரா ணம் முதலியவைகளையே வாசித்தல் வேண்டும். திருக்கோயில்களிலே திருவிழாக் காலங்களில் வீண் செலவு செய்து நடாத்தும் வேசையர் நடனத்தை யறவே ஒழித்துவிடுதல் வேண்டும். அதற்குப் பதிலாகச் சைவப் பெருஞ் சொற்பொழிவுகளை

நடாத்துவித்தல் வேண்டும். இனி, நமது சிவாக மங்களை யெல்லாம் திரட்டி அச்சிடுவதோடு, அருந் தமிழ் மொழியினும் அவசியம் அவை யனைத்தையும் மொழி பெயர்த்திடுதல் வேண்டும். நமது சைவ நூல்களை யெல்லாம் நல்ல தாளில் அழகிய காலிகோ கட்டிடத்தில் அச்சிட முயலல் வேண்டும். இவ் வேலையினைத் தென்னிந்திய சைவ சித்தாந்த நூற்பதிப் புக் கழகத்தார் செய்யத் தொடங்கியிருப்பது பெரி தும் பாராட்டற் பாலதாகும். உண்மைச் சைவ சமய வளர்ச்சி கருதி உழைக்கும் மாதப் பத்திரிகை களைச் சிவநேசச் செல்வ ரனைவரும் அவசியம் ஆத ரித்தல் வேண்டும். சைவ சமயிகளாவா ரனைவ ரில்லங் களினும், சிவாலயங்க ளனைத்தினும் நடைபெறும் கிரியைகளெல்லாம் சைவக் கிரியைகளாகவே யிருத் தல் வேண்டும். இந்நாளில் நடை பெறுவதைப்போல் சுமார்த்தக் குழப்பம் தலை காட்டுதலாகாது, சைவக் கிரியாபத்ததிக ளெல்லாம் தமிழில் மொழிபெயர்க்கப் பட்டு வழக்கத்திற்கு வந்தால், சொல்லுவோர்க்கும் கேட்போர்க்கும் இனிமையாக விருக்கும். இது காறும் எளியேன் சைவ சமய வளர்ச்சிக்குரிய பல் வேறு வகைப்பட்டுள்ள பொருள்களைப் பற்றி பல உரைகள் வழங்கியுள்ளேன். இவைக ளனைத்தினை யும் கேட்கும்பொழுது ஒரு சிலர்க்குக் கனவுகாண் பதுபோ லிருக்கலாம். ஆனால் உண்மையில் கனவு காண்பதல்ல, எல்லா உரைகளும் சில ஆண்டுகளாகச் சிறியேன் சிந்தனை செய்ததின் பயனே யாகும்.

மேலும் செய்கையிலும் சிலவற்றை எளியோங்கள் காரைச் சிவனடியார் திருக்கூட்டத்தின் சார்பில் செய்து வருதலும் அன்பர்க ளறிந்த தொன்றேயாம். ஈண்டு இவைகளை யெல்லாம் எடுத்து விரித்துரைப் பதன் காரணம், நமது சைவப் பெருமக்க ளனைவரும் முதற்கண் இதனைச் சிந்தனையிலாவது வைத்துச் சிறிது சிறிதாகவாவது செய்கையிற் காட்ட முன் வரல் வேண்டும் என்பதே யாகும். மேலும் பல நோய்களால் வருந்தும் ஓருயிர்க்கு எல்லா நோய் களுந் தீருமாறு மருந்து கொடுத்தாலொழிய, ஒன் றினைமட்டுந் தீர்க்கத்தக்க மருந்தைக் கொடுப்பதிற் பயனில்லை. ஒன்று தீர்ந்தாலும் மற்றொன்று துன் புறுத்தும். எனவே, நமது சமய வளர்ச்சிக்குரிய எல்லாச் சீர்திருத்தங்களையும் நாம் செய்தே தீருதல் வேண்டும். நமது சைவப்பயிர் பரிபாலிப்பாரின்றி இதுபோழ்து பல்வகையானும் தளர்வுற்று வாடி நிற்கின்றது. மேலும் பல்வகைக் களைகள் அதனைப் பெரிதும் துன்புறுத்துகின்றன. ஒருபக்கம் சுமார்த் தக் குழப்பம் அதனை விழுங்கிக்கொண் டிருக்கின்றது. ஒரு பக்கம் கிறித்தவமதம் அதனைச் சூழ்ந்து கொண்டு காடாக வளர்ந்து வருகின்றது. ஒருபுறம் "எம்மத மும் சம்மதம்" எனும் புதுக்கொள்கைகள் அதனைப் பறக்கச் செய்கின்றன. நமது மக்களிற் பலர் சமய ஞான மின்மையால், தம துரிமைப் பொரு ளியா தென்பதை உணராது வீண்பொழுது போக்குகின் றார்கள். படித்தவர்களிலும் பிரபுக்களிலும் பெரும்

பாலோர் அயர்ந்து உறங்குகின்றார்கள். திருமடங்க ளெல்லாம் வெறும் மடங்களாகி வருகின்றன. சைவ நூற் பயிற்சியும் சைவக் கொள்கைகளும் பெரிதும் அருகிவருகின்றன. அன்பர்களே! இதுவோ நாம் அயர்ந்து உறங்குதற்குரிய காலம்? எழுமின்! எழு மின்! விழிமின்! அறிமின்! சைவப் பயிரைப் பரி பாலியுங்கள்! பரிபாலியுங்கள்!! நாடெங்கணும் சிவ முழக்கஞ் செய்யுங்கள்! பரந்த நோக்கத்தோடு சண்டை சச்சரவின்றி, விரிந்த நமது சமயக் கொள் கைகளை யாண்டும் செய்கையிற் பரப்புங்கள். வீண் பெருமை பேசுவதிற் பயனில்லை! பேச்சுக்காலம் பறந்துவிட்டது. செய்கைக் காலம் பிறந்திருக்கின் றது. எனவே, எல்லோரும், "செய்கை செய்கை" யென்று சிந்தனை செய்துகொண்டு சிவநெறியை வளருங்கள்! வளருங்கள்.

"வைய நீடுக! மாமழை மன்னுக!
மெய் விரும்பிய அன்பர் விளங்குக!
சைவ நன்னெறி தாந்தழைத் தோங்குக!
தெய்வ வெண்டிரு நீறு சிறக்கவே."

திருச்சிற்றம்பலம்

திருநெல்வேலி சைவ சித்தாந்த சங்க வெளியீடு—௪

உ

திருச்சிற்றம்பலம்

# மாதிருக்கும் பாதியன்

அல்லது

# அர்த்தநாரீசுவரர்



இது

கோயமுத்தூர் வழக்கறிஞர்
திரு. C. K. சுப்பிரமணிய முதலியாரவர்கள்
B.A., F. M. U.

இயற்றியது



திருநெல்வேலி
சைவ சித்தாந்த சங்கம்
இரக்தாக்ஷி௵ வைகாசி௴

உ

திருச்சிற்றம்பலம்

# மாதிருக்கும் பாதியன்

அல்லது

# அர்த்தநாரீசுவரர்

"தோலுந் துகிலுங் குழையுஞ் சுருள்தோடும்
பால்வெள்ளை நீறும் பசுஞ்சாந்தும் பைங்கிளியும்
சூலமுந் தொக்க வளையும்உடைத் தொன்மைக்
கோலமே நோக்கிக் குளிர்ந்தூதாய் கோத்தும்பீ"

என்பது திருவாசகம்

பரமேசுவரனது திருவுருவமானது திருமுடியி லிருந்து திருவடிவரையிலே இடது பாகம் பெண் உருவ மாகவும் வலது பாகம் ஆண் உருவமாகவும் இணைந்தும் பிணைந்தும் இருக்கின்றதாக நமது தமிழ் மறைகள் எங்கே பார்த்தாலும் போற்றுகின்றன.

"தோடுடைய செவியன்", "மாதொர் பாகம்", "உமை பாகம்", "கொத்தார் மலர்க்குழலாளொரு கூறாய்" என்பனவாதி தமிழ் மறைக் கூற்றுக்களை எண்ணி யளவிட முடியாது. எங்கே பார்த்தாலும் எம்பெருமானது இந்த இலக்கணம் போற்றிப் பரவப்பெறும்.

ஆனால் உலகத்திலே ஆண் உருவமோ அல்லது பெண் உருவமோ பார்க்கின்றோமே யன்றி இப்படி ஒருபாதி ஆணும் ஒருபாதி பெண்ணுமாகிய ஓர் உருவம் எங்கும் காண்கின்றதில்லையே. இப்படி எங்கும் காணாத ஓர் உருவத்தை இறைவன் திருவுருவமாக வணங்குவது என்ன? என்று பிறமதத்தவர்களும் அவர்களுடைய நவீன நாகரிகத்துக் குட்பட்டு வீழ்கின்ற நம்மவர்களும் சங்கை கொள்கின்றார்கள். இவர்கள் சங்கையானது அறியாமையேயாகும் என்று காட்டச் சிறிது ஆராய்வோம்.

மனித உடம்பின் அமைப்பையும் மற்றும் பௌதிகங்களின் அமைப்புக்களையும் பார்ப்போமானால் ஒவ்வொரு உடம்பும் இருவேறுவகை ஒட்டுக்களாக அமைக்கப் பெற்றிருத்தல் நன்கு விளங்கும். ஆணும் பெண்ணும் சேர்கின்ற வகையிலே யன்றித்

“தெரிவாக ஊர்வன நடப்பன பறப்பன
செயற்கொண் டிருப்பன”

முதலிய எவற்றிலும் உண்டாவன வேறு இல்லை. இவ்வாறு சேர்க்கையிலே உண்டாகின்ற உடம்புகள் ஒவ்வொன்றும் தத்தம் தாயும் தந்தையும் ஆகிய இருவகை இயல்பும் பொருந்தியே நிற்கவேண்டும் என்பது நியாயம். அப்படியே தான் உலகத்திலே உள்ள உடம்புகள் எல்லாம் ஒட்டுக்களாய் உள்ளன. ஒட்டு மாம்பழங்களை உதாரணமாய்ப் பார்த்தால் ஒவ்வொரு பழத்திலும் ஒருபாகம் இனிப்பும் ஒருபாகம் புளிப்புமாக இருவேறு குணச்சேர்க்கையும், ஒருபாகம் நாருண்மையும் ஒருபாகம் நாரின்மையுமாக

இருவேறு உருவச் சேர்க்கையும் காணலாம். இவ்வகையிலே உருவமும் குணமும் ஆகிய சேர்க்கைகள் ஒரே பழத்திலே எப்படி உண்டாயின? அந்த மரத்தின் தாய் தந்தையாகிய இருவேறு வகைகளின் சேர்க்கையே இதற்குக் காரணம். தன் மூலத்தை இந்த மாம்பழம் காட்டி நிற்கிறது. இது போலவே இனி மனித உடம்பை ஆராய்வோமானால் அது வலப்பாகமாகிய ஆண்பாகமும் இடப்பாகமாகிய பெண்பாகமும் என்ற இருவகையும் ஒட்டி நிற்கின்றது என்று உடல் நூலார் சொல்வார்கள். இவ்வுண்மையை மருத்துவ நூல்கள் உறுதிப் படுத்துவன. ஆண் மக்களுக்கு வலப்பாகத்தில் பற்றிய நோய் வலிமைபெறும் என்றும் அதற்குத் தீர்வு அரிதாகும் என்றும் இடப்பாகத்திற் பற்றிய நோய்க்குத் தீர்வு எளிதென்றும் மருத்துவர் கூறுவர். நோய்களின் சாத்திய அசாத்திய வகையைக் கூட அஃது உடம்பிலே பற்றி நிற்கும் பாகத்தை நோக்கி நிச்சயிப்பர். பட்சவாத நோய் ஆண்மக்களை வலப்பாகத்திலே பற்றினால் அசாத்தியமென்பர். இடப்பாகத்தைப் பற்றி நின்றால் சாத்தியமென்பர். இக் கருத்தை உள்ளிட்டே சாத்திர வல்லவர்களான சமணர்கள் திருஞான சம்பந்த சுவாமிகளுடன் வாதத்துக்கு ஏற்றபோது,

"........தென்னர் தோன்றலை நோக்கி நாங்கள்
உன்னுடம் பதனில் வெப்பை ஒருபுடை வாமபாகம்
முன்ன மந்திரித்துத் தெய்வமுயற்சியாற் றீர்த்து"

மென்றார்.

ஆண் உடம்பிலே வலப்பாகத்து நோய்த்தீர்வு அரிதாதலால் அது சுவாமிகள் செய்யட்டும் என்ற உட்கருத்

துடனே எளிதாகிய இடப்பாகத்து நோயை நாங்கள் தீர்ப்போமென்று சமர்த்தாக முந்திக்கொண்டார்கள் என்று தெரிகிறது.

இதுவரை உருவச் சேர்க்கையைப் பற்றிப் பேசினேம். இனி அதன் குணச் சேர்க்கையாகிய சத்தியை ஆராய்வோம். மின்சாரம் என்பது ஒருவகைச் சக்தி. அஃது ஆண் பெண் (positive and negative) என்று இரு வேறு வகைப்படும் என்றும், அவையிரண்டும் ஒன்று சேர்ந்தால்தான் மின்சார ஓட்டம் (current) ஏற்பட்டு நமக்கு ஒளி முதலிய உபகாரங்களைத் தருகிறதென்றும் தத்துவ சாத்திரிகள் சொல்கிருர்கள். நமது உடம்பிலேயும் இவ்விதமாக ஒருவகை மின்சார சக்தி பரவியிருக்கிறதென்றும் அதுவே உயிரின் நிலைபேற்றுக்குக் காரணம் என்றும் உடல் நூலார் கூறுவர்.

நமது உடம்பானது கருவிலே அமைந்து வளர்கின்ற வகையைப்பற்றி ஸ்ரீ வாகீசப் பெருந்தகையார்,

“கருவாகிக் குழம்பிருந்து கலித்து மூளை
கருநரம்பும் வெள்ளெலும்பும் சேர்ந்தொன்றாகி
உருவாகிப் புறப்பட்டு.........”

என்று அருளிச் செய்கிருர்.

தாங்குதற் சத்தியும் அறிதற் சத்தியுமாகிய இரு வகைச் சத்திகளும் கருவிலேயே அமைந்தன. பின்னர் உடற்கூறு முதிர்ந்து வளரத் தாமும் உடன் வளர்ந்து உடம்பிற் பரவிய உயிர்ச்சாரமாகிய மின்சாரமாய் விளங்குகின்றன. இதுவே

"உரைச்சேரு மெண்பத்து நான்கு நூறுயிரமாம் யோனி பேதம், நிரைச்சேரப் படைத்தவற்றின் உயிர்க் குயிரா யங்கங்கே நின்றான்" என்று ஸ்ரீ ஞான சம்பந்த மூர்த்திகளும், "பந்தணை விரலியும் நீயுநின் னடியார் பழங்குடில் தொறுமெழுந் தருளிய பரனே" என்று ஸ்ரீ மணிவாசகப் பெருமானும் அருளிச் செய்தபடி இறைவன் சத்தி சமேதனாகச் சகல சீவராசிகளுக்குள்ளும் உயிர்க் குயிராய் நின்று இயக்கும் தன்மையாம்.

இவ்வாறு உருவத்தாலும் சத்தியினாலும் ஒருபால் (வலம்) ஆணும், ஒருபால் (இடம்) பெண்ணுமாக ஒட்டிச் சேர்ந்துள்ள உடம்புகள் தானே நாம் சராசரங்க ளனைத் திலும் காண்கின்றோம். உலக மெல்லாம் இறைவன் திரு வுருவமாகக் கண்டு "பார்த்த இடமெல்லாம் பரவெளி யாய்ப்" பார்க்கின்ற உத்தமர்கள் இதன் உண்மையை அனுபவத்திலே காண்பார்கள். உலகமெல்லாம் பரமேசு வரனுடைய நிறைவே; எல்லாம் அவனுடைய திருவுரு வமே. இவ்வாறு உலக மெல்லாம் "தானும் தன் தையலு மாய்" வியாபித்து நிற்கும் தன்மை பரமேசுவரனுக்கே உரியது. வேறெந் தெய்வத்துக்கும் இல்லை. இதைத் தான் திருமூலநாயனார், 'எங்கும் திருமேனி' என்று குறிப்பிட்டார் போலும். பரமேசுவரனது சர்வவியாபகத் தன்மையும் இதிலிருந்து விளங்குவதாகும்.

இந்தக் காட்சிதானும் இறைவன் றிருவருள் வழி அவனருளே கண்ணாகக் காண்பார்கள். பரமேசுவரனு டைய ஆணையின்படியே இக் காட்சியை நமது வாகீசப்

பெருந்தகையார் திருவையாற்றிலே கண்டார். உலகத்திலே உள்ள எல்லாச் சீவராசிகளும் ஆணும் பெண்ணுமாகத் தத்தம் துணைகளோடு விளங்குவதானது பரமேசுவரனாகிய கயிலை நாயகன் சத்தி சிவமாக எழுந்தருளியிருக்கும் தன்மையேயாகும் என்ற காட்சியை நேரே கண்டு பணிந்தார்.

"மிடையு நீள்கொடி வீதிகள் விளங்கிய ஐயாறு
உடைய நாயகர் சேவடி பணியவந் துறுவார்
அடைய அப்பதி நிற்பவுஞ் சரிப்பவு மான
புடைய மர்ந்ததந் துணையோடும் பொலிவன கண்டார்" (373)

"பொன்மலைக் கொடியுடனமர் வெள்ளியம் பொருப்பிற்
றன்மையாம் படிசத்தியும் சிவமுமாம் சரிதைப்
பன்மை யோனிகள் பயில்வன பணிந்தே
மன்னு மாதவர் தம்பிரான் கோயின்முன் வந்தார்" (374)

என்பது பெரியபுராணம். இவ்வாறு சராசரங்க ளனைத்தும் சத்தியும் சிவமும் இணைந்த திருவுருவமாகத் தரிசித்ததனால் தான் நமது வாகீச மூர்த்திகள்,

"............ஐயாறடை கின்றபோது
காதன் மடப்பிடியோடுங் களிறு வருவன கண்டேன்
கண்டேனவர் திருப்பாதம் கண்டறி யாதன கண்டேன்"

"கோழி பெடையொடுங் கூடிக் குளிர்ந்து வருவன கண்டேன்
கண்டேனவர் திருப்பாதம்"

"வரிக்குயில் பேடையொடாடி வைகி வருவன கண்டேன்
கண்டேனவர் திருப்பாதம்"

"பேடைமயி லொடுங்கூடிப் பிணைந்து வருவன கண்டேன்
கண்டேனவர் திருப்பாதம்"

"இடிகுர லன்னதோரேன மிசைந்து வருவன கண்டேன்
கண்டேனவர் திருப்பாதம்"

"கருங்கலை பேடையொ டாடிக்கலந்து வருவன கண்டேன்
கண்டேனவர் திருப்பாதம்"

என்று துதித்து வணங்கினர்.

இவ்விதமாக நிற்பவும் சரிப்பவுமாகிய உயிர் வர்க்கங்கள் ஆணும் பெண்ணுமாகப் பிணைந்தும் இசைந்தும் கலந்தும் சகிக்கின்ற காட்சியிலே இறைவனது திருப்பாதப் பொலிவாகிய திருக்கோலத்தையே கண்டாராதலின் "கண்டேனவர் திருப்பாதம்" என்று அருளினர். இக்காட்சி இறைவன் இவ்வாறு திருவையாற்றிலே "நம் காட்சி காட்டுவோம் காண்பாய்" என்று அருள் செய்து காட்டுவதற்கு முன் காணக் கிடைக்காமல் அவனருள் வழியே காணக்கிடைத்த தாதலின் "முன் கண்டறியாதன கண்டேன்" என்றும் அருளினர்.

ஆனல் இத் திருவுருவத்தைப் பரமேசுவரன் எப்போது மேற்கொள்வார் என்று பார்ப்போம். இவ்வுலகமும் அதில் உள்ள சர்வ சிருஷ்டிகளும் ஒரு காலத்திலே அழியும்: அதாவது மூலப்பகுதியிலே ஒடுங்கும். அம்மூலப்பகுதியாகிய மாயை தானும் பிரமா, விஷ்ணு, உருத்திரர், மயேசுரர், சதாசிவர் என்ற முறையிலே உள்ள மூர்த்திகளிற் படிப்படியாய் ஒடுங்கி முடிவிலே எல்லாம் ஆதி சத்தியில் ஒடுங்கும். அந்தச் சத்தி தானும் சுத்த சிவத்

திலே ஒடுங்கும். அப்போது சிவம் யாதொரு செயலு மற்றுப் பரவெளியாய் சுத்த அறிவு மயமாய் நின்று விளங் கும். உயிர்கள் செனன யாத்திரையில் இவ்வாறு ஒடுங்கி இளைப்பாறிய பின்னர் மீளவும் அவைகளுக்கு அனுக்கிரகம் செய்யும் பொருட்டுச் சிருட்டியாதி தொழில்களைச் செய்யத் திருவுளம்பற்றின அளவிலே பரமேசுவரன் அருளே திருமேனியாகக் கொண்டு சத்தி சமேதராக விளங் குவர். அதாவது அருளை மேற்கொண்டு நிற்பர். அது தான் ஞான சொரூபமாகிய சிற்சத்தி என்று சொல்லப் பெறும். "சத்தி தன் வடிவே தென்னிற் றடையிலா ஞானமாகும்" என்பது சாத்திரம். சிவத்திலிருந்து இப்போது சத்தி தோன்றிற்று. அதன்பின் ஒன்றன்பின் ஒன்றாக முன் ஒடுங்கிய அம் முறையிலே சதாசிவமாதி மூர்த்திகளும் மாயையும் புவனங்களும் தோன்றும்; உலகம் நடைபெறும். இவ்வாறு சிருட்டி யாரம்பத்தில் சத்தியோடு கூடி "மாதிருக்கும் பாதியனாய்" நின்ற இறைவன் மீண்டும் பிரளய காலத்திலே ஒடுக்க முறை யிலே "தானும் தன் தையலுமாய" எஞ்சி நிற்கின்ற அதுகாறும் இத் திருக்கோலமே தாங்கி நிற்பன். உலக சிருட்டிமுதல் உலக ஒடுக்கம்வரை அவன் பூண்டிருப்பது இத் திருக்கோலமேயாம். இஃது உயிர்களை வினைப்பயன் அனுபவிக்கச் செய்து உய்யக் கொள்ளும் பொருட்டு அவன் நிற்கும் நிலையா மென்பதை,

> "அவனே தானே யாயிரு வகையிற்
> போக்குவரவு புரிய ஆணையின் நீக்கமின்றி நிற்கு
> மன்றே"

என்னும் சூத்திரம் விளக்கும். ஆகவே மகாப்பிரளய ஒடுக்கத்திலிருந்து மீளச் சிருட்டியாகும் வகையிலே எல்லாம் தன்னுள் ஒடுக்கி ஏகனாய் நிற்கும் அந் நிலையிலேயன்றிப் பிறிதெல்லாக் காலத்திலும் இக் கூடிய கோலமே கொண்டு பரமேசுவரன் விளங்குவன். ஆதலின் இஃது அவனுக்குப் பழையகோலமாயிற்று என்பது குறித்தே இக் கோலத்தைத் "தோன்மைக்கோலமே" என்று அருளினார் ஸ்ரீமணிவாசகப் பெருமானார்.

ஆன்மாக்கள் இத் திருக்கோலத்தை நேரே தரிசித்துத் தியானித்து உய்யும்பொருட்டு என்றும் அடியார்க் கெளிவரும் பெருமானாகிய பரமேசுவரன் சேலம் ஜில்லா கொங்கு நாட்டின் திருக்கோடிமாடச் செங்குன்றூர் (திருச்செங்கோடு) என்னும் திருத்தலத்திலே இத் தொன்மைக் கோலம் நேரே காட்டி நீற்றழகராய் வீற்றிருந்தருளுவர். இத் தலம் தென்னிந்திய இருப்புப்பாதையில் சங்ககிரி என்னும் (ஸ்டேஷனிலிருந்து) கிடையிலிருந்து 5 மைல் தூரத்திலுள்ளது. இத் திருக்கோலத்தை நேரே கண்டு தரிசித்தவர்கள் நாம் மேலே தலைப்பிற் காட்டிய ஸ்ரீ மணிவாசகப் பெருமானார் திருப்பாசுரத்தின் பொருளை அனுபவ சித்தமாகக் கண்டு உய்யும் பெரும் பேறு வாய்க்கப் பெறுவார்கள்.

இத் திருக்கோலத்தின் தொன்மையையும் மேன்மையையும் உலகமெல்லாம் தனது இலச்சினையையே பொறித்து விளங்கும் முதன்மையையும் கருதியே இதனைப் பலபடப் பாராட்டிப் பேசுவர் எந்தம் பெருமக்க

ளாகிய ஆசாரிய மூர்த்திகள். இதனை எப்போதும் தம் கண்முன்னே காணப்பெற்றுப் பன்னிப் பன்னிப் பாடிக் களிகூறுவர். உதாரணமாக ஸ்ரீ பட்டினத்தடிகள் திரு வாய் மலர்ந்தருளிய திருவிடைமருதூர் மும்மணிக்கோவை முதற் பாசுரத்தை வாசிப்போமானால், இத் திருவுருவத் தைத் திருமுடி முதல் திருவடிவரைத் தியானித்துத் தரி சித்து,

“ திருவடி பரவுதும் யாமே நெடுநாள்
இறந்தும் பிறந்து மிளைத்தனம் மறந்தும்
சிறைக் கருப்பா சயஞ் சேரா
மறித்தும் புகாஅ வாழ்வுபெறற் பொருட்டே ”

என்று துதித்து வாழ்வுற்ற பெருமை தெரியலாம்.

நாமும் அவ்வாறே உணர்ந்து உய்வோமாக.

சைவ சித்தாந்த நூற்பதிப்புக் கழக வெளியீடு

ஸ்ரீமாதவச் சிவஞானசுவாமிகள்

மொழிபெயர்த்தருளிய

# சிவதத்துவவிவேகம்

திருநெல்வேலி இந்துகலாசாலைத்

தமிழாசிரியர்

வி. சிதம்பர ராமலிங்கபிள்ளை யவர்கள்

எழுதிய

அரும்பொருள் விளக்கத்துடன்



திருநெல்வேலித்

தென்னிந்திய சைவசித்தாந்த நூற்பதிப்புக் கழகம்

லிமிட்டெட்

உருத்ரோத்காரி௵—புரட்டாசி௴.

# பதிப்புரை

சிவதத்துவ விவேக மென்னும் நூல் வடமொழியில் அப்பதீக்ஷிதராற் செய்யப்பெற்றது. அது சிகரிணி யென்னும் பாவாற் செய்யப்பட்டமையின் சிகரிணிமாலை யென்றும் வழங்கப்படும். நூலாசிரியராகிய அப்பதீக்ஷிதரே அதற்கு உரையும் வகுத்தனர்.

அந்நூல் பூர்வபாகம் உத்தரபாக மென்னும் இரண்டு பிரிவுகளை யுடையது. பூர்வபாகத்தில் பிரபல சுருதியாகிய உபநிடதங்களுட் சிறந்த அதர்வசிகை, சுவேதாச்சுவதரம் அதர்வசிரசு, கைவல்லியம், தைத்திரியம், பிருகதாரணியம், மாண்டூக்கிய மென்பவற்றின் பொருள் ஆராயப்படுகின்றது: உத்தரபாகத்தில் புராணம், இதிகாசம், மிருதி, கீதை முதலியவற்றின் பொருள் ஆராயப்படுகின்றது. இவ்வாராய்ச்சியால் சிவபெருமானே வேத முதலிய அனைத்து நூல்களானும் கூறப்பட்ட முதற் கடவுளென்பது நிலைநிறுத்தப் படுகின்றது. ஆதலின் அந்நூல் சைவ சமயத்தார் சிவபெருமானது பெருமையை யுணர்ந்து அப்பெருமானிடம் அன்பு செலுத்தற்கண் அவர்களை ஊக்கிநிற்கும் சிறப்பு வாய்ந்ததாகின்றது.

இவ்வாறாயினும் அந்நூல் வடமொழியி லிருத்தலின் அது வடமொழி வல்லார்க்கே பயன்படுவ தாகின்றது. தமிழும் சைவமுஞ் செய்த தவப்பயனாக அவதரித்தருளிய ஸ்ரீ பாஷ்யகாரராகிய மாதவச் சிவஞான சுவாமிகள், வடமொழிப்பயிற்சி மிகவும் குன்றிவருங் காலநிலையைத் திரு

வுளங்கொண்டு தமிழொன்றே வல்லவர்களும் அந்நூற் பயனை யடையவேண்டுமென்னும் பெருங்கருணையால் அவ் வடமொழிநூலைத் தமிழிற் சிவதத்துவ விவேகமென்னும் பெயரால் மொழிபெயர்த் தருளினார்கள். சுவாமிகள் பெருங் கருணை காரணமாகவே அதனை மொழிபெயர்த் தருளினார்களென்பது அதனை வாசிப்பவர்கட்கு நன்கு விளங்கும். அத்துணை எளிய நடையும் இனிமையும் தெளிவு முள்ளது அம்மொழி பெயர்ப்பு.

தமிழ்ச் சிவதத்துவவிவேகம் இதற்கு முன்பு பலராலும் அச்சிடப்பட் டிருக்கின்றது, சமயநூற்கல்வி யருகிய இக் காலத்தில் அதற்கோர் குறிப்புரை யெழுதி வெளியிடல் மிகுந்த நன்மை தருமென்பது எங்கள் கருத்து. இக் கருத் திற் கிணங்கித் திருநெல்வேலி இந்து கலாசாலைத் தமிழ்ப் போதகாசிரியர் திருவாளர். வி. சிதம்பரராமலிங்க பிள்ளை யவர்களால் அரும்பொருள் விளக்கம் எழுதப்பட்டு எங்களது இப் புதிய பதிப்பிற் சேர்க்கப்பட் டிருக்கின்றது. அவர் களுக்கு யாங்கள் எங்கள் மனமார்ந்த நன்றியைச் செலுத்து கிறோம்.

ஸ்ரீ மாதவச் சிவஞான சுவாமிகள் அருளிச்செய்த ஏனைய பிரபந்தங்களையும் இவ்வாறே அரும்பொருள் விளக்கத் துடன் வெளியிடக் கருதியிருக்கின்றோம். எல்லாம் வல்ல சிவபெருமான் எங்கள் நன்முயற்சி முற்றுமா றருள்செய்ய அப் பெருமானது திருவடிகளைச் சிந்திக்கின்றோம்.

திருநெல்வேலி,
15-10-1923.

சைவ சித்தாந்த நூற்பதிப்புக் கழகத்தார்.

உ

சிவமயம்

திருச்சிற்றம்பலம்

# சிவதத்துவவிவேகம்

---

## பாயிரம்

உலகெ லாந்தன தொருசிறு கூற்றினு ளமைய
வலகி லாற்றலா னிறைந்தவ னெனவரு ணூலோர்
குலவி யேத்துவோ னெவனவ னுமையொரு கூற்றி
னலர்க ளைக்களச் சிவபிரா னடியிணை போற்றி. (க)

வேறு

செவியுற வாங்கி மோகத்
திண்படை சிலையிற் பூட்டுங்
கவிகைவேண் மடியச் சற்றே
கறுத்தியோ குறையும் பெம்மான்
குவிதழை நிறையப் பூத்த
கோழிணர்ப் பதுமச் செங்கே
ழவிர்தரு விழித்திக் கென்றன்
வினையிலக் காகு மாலோ. (உ)

வேறு

திருமாலின் திரன்பிரம னுபமனியன் றபனனந்தி
செவ்வே ளாதித்
தருமமுது குரவருக்குந் தனதருளா லாசிரியத்
தலைமை நல்கி
வருமெவர்க்கு முதற்குருவாய் மெய்ஞ்ஞான முத்திரைக்கைம்
மலரும் வாய்ந்த
வுருவழகுங் குறுநகையுங் காட்டியரு டருஞ்சிவனை
யுளத்தில் வைப்பாம். (௩)

வேறு

எல்லை யில்கலை யென்னுங் கொடிபடர்
மல்லல் வான்கொழு கொம்பரின் வாய்ந்தருள்
கல்வி ஞானக் கடலமு தாயசீர்
பல்கு தேசிகர் பாத மிறைஞ்சுவாம். (௪)

வேறு

மறைமுடிவிற் பயில்கருத்து
மன்னியமெய்ப் பொருள்விருப்புங்
கறைமிடற்றோன் றிருவடிக்கீழ்
மெய்யன்புங் கடுந்துயர்நோய்
பறையவரு மிம்மூன்றும்
பரிந்தியல்பாக் கிடைத்தமன
நிறைவுடையோ ரேவரவர்
நீடூழி வாழியவே. (௫)

## வேறு

பரசி வன்றன துயர்ச்சியே தெரிப்பதிற்
பகரொருப் பாட்டிற்று
யரிய கால்கதிர் வியாதனு தியர்மொழி
யால்விளங் கிடுசீர்த்தாய்த்
திரிவு காட்சிய ருளத்துறு தறிங்கர்
செம்பொருட் கோவைத்தாய்
விரியு நீருல கினுக்கிதந் தருமுதல்
வித்தையோங் குகமாதோ. (சு)

## வேறு

எட்படுநெய் யெனவுயிருக் குயிரா யெங்கு
மேகமாம் பசுபதிதா ளேத்துஞ் செய்யுள்
விட்பருமுண் ணிறைந்தபொருட் சுவைய வாகி
மேலோர்தம் வழிச்செல்லு மறுபா னுக்கு
முட்கருத்து வெளிப்படுப்ப விழிந்த மார்க்கத்
துழல்வோர்தம் பிதற்றுரைகட் கணுகொ ணாத
நட்புடைய வுரையீண்டுச் செய்ய லுற்றே
னல்வழிச்செல் லறிவாளர் நயக்கு மாறே. (எ)

# நூல்

## பூர்வபாகம்

நின்பெருந் தன்மை வானவர் தமக்கு
நிகழ்த்தரி தாதலின் மனித
னன்பொடும் வழுத்த விழைந்திடி னதையே
யடைவதற் கையமின் றேனு
முன்பெயர் கருதும் பெருந்தவம் வருவா
யொருவழி யாற்கிடைத் திடுக
வென்பதோர் மதிவந் தெனையீர்த் தெழுமா
லெங்கணு நிறைந்தபூ ரணனே. (க)

விச்சுவா திகனும் விசுவசே வியனும்
விமலநீ யேயென மறைக
ணிச்சய மாக முழக்கவு மறியா
நீசர்தாம் பிணங்குவ ரந்தோ
மச்சரத் துனக்கே தீங்கிழைத் தவர்தம்
வாழ்க்கையும் பயன்படா தாலத்
துச்சர்சொற் கேட்டோர்க் கிறுத்லே தண்டஞ்
சொற்றிடு நூலெலா மன்றே. (உ)

ஏழைய ரிருகாற் பசுக்கண்மற் றிவரா
லியன்றிடத் தக்கதொன் றிலையே
வாழிய நலந்தீங் கறிந்துயி ரியற்ற
வல்லதோ யாங்கணும் விரவிச்
சூழுநீ யெவ்வா றசைத்தனை யவ்வா
றசைதலிற் சுதந்திர மிலதாற்
பாழிமால் விடையா யவ்வுயி ரந்தோ
பழித்திடுந் தகையதொன் றன்றே. (ங)

கீதநான் மறையு ளோரொரு விதிவாக்
கியங்களைப் பற்றிநல் வேள்வி
யாதிக்ண் முயலத் துணிபவ ரெல்லா
வருமறை முடிவினு முழக்கு
மேதகு முனது தலைமையைத் துணியா
தொழிவரோ விளங்கிழை யொருபா
னுதனே யவர்தாம் பரவசத் தினராய்
நணுகில ராயிடின் மன்றே. (௪)

உன்றனை யெதிரே கண்டுமம் புயத்தோ
னுணர்ந்திலன் மால்சொல வுணர்ந்தான்
வென்றிவெள் ளானைப் பாகனு முமையாள்
விளம்பிடத் தேர்ந்தன னிமலா
மன்றலந் துளவோ னயனுட னுன்னுன்
மயக்கறத் துணர்ந்தன னென்று
மின்றனை யேழை மானுட ரறியா
ரென்பது மாயவேண் டுவதோ. (௫)

உன்றிரு வடிக்கீ ழுறுதியா மன்பு
முன்றிரு வருளினாற் கிடைப்ப
தன்றிநூல் பலவு மாய்ந்ததா லுரைசெ
யளப்பருந் திறமையான் மதியான்
மன்றவே கிடைப்ப தன்றுமற் றதனை
மாதவஞ் செய்திலாக் கயமை
துன்றிய புலையோர் யாங்ஙனம் பெறுவார்
சோதியே கருணைவா ரிதியே. (௬)

உலகர்சே ருறுதிப் பயனெவற் றினுக்கு
முறைவிட மாய்த்துயர் முழுதும்
விலகுறத் துமிக்குங் கணிச்சியா முன்றாள்
விரைமலர்க் கியற்றுமெய்ப் பத்தி
பலகிலாப் பிறவி தொறும்புரி தவத்தா
லல்லதெவ் வாற்றினு மரிதே
நலமதொன் றடைதற் குறுமிடை யூறு
நாதனே பலவுள வன்றே. (எ)

பலவகைப் பவந்தோ றெய்திடுந் தவத்தோர்
படர்ந்தெழு மகத்திருள் கடிந்தோர்
நலமுறு மியம நியமநற் செய்கை
நயந்துளோ ருனைப்பெற முயல்வார்
கலியுறு கனவசே ருளத்தவ ரசுரக்
கடுமையர் ததீசியா திகளா
லலமரச் சபிக்கப் பட்டுளோ ரெவ்வா
றறிவரோ வையநின் றனையே. (அ)

அளவிலுன் பெருமை யறியவு முன்றாட்
கழிவிலா வன்புவைத் திடவுந்
தளமல ரெடுத்துன் னருச்சனை யாற்றிச்
சாலநின் றிருவருள் பெறவும்
வளமலி புலியூ ரம்பலத் தமுதே
மலர்தலை யுலகினுட் சுரும்ப
ருளர்துழாய்ப் படலை மார்புடை யண்ண
லொருவனே வல்லனு மன்றே. (கூ)

## சுருதிப்பொரு ளாராய்தல்

தணப்பிலா நிரதி சயமதாஞ் சச்சி
தானந்த வடிவமாய்த் துவிதப்
பிணக்கிலி பரமான் மாவெனுந் தகைத்தாய்ப்
பிரத்தியக் காயுப நிடதத்
திணக்குறு மகண்டப் பொருள்களா லுணரு
மியல்பதா யனந்தமா யோங்குங்
குணிப்பருஞ் சோதி யாகிநிற் கின்றாய்
கோதிலாச் சிவபரம் பொருளே. (ய)

குணங்களைக் கடந்தோ யெனினுமா யையினைத்
தோய்தலாற் குணமுடை யவன்போ
லணங்கொரு பாலுங் கறைமிடற் றழகு
மம்பக மூன்றுமா முருக்கொண்
டிணங்குறு நாமஞ் சிவன்பவன் முதலா
வியைந்தய னரியரன் மூன்று
முணங்கிடா வுலகை நடாத்துவோ னாகி
யோங்கினை நீங்கரும் பொருளே. (கக)

## அதர்வசிகை

முளரியோன் முதலாஞ் சுரரெலாம் பூத
முதலவற் றொடுதித் துள்ளோ
ரளவிடுந் தலைமை யாளரென் றவரை
யகற்றிமால் விடையவ னினையே
வளமுறு மெல்லாத் தலைமையு முடையோன்
வருமுதற் காரண னல்லோ
ருளமுறு தியானப் பொருளெனச் சிகைதேர்ந்
துரைப்பவு மயங்குவர் சிலரே. (கஉ)

மறையகத் தெல்லாத் தலைமையோ டொருபால்
வகுத்திடுங் கேவல மதுதா
னிறைவனே யிவ்வா றம்புயன் முதலோ
ரினும்பிரித் துத்தியால் விளக்கா
தறைதரு மிதனுன் மூாணுழி வேறோ
ராற்றினாற் போக்கவற் றுமற்
கறையிடற் றடக்கி யேழைவா னவரைக்
காத்தருள் கருணைமா கடலே. (கரு)

கதித்தெழும் பொருளா லுணைவிளக் கிடுங்கா
ரணபத மனுவதிப் பென்றுப்
பொதுக்குணம் பொதுச்சொற் பற்றியே தொடக்கம்
புகல்பொருண் மாயவன் றனே
யிதற்கெனத் துணியா விறுதியும் வலியா
லிம்முறை யேற்றிமற் றொருவ
னதிர்ப்புற மருளின் மருளுக பிறரு
மந்நெறிப் படருமா றவனே. (கச)

## சுவேதாச்சுவதரம்

தற்பரா வுலகுக் காதிகா ரணந்தான்
றலைமையி லுயிருடன் சடத்தைச்
சொற்றிடிற் பழுதாற் பிரமமா மெனவே
துணிந்துபின் பிரமமா ரென்றுய்
வுற்றிடு மான்றோ ருமையரு ளோக்கா
லுணர்ந்தனர் நீயென வென்று
வற்புறச் *சுவேதாச் சுவதர மென்னு
மறைமுடி வுரைத்திடு மன்றே. (கரு)

* சுவேதாச்சுவதரந் தமது என்பதும் பாடம்.

படைப்புறு முறைமை சொலற்கெழுஞ் சுருதிப்
பரப்பெலாம் பிறிதொன் றன் பொருட்டாய்க்
கிடைத்தலா லவற்றுட் கார ண பதத்தைக்
கிளத்தலாந் தன்பொருள் படாமை
விடைக்கொடி யாயீண் டீசனென் றரனென்
றெடுத்துமெய்க் காரணந் துணிதற்
கடுத்தெழு மொழியுந் தன்பொருள் படாதே
லாவினித் துணிவென்ப தெங்கே. (கசு)

இதனுளெப் போது தமமது பகலன்
றென்னுமந் திரமுனை யுணர்த்தி
யிதமுறு மேனைக் காரண மொழிகள்
யாவுநின் பாலுறச் செலுத்தி
மதமுறு மருளோ ரவற்றினைப் பிறர்மேல்
வகுப்பதைப் பயன்படா தாக்கு
மதனுடல் பொடிப்ப நுதல்கிழித் தெழுந்த
வாளெரி காட்டிய முதலே. (கஎ)

மனுவிதிற் சிவச்சொல் வேறுள சுருதி
யாம்புரோ வாதத்திற் றெரிக்கும்
புனிதமாம் பொருளே சாற்றிடு மெனிலெப்
போதினு மாதிகா லத்தை
யனுவதித் துன்ற னுண்மையை விதியா
தாயின்மற் றென்செயப் புகுந்த
தினியபே ரின்பத் தண்ணருள் கொழிக்கு
மெம்பிரா னிந்தமந் திரமே. (கஅ)

பெரிதுமா னத்தா லுயர்ந்தவள் பிறரைப்
　　பேசிடா வரன்சிவன் முதலா
மரியநின் ளுமக் குருமணிக் கோவை
　　யாலுடன் முழுதலங் கரித்தாள்
கரியவற் கரியாய் நின்னொடொப் பவரே
　　கருதினு மிலையெனத் துணிந்துன்
றிருவடிக் கேதன் கருத்தெலா மமைத்தாள்
　　சீருப நிடதமா மிவளே. (க௯)

புருடசூத் தத்தின் மந்திர மிதனுட்
　　பொருந்தினு முனைக்குறித் திடும்பல்
சுருதியா னியமித் ததனையெவ் வாறு
　　தூரக்குமிம் மறைமுடி வதாஅன்று
திருவுருத் திரத்து மந்திரம் பலவுஞ்
　　சிறப்பவீண் டுறுதலா லறியாக்
குருடர்தா மதனைத் துணிவது தகுமோ
　　கோமளக் குணப்பெருங் கடலே. (உ௦)

உருத்திர மனுக்கண் முன்னரும் பின்னும்
　　முரைக்குமீண் டாதலா லிவைதாந்
தெரித்துற விளக்கு நின்றிருப் பெயராற்
　　சிறத்தலா லுருத்திர மோதல்
கருத்தனை முனக்கே நிச்சயித் ததனாற்
　　கதம்பயி லெறுழ்விடைப் பாகா
வருத்தியா லவற்றை யுரைத்ததே யீண்டைக்
　　களந்தறிந் திடச்செயு மெமக்கே. (உக)

உரைக்குமீ சானச் சுருதியாற் றெரிக்கு
முன்னிடத் தெய்துமென் பதுவே
பொருத்தமாம் புருட சூத்தத்தின் முடிவு
புனைமலர்க் கருங்குழல் பாகா
விருப்புறு மேனோர் பூசனை விதியுள்
விளம்பினு மவ்விதிக் கேற்பக்
கருத்துறும் பொருட்டுப் பொருள்விரித் தறவோர்
காட்டினு மிதுவழுப் படாதே. (உஉ)

அதர்வசிரசு

அனைத்துயிர் களுமாந் தன்மையும் விண்ணோ
ராற்றொழு தகைமையு மரனே
யுனக்குரைத் தயன்மான் முதலியோ ருனது
விபூதியென் றோதியுன் பெயர்கட்
கினப்பொரு ளுரைக்குங் கடமையா லுன்ற
னிறைமையே குறித்துநின் பெருமை
சினத்தொகை யகலத் தேற்றுமா லதர்வ
சிரோபநி டதமுழு வதுமே. (உங)

நின்றுழி நின்று முடிவுகொள் ளாது
நீமறைந் தமைசொலுங் கிளவி
யுன்றனிக் கூற்று முடிவிடத் துய்த்துக்
கொண்டுகூட் டிடுந்தகைத் தாயுந்
தன்றன திடத்தே முடியுமீண் டெனுமிச்
சழக்குரை தேர்ந்திடிற் றலைவா
புன்றொழிற் கயவர் தமதறி யாமை
புலமையாய்ப் பரிணமித் ததுவே. (உச)

ஈண்டுநீ யாரென் றுன்னுருக் கடாவு
மிமையவர்க் கேனையோ ருருவை
யாண்டுநீ யிறுத்தா யெனில்வழு வாகா
தடுக்குமோ நீயுயிர்க் குயிராய்க்
காண்டக நிறைந்து மவனென யாரைக்
கழறுவ தோபெரு கன்பு
பூண்டவர்க் கெளியாய் கயவருக் கேனும்
பொருந்துமோ விச்சழக் குரையே. (௨௫)

அனைத்தினும் பிரமந் தனக்கதிட் டான
மறையுமந் திரங்களி னுனு
மூனறக்கரும் பரிதி மண்டலத் துறையு
மப்பொருட் குமைவிழி களிப்ப
மனக்கொரு வடிவஞ் செவியறி வுறுக்கு
மனுக்களி னுமெய் யடியா
ரினத்தனே நீயே யெங்கணு முறைவோ
னென்பதை யறியலா மன்றே. (௨௬)

ஐம்பெரும் பூத மிருசுட ரான்மா
வன்றிவே றுலகிலை யவைதா
மூன்பெரு வடிவ மெனப்படு மன்றே
யோர்ந்துளோர்க் கிங்கது தன்று
லெம்பிரா னீயே நிறையதிட் டாதா
வென்பதற் கையமு முளதோ
வம்பரா மூர்க்கப் பேய்கடா மயக்கான்
மாறுபா டுறப்பிதற் றுவரே. (௨௭)

## கைவல்லியம்

மலைமக டுணைவன் முக்கண னீல
மணிமிடற் றவனென வானோர்
திலகனே யுன்னைத் தகரமாங் குகையுட்
டியானஞ்செய் திடுமுறை செப்பி
யலரவன் முகுந்த னீசனோ டெவையு
மையநின் விபூதியென் றுரைக்கு
மலவிரு டுமித்துச் சிவச்சுடர் விளக்க
வந்தகை வல்லிய மறையே. (உஅ)

## தைத்திரியம்

மிருமது சுருதி கூறுமுன் றகர
வித்தையை வேறுள விசேடப்
பகுதிக ளானுந் தயித்திரி யந்தான்
பகர்ந்திடும் வள்ளலே மாயோ
னகமுறு பொருளா யுனைத்தியா னிப்பா
னவன்றனை நடுவனோ திடுமவ்
வகையறி யாத பேதைகண் மயக்கான்
மற்றொரு வாறுகொள் ளுவரே. (உகூ)

## பிருகதாரணியாதி

மறைகளிற் றலைமை யெய்திய பிருக
தாரணி யம்முதன் மறைகள்
பிறவுநல் விதயத் துறுபொரு ளாமுன்
பெருமையே பேசிடு மன்றே
யறவனே யிவற்றின் கருத்தெலா முன்பா
லடைவதே நியமமென் றுரைப்பார்
திறனறிந் துயர்ந்தோ ராதலாற் கயவர்
தீமொழி யாற்பய னென்னே. (ஙம)

## மாண்டூக்கியம்

தன்பொருள் விரிக்கும் பிறசுரு தியினாற்
றன்கருத் தறிதருந் தகைத்தா
நின்புடை யெல்லா முதன்மையு முண்மை
நிகழ்த்துமாண் டூக்கிய சுருதி
யுன்கழ றருமீ சானமா மனுவோ
டுருத்திரோ பநிடத மனுக்க
ளென்பவு மேனை மனுக்களு மநேக
மிம்முறை விளங்கவோ திடுமே. (௩௧)

அறப்பெருங் கடலே யளவிலா வணக்க
மறைந்திடு மெண்ணிலா மனுக்கள்
பிறர்க்குரித் தாகாச் சிறந்ததோர் பெருமை
பேசிடும் வெளிப்படை யுனக்கே
கறைப்பெரு மிடற்றாய் சூத்திரர் முதலோர்
காலினும் விழுந்திடு மூர்க்கர்
குறித்துனை வணங்கக் கூசுவ ரந்தோ
கொள்ளுவ ரோதெரிந் தவரே. (௩௨)

மொழிந்திடு மெல்லா வணக்கமு மெல்லா
மொழிகளு முன்னையே சாரு
மிழிந்திடாத் திருமா லாதிவிண் ணோரை
யீன்றவன் றானுநீ யெனவே
பொழிந்தசி ருனது தலைமையே யெடுத்துப்
புகழ்ந்துநின் பெருங்கணத் தலைமை
விழைந்துளோர் தமது பெருமையுஞ் சால
விளக்கிடுஞ் சுருதிகள் பலவே. (௩௩)

# உத்தரபாகம்

## புராணங்கள்

எண்ணிலாச் சாகைக் குவால்களாற் றெரித்திங்
கெம்மனோர் மாசறத் தெளிய
நுண்ணிய நியாய வொழுங்குக ளானு
நுவன்றுறத் தேற்றுநின் பெருமை
பண்ணவா விளங்கப் புராணங்க ளெல்லாம்
பன்முறை யுணர்த்திடு மன்றே
கண்ணிலாச் சிறுவர் தமக்குமுள் ளங்கை
நெல்லியங் கனியெனும் படியே. (௩௪)

## பாரதம்

நின்பதாம் புயத்தி னருச்சனை யாற்று
நெறியினன் மாயவ னெனவு
மன்புறு மீசன் மாலயன் றனக்கு
மாதியங் கடவுணீ யெனவு
மின்புறக் கிளக்கும் பாரதந் தானு
மெந்தைநின் றலைமையே விரிக்கும்
புன்புலே யேற்குந் தண்ணருள் புரிந்த
பூரணா னந்தமா கடலே. (௩௫)

## இராமாயணம்

அகந்தைநோ யறுக்கு மயனரி யரற்கு
மாதியாம் பகவனீ யெனவு
மகஞ்செய விரும்பு மிராமனுன் னிடத்து
வைத்திடுங் குறிப்புரை யதனாற்
றிகழ்ந்தவச் சுவமே தத்தினால் வழுத்துந்
தெய்வநீ யென்னவும் விளக்கி
யுகந்தவான் மீகி செய்தகாப் பியமு
முன்புக ழேவிரித் திடுமே. (௩௬)

மிருதியோக நூல்கள்

பெரும்பெயர் மனுயோ கீச்சுரன் முதலாம்
பெரியருஞ் சாத்திரந் தெரித்த
விரும்பதஞ் சலியார் முதலியோர் தாமு
மேனையோர்க் குரியபல் பேதம்
விரும்புபல் வழியுங் காட்டியா வருக்கு
மேற்பட நினைப்புகழ்ந் துரைப்பார்
கரும்பனைக் காய்ந்த கடவுளே யிதனைக்
கண்டுமந் தோமயங் குவரே. (௩௭)

வேதாந்த சூத்திரம்

பிறநய மாகும் புருடனங் குட்டப்
பிரமிதி தனைவிரும் பாம
லறவனே யுனதீ சானநற் சுருதி
யாற்பர மென்றுநிச் சயித்தோன்
செறியும்வே தாந்தப் பொருளினைத் தெரிக்குஞ்
சூத்திரஞ் செய்தவன் கருத்து
மிறைவநின் பெருமை கண்டதே யாகு
மென்பரா லாயவல் லவரே. (௩அ)

கீதைகள்

பெருவழக் காகக் கீதைக ளகத்துப்
பேசுமோந் தத்துசத் தென்னு
முறைதரு பதமும் பிரமமென் பதமு
முணர்த்திடும் பொருணீ யென்றே
தெரிதரக் காட்டுஞ் சாத்திரங் களினும்
வெளிப்படத் தெரிந்தன மையா
விரிதரு நீயே யுலகினுக் கெல்லா
மேற்படுந் தெய்வமென் பதுவே. (௩௯)

ஈசானாதி சுருதிகளாற் சிவபிரான் பெருமையை
நிலைநிறுத்துதல்.

உனையலா லெல்லா விறைமையு முடையோ
னென்றுமற் றெவன்றனை யுரைப்பே
முனிவிலீ சான முதலிய சுருதி
மொழிப்பொரு டானுநீ யன்றே
யனையவு மிவைதாஞ் சமாக்கியை சுருதி
யலவெனு மயங்கிருட் குகையுள்
வனைபுகழ் வேதத் துபயறா தேர்ந்த
மதியிலோர் மதியகப் படாதே. (சய)

பலபல விடத்துஞ் சுருதியி லுனையே
பகர்ந்திடும் புராணமு மிவ்வா
றிலகுறத் தெரிக்கும் விச்சுவா திகனென்
றிப்பெயர் சிற்பரா வெல்லா
வுலகினுக் கதிக னீயெனப் பகுத்து
வெளிப்படத் தெளியவற புறுத்திக்
கலகஞ்செய் பொல்லாக் கயவர்தஞ் செவிக்குங்
கடுங்கனற் சலாகையா மன்றே. (சக)

சிவபிரானது நிரதிசய ஐசுவரியத்துவம் நிலை நிறுத்துதல்

இறைமையிவ் வாறு பகுத்திடத் தகாதே
லுனையொழிந் தியாண்டுமுற் றுறுமோ
முறைபெறு மண்டந் தொறுமய னரன்மான்
மூவரும் வேறுவே றாகிப்
பிறழுறுங் கற்பந் தொறுநவ நவமாய்ப்
பிறந்துநின் றனையி னடங்கி
யுறைவரே யாதி யந்தமு மின்றி
யொழிவற நிறைந்தவான் பொருளே. (சஉ)

### விஷ்ணு பாசுருதி முதலியவற்றின் பிராபல்ய நிரசம்

வைப்பெனப் பெறுமுன் பெருமையே முழக்கு
மறைகளும் பலபல மறைதே
ரப்பொருள் விரிக்கும் புராணமு மவ்வா
றுருகுமிவ் வளவினுற் றுனே
செப்பிடத் தகுமா னின்பெருந் தகைமை
தேருநர்க் கிதுவன்றி வேறு
மெய்ப்படு மளவை வேண்டுமோ வேண்டா
விளங்கிழைக் கிடங்கொடுத் தவனே. சங)

பிறர்க்குரித் தல்லாப் பெயர்களான் மறைகள்
பிஞ்ஞகா நாரணன் மேன்மை
குறித்துரைத் திடுமா லேனைவிண் ணவர்க்குக்
கூறிடா திம்முறை யிதனுன்
மறைப்பொரு ளுண்மை தெரியலா மெனனு
மந்திரோ பநிடத முதலாந்
திறப்படு மறைக ளோதிடாக் கயவர்
செப்பிடு முரைபயன் படாதே. (சச)

### சிவபுராண தாமசத்துவ நிரசம்

தாணுமா லயற்குத் தம்முளே யுயர்ச்சி
தாழ்ச்சிகூ றிடும்புரா ணங்கட்
கேணுறுங் கற்பப் பிரிவினுற் போக்கென்
றியம்பிடு மச்சபு ராண
மாணலா ரித்னைச் சிவபுரா ணத்துக்
கப்பிர மாணமோ துவதா
நாணிலா துரைத்துத் தமதறி யாமை
நாட்டுவர் நாடரும் பொருளே. (சரு)

நாராயண காரணத்துவ பராகுநதி யுபபத்தி

உன்னிறை மையிலை முருந்தன திடத்து
முவனவ தாரங்க ளிடத்துந்
தன்னுடைக் கூறு மொற்றுமை யதனுற்
சாற்றிடு மாரண மொழிக
ளின்னதிவ் வளவே யவற்றினுள் ளுறையென்
றியம்புவ ரருந்தவ முனிவர்
மன்னனே யிதனைத் தேறிட மாட்டார்
மயக்கமாங் கடலழுந் துவரே. (சசு)

மாயவ னின்பா லேகனுய் முன்னர்
வந்துதித் தனன்பின்ன ரவன்றன்
பாயுல கொடுக்கும் புருடனை யயனைப்
படைத்தனன் முந்துகா லத்தென்
றேயுறு மகோப நிடதமோ திடுவ
தியாதது நின்னிடத் துறுதா
லோய்விலா துருகி யுள்ளவல் லவர்க
ளுள்ளகத் துறைமணி விளக்கே. (சஎ)

திரிமூர்த்தி பலத சாமிய நிருபணம்

அறக்குமோர் கற்பத் தயனெரு கற்பத்
தரியொரு கற்பத்தி லரன்முன்
பிறப்பனுன் பான்மற் றிருவரை முன்னேன்
பெற்றளித் திடுவன்மற் றிதனு
லுறப்பெறு முயர்ச்சி தாழ்ச்சிக ளொருவர்க்
குள்ளதோ வில்லையென் றிவ்வா
றிறப்புறு மறைகண் முழுவது முணர்ந்தோ
ரியம்புவ ரெம்பெரு மானே. (சஅ)

## சிவபிரானது பெருமையை நிலைநிறுத்துதல்

ஆங்கொரு சார ரயனரி யிருவர்க்
குருத்திர னதிகனு மெனவு
மீங்கிவர் தம்பா லவன்பிறந் தானென்
பதுமவன் கூற்றினுக் கெனவு
மோங்குமால் விடையா யுன்னுரு நாம
மொப்புமை செய்கைமற் றெல்லா
நீங்கிடா துடையோ னுதலான் மேலாய்
நிற்பவ னெனவுமோ துவரே. (சக)

## சிவபிரானது விசுவசேவியத்துவ நிரூபணம்

தேவர்மூ வருக்குந் தலைமையொப் புமைதான்
செப்புக வன்றிமற் றிவருண்
மேவரு மேலோ னுருத்திர னெனத்தான்
விளம்புக வெந்தவா றேனுங்
காவல நீயே யாவர்க்கு மேலாங்
கடவுளென் பதுபெரு வழக்கே
யோவுறு துலகெ லாம்பணி செய்யு
மொருவனீ யாகிநின் றனையே. (ருய)

உலகெலாம் பணிசெய் திடத்தகுந் தலைமை
யொருவனீ யேயிது வறியாக்
கலதிகள் வறிதே போக்குவர் வாணாள்
கடையனேற் கருள்பசு பதியே
சுலவுதே வருக்கு மானுடர் போலச்
சுராசுரர் மானுடர் முதலாம்
பலவுயிர் களுமுன் பணிவழி நிற்றற்
பாலன பசுக்கள்போ லன்றே. (ருக)

மானிடர் தருமப் பெருமைதேர்ந் துரைக்கு
மாதவர் நின்னிடத் தன்பு
மானிடந் தரித்தோய் தருமமார்க் கத்துட்
சிறந்தெடுத் தெண்ணிய வாற்றுன்
மானிடப் பிறப்பைப் பெற்றுஞ்செய் வினையின்
வயத்தராய் நினக்கன்பு செய்யா
மானிடப் பதர்கட் கெந்தவா றேனும்
வருங்கதி கண்டிலன் யானே. (ருஉ)

இருபிறப் பாளர் நியதியாய் வழுத்தற்
கெடுத்தல்கா யத்திரி யன்றே
வருமதற் குயர்ந்த தெய்வநீ யென்றே
வழுத்திடு மிதுபெரு வழக்கே
மருவரும் பொருளே யாதலி னுன்றாள்
வழிபடா விருபிறப் பாளர்
புரியுநல் வினைக ளியாவையும் புனையுந்
தூசிலா வணியெனப் படுமே. (ருங)

விப்பிரர்க் கெல்லா மங்கியிற் றெய்வ
மேவுமென் றுந்தழற் கடவுட்
கொப்பிலா நீயே யந்தரி யாமி
யென்னவு முயர்மறை மிருதி
செப்பிடும் வசன மிவ்விரு வகையுந்
திரண்டுநீ யடியனே னாகிற்
குப்புற தருள்வோய் விப்பிரர் தமக்குக்
குலதெய்வ மெனவிளக் கிடுமே. (ருச)

வேதியர் குலத்திற் பிறந்தவர் தமக்கு
விசேடமா யிக்கலி யுகத்தில்
வேதநீ தெய்வ மெனப்புரா ணங்கள்
விளம்பவு மன்பினு னுன்றன்
பாததா மரையை வழிபடா தேனைப்
பண்ணவர் தமைவழி படுவோர்
பாதக மறையோர் மூடர்க ளவர்க்குப்
பயன்றரா பரதெய்வங் களுமே. (௫௫)

எந்தைநீ பொறுமை யுடையவன் கருத்துக்
கெளியவ னுன்னருள் கையில்
வந்தது போலுன் னடியர்க்கு விரைவின்
வாய்த்திடு மவர்பெறும் பேறுஞ்
சிந்தைவேட் டதற்கு மேற்படப் பெறுவர்
தேர்ந்திடின் முழுதுமுன் னுடைமை
யிந்தவாய் மையினுற் பயன்குறித் தவர்க்கு
மீண்டுநீ சரணெனத் தகுமே. (௫௬)

இம்மையிற் போக முனைவழி படுவோர்க்
கெண்ணரும் பெருமைய தென்ப
ரம்மையி லேனை யுள்ளன நிற்க
வண்ணலே யுன்னனு சரர்க
டம்முடைப் பதமு மரியயன் முதலோர்
தம்பதங் களுக்குமே லாகச்
செம்மைதேர்ந் துரைப்ப ராகமத் துறையிற்
றினைத்துமெய் யுணர்ந்தமா தவரே. (௫௭)

நிகழ்பிர கிருதி கடந்தமெய் வாழ்வா
நிரதிச யானந்த மதுவுந்
திகழுநின் னருளாற் பெறுவதாம் பிறவித்
தீயநோ யறுக்குநன் மருந்தே
புகலிதற் கேது மெய்ப்பொரு ளுண்மை
போதிக்கு ஞானமா மதுவு
மகலிடத் துனது திருவருள் கிடைத்தா
லல்லது கிட்டுறு தன்றே. (௫அ)

வருந்திடா வகைவேட் டதனின்மேம் பட்ட
பயன்பெற வுதவிட வற்றுந்
திருந்துநின் வழிபா டொருதலை யாகச்
செய்யவேண் டிடுந்தகைத் தாயும்
பிரிந்துனை நீத்து வேறொரு தெய்வம்
வழிபட நாடுவர் பேயோ
ரருந்தவப் பொருளே வெய்யவூழ்க் கொடுமை
விலக்குத லரிதரி தந்தோ. (௫௯)

மருளிணு லவிச்சை யாலவாத் தன்னுன்
மதாபிமா னங்களால் வறிதே
யொருவுக வானு ளுனைத்தொழா மூர்க்
கொருவனே யாங்களெல் லோமுந்
திருமகன் மனைவி முதலியோ ரோடுஞ்
சேரநின் னடியராய்த் தொழுதேம்
பெரிதுமிம் மதியே பெயர்ந்திடா திருக்கும்
பேறளித் தருள்கமற் றெமக்கே. (௬௰)

வேறு.

பயன் முதலியன

இவ்வாறு முப்பா னிரட்டிப்படு செய்யு ளாலுன்
செவ்வா னடியிற் சிவதோத்திர மாலை சேர்த்தே
னிவ்வாய் மையினித்த மொர்காலித னைப்ப டிப்போ
ருய்வா னுனதின் னருள்கூடுக வும்ப ரானே. (க)

வேறு.

விண்ணோர் தமக்குந் தெரிவருநின்
மேன்மை யெங்கே யானெங்கே
தண்ணார் துதியென் றிதுவுமொரு
குற்றந் தானுய்ச் சமைந்ததா
லண்ணு வன்புக் கெளியாயா
னவாவாற் செய்தே னதனை
யெண்ணு தெல்லாம் பொறுத்தருள்வா
யென்னு மிதுவென் றுணிபாமே. (உ)

வேறு.

யானே யறிவே னிவனையெனத் தன்ற னுவா
லானு வரியே புகன்றுனெனி லந்த நின்சீர்
தேனு ரமுதே யினிமற்றெவர் தேற வல்லார்
கோனு யுயிர்தோ றுறையம்பலக் கூத்து ளானே. (ங)

சிவதத்துவவிவேகம்

முற்றிற்று.

உ

திருச்சிற்றம்பலம்

# அரும்பொருள் விளக்கம்

## பாயிரம்

க. கூறு-பகுதி. அலகு-அளவு. ஆற்றல்-சக்தி. அலகிலாற்றல் - அலுப்தசக்தி. அருள் நூல் - வேத சிவாகமங்கள். குலவுதல்–கொண்டாடுதல். அவன் சிவபிரான் என்க. கறை-கறுப்பு: நஞ்சுமாம். களம்-கழுத்து.

உ. செவியுற வாங்குதல்-நாண் செவிவரை வருமாறு இழுத்துப்பிடித்தல். மோகத்தின்படை-மோகனாஸ்திரம். சிலை-கருப்புச்சிலை. கவிகை - குடை: இங்கே சந்திரனாகிய குடை. வேள் - மன்மதன். கறுத்தி - கோபித்தாய். யோகு - யோகம். யோகுறையும் பெம்மானென்றது சனகாதி நால்வருக்கும் அநுபவஞானத்தை யுணர்த்தி வீற்றிருந்த ஸ்ரீ தக்ஷிணாமூர்த்தியை. பெம்மான்-விளி. கோழ்இணர்-கொழுமையான பூந்தாது. கேழ்-நிறம்.

ரு. தபனன்-சூரியன். ஆதியென்றதனால் சுவாயம்புவமனு, வாயு, வசிஷ்டர், பராசரர், வியாசர், காசிபர் முதலியோர் கொள்ளப்படுகின்றனர். மெய்ஞ்ஞான முத்திரை-சின் முத்திரை. குறுநகை-புன்சிரிப்பு.

இங்ஙனம் சிவவணக்கம் மூவகைப்படுத்தோதியது சிவபெருமான் தனது சந்நிதிக்கண் உலகத்தைச் சேட்டிப்பிப்பவனென்பதை

யும், உயிர்கள் தாஞ் செய்த வினைக்கீடாக ஒன்றனை யறிதற்கண் தான் காட்டாகி நிற்பவனென்பதையும், உயிர்கள்போல அசத்தை யனுபவியா னென்பதையுங் குறித்து நிற்குமென்று சிவஞான சுவாமிகள் அருளிச் செய்திருக்கின்றார்கள். (சிவஞானபாடியம். ரு வது சூத்திரம். உ வது அதிகரணம்.)

ச. கொழுகொம்பு - கொடிபடர்வதற்குத் துணையாக நடப் படும் கொம்பு. கல்வி-விஞ்ஞானம். தேசிகர்-மகாகுருக்கள்.

ரு. மறை முடிவு-உபநிடதம். பறைதல்-நீங்குதல்.

சு. ஒருப்பாடு-ஒரே கருத்து. முதல்வித்தை-வேதம். கால் கதிர் வியாதனுதியர் மொழி யென்பதிற் கால்மொழி யென்றது வாயுசங்கிதையையும், கதிர்மொழி யென்றது ஆதித்திய புராணத் தையும், வியாதன்மொழியென்றது மகாபாரதத்தையுங் குறித்து நின்றன. வாயுசங்கிதை மகாபுராணங்களையும் ஆதித்தியபுராணம் உபபுராணங்களையும் உபலக்கணத்தாற் குறிக்கும். ஆதியென்றத னல் மிருதி கற்பசூத்திரமுதலியன கொள்ளப்படும். வேதம் சிவபெருமானது பரத்துவத்தைக் கூறுவதில் ஒரே கருத்துடை யது: வாயு சூரியன் வியாசன் முதலியோர் மொழிகளால் விளங் குந் தன்மையது: திரிவுகாட்சியர் மனத்திற் பதிக்கப்பட்ட தறி போன்று திகழும் செம்பொருட் கோவையை யுடையது: அத் தகையதாய் உலகிற்கு நன்மைதரும் வேதம் எங்கணும் பிரகாசிப்ப தாக என்பது செய்யுட் பொருள்.

எ. எட்படுநெய்-எள்ளிலுள்ளநெய். விட்பரும்-சொல்லுதல் அரிய. அறுபான்-அறுபது. வெளிப்படுப்பச் செய்யலுற்றேனென முடிக்க. நயத்தல்-மகிழ்தல்.

# நூல்

## பூர்வபாகம்

க. விழைதல்-விரும்புதல், தவ வருவாய்-தவமாகிய இலாபம். ஈர்த்தல்-இழுத்தல்.

உ. விச்சுவாதிகன் - உலகினை யிறந்து நின்றோன். வேதம் 'விச்வாதிகோ ருத்ரோ மஹர்ஷி' என்று கூறுகின்றது. விசுவ சேவியன் - உலகத்தாரால் வணங்கப்படுந் தன்மையுடையோன். வேதம் 'சிவ ஏகோ த்யேய:' என்று கூறுகின்றது. மச்சரம்-பொறாமை. அழிகுலத்திற் பிறந்தோர் சிவபெருமானைப் பரிகசிக்கின்றனரெனப் பாகவதத்திற் கூறப்படலானும் அப்பிறப்பினை யுடையோர் நல்லோராற் சமுதாயத்தினின்றும் நீக்கப்பட்டுக் குற்சித ஜீவனம் செய்தல் காணப்படலானும் 'மச்சரத்துணக்கே தீங்கிழைத்தவர் தம் வாழ்க்கையும் பயன்படா' தென்பது கூறப் பட்டது. துச்சர் - கீழ்மக்கள். நூலெலாம் - பாகவதம் கூர்ம புராணம் பாத்மபுராண முதலியன.

ங. வாழிய-அசை. பாழி-வலிமை.

ச. விதிவாக்கியம்—மந்திரம் அருத்தவாதம் விதிவாக்கிய மெனப்படும் வேதப்பகுப்புக்களுள் ஒன்று. வேள்வி முதலியன செய்தற்கண் இச்சோதக வாக்கியங்களே சிறந்த பிரமாணங்களாம். விளங்கிழை-உமாதேவியார். பரவசம்-அந்நியர்வசம்.

ரு. அம்புயத்தோன்-பிரமன். மயக்கு-மயக்கம். பிரமதேவர் சிவபெருமானை எதிரே கண்டும் உணராதிருந்தமையும் விஷ்ணு மூர்த்தி சிவபெருமான் கூற உணர்ந்தமையும் இலிங்கம், கூர்மம், சௌரம் என்னும் புராணங்களிற் கூறப்பட்டன. இந்திரன் உமா தேவியா லுணர்ந்தானென்பது தலவகார உபநிடதத்திற் கூறப் பட்டது.

௬. மன்ற-உறுதியாக. கயமை - கீழ்மைக்குணம். வாரிதி-கடல்.

எ. விலகுதல்-நீங்குதல். துமித்தல்-வெட்டுதல். கணிச்சி-கோடரி. சிவபெருமான் திருவடிப்பத்தி பல பிறவிகளிலுஞ் செய்த தவமுடையார்க்கே யாகுமென இச்செய்யுள் கூறுகின்றது.

அ. பவம்-பிறவி. அகத்திருள்-அஞ்ஞானம். அலமால்-சுழலுதல். ஆதி யென்றது பிருகு முதலியோரைக் குறித்து நின்றது. முன்னைப் பல பிறவிகளிலும் மேலான தவங்களைச் செய்தவர்களும், மனத்திலுள்ள அறியாமையை நீக்கினவர்களும், இயமம் நியமம் முதலிய நற்காரியங்களைச் செய்தவர்களுமே சிவபெருமானை யடைய விரும்புவார்கள்: இவ்வாறாகக் கலியின் குற்றம் பொருந்தியவர்களும், அசுரக் கொடுமை யுடையவர்களும், ததீசி முதலியோராற் சபிக்கப்பட்டவர்களுமாகிய பிறர் சிவபெருமானை யெவ்வாறடைவார்களெனச் சிவபெருமானை யடைவார்க்குரிய தகுதியும் அப் பெருமானை யடையாதார்க்குரிய தகுதி யின்மையும் விளக்கப்பட்டன. ததீசி முதலியோராற் சபிக்கப்பட்டமை **கூர்ம புராணம், காந்த புராண** முதலியவற்றிற் கூறப்பட்டது.

க. தளம்-இலை. புலியூர்-சிதம்பரம். சுரும்பர் உளர் துழாய்ப் படலை-வண்டுகள் சுழல்கின்ற துளசிமாலை. சிவபெருமானது பெருமையை யறிதற்கும் அப்பெருமான்பால் அன்பு செய்தற்கும் அப்பெருமானை அருச்சித்து அருள் பெறுதற்கும் திருமா லொருவரே தகுதி யுடையாரென்பது கூறப்பட்டது.

ம. தணப்பு-நீக்கம். நிரதிசயமதாஞ் சச்சிதானந்த வடிவம்-தன்னின் மிக்கது வேறொன்றில்லாத சத்துச் சித்து ஆனந்தமாகிய வடிவம். துவிதப் பிணக்கிலி - அத்துவிதமாயுள்ளவர். அது 'தத்துவமசி' 'அகம்பிரமாஸ்மி' 'அயமாத்மா பிரம' 'பிரஞானம் பிரம' என்று சொல்லப்படும் **மகா வாக்கிய** விஷயம். பிரத்தியக்கு-வேறுபட்டது. குணித்தல்-அளவிடல்.

மக. அம்பகம்-கண். உணங்கிடா வுலகு-கெடாத உலகம். சிவபெருமான் மாயையைத் தோயானென்பதே வேத சிவாகமங்களுட் கூறப்பட்ட வுண்மை. முதனூலாசிரியராகிய **அப்பதீக்ஷிதர்**

சிவாத்துவிதமாகிய நிமித்த காரண பரிணமவாத சமயத்தினராதலின் தங் கொள்கையை இங்கே கூறினர். **சிவஞான சுவாமிகள்** முதனூலை அதர்ப்பட மொழிபெயர்த் தருளுகின்றமையின்

‘ முக்குணங்களின் மூவரைத் தோற்றி
 மூவருக்கு முத்தொழில் வகுத்தருளி
யக்குணங்களுக் கதீதமாய் நிறைவா
 யத்துவாக்களைக் கடந்த மேலுலகிற்
றக்க நற்கண நாதரேத்தெடுப்பச்
 சத்தி யம்பிகையுட னருளுருவாய்த்
தொக்க கோடிசூரிய ருதயம்போற்
 றோன்றிநின்றனை கலைசை வானவனே’

என்னுந் தமது சித்தாந்தக் கருத்துப் பற்றி அதனைத் திரியாது முதனூலாசிரியர் கூறியவாறே கூறியருளினார்கள். முன் வரும் ‘வேதாந்தப் பொருளினைத் தெரிக்கும் சூத்திரம்’ (செய்யுள்-௯அ.) என்றதற்கும் இஃது ஒக்கும்.

௰உ. இது முதல் மூன்று செய்யுட்களால் **அதர்வ சிகோப நிடதப்** பொருள் ஆராயப்படுகின்றது. முளரி-தாமரை: முளரி யோன்-பிரமன். சிகை-அதர்வசிகை யென்னும் உபநிடதம். இவ் வுபநிடதம் ‘பிரமன் முதலிய தேவர்கள் அனைவரும் பூதங்களோடு பிறக்கின்றார்கள். ஆதலின் அவர்கள் காரணரல்லர்’ என்று விலக்கிச் ‘சர்வைசுவரிய சம்பந்நன் சிவபெருமானே: அவரே முதற்காரணர். அவரொருவரே தியானிக்கப்படுபவ’ ரென்று கூறுகின்றது.

௰௩. ஓரொருபால் - ஒவ்வோரிடம். அறக்கறை-கரிய விடம். வேதத்தில் ஒவ்வோரிடத்தில் ஒவ்வொரு தேவருக்கு எல்லாத் தலைமையும் சொல்லப்படும். ‘பதிம் விச்வஸ்யாத்மேச்வரம்’ என்று **நாராயணோபநிடதத்திலும்** ‘அக்நிர்வை தேவாநாம் அவமோ விஷ்ணு: பரமஸ் ததந்தரேண ஸர்வா அந்யா தேவதா:’ என்று **வேத விருசப் பிராமணத்திலும்** ‘அக்நயே ப்ருதிவ்யதிபதயே

ஸ்வாஹா' என்பதுமுதல் 'ப்ரஹ்மணே லோகாதிபதயே ஸ்வாஹா' என்பது வரையுள்ள மந்திரங்களால் அக்கினி, சோமன், வாயு, சூரியன், இந்திரன், யமன், வருணன், குபேரன், மகாசேனன், உருத்திரன், பிரமனென்பவர்களுக்கு முறையே பிருதிவி, நக்ஷத்திர, அந்தரிக்ஷ, திவ், சுர, பிரேத, சலில, யக்ஷ, சேநா, பூத, லோகங்களுள் ஒவ்வொன்றிற்கு அதிபதியாந்தன்மை கூறிப் பின் 'விஷ்ணவே ஸர்வாதிபதயே ஸ்வாஹா' என லோகாக்ஷி கிருகி யத்திலும் விஷ்ணுமூர்த்திக்குக் கூறப்பட்ட பெருமையும், 'இரணிய கருப்பன் ஆதியிலுள்ளவன்' என்றும், 'இந்திரன் சகலத்தினும் மேலான தேவன்' என்றும், 'அக்கினியே தேவரனைவருக்கும் முன்னே தலைவன்' என்றும், சுருதிகளில் பிரமன், இந்திரன் அக்கினி யென்பவர்க்குக் கூறப்பட்ட பெருமையுமாகிய எல்லாம் சுருங்கிய பொருள்படும்; அதர்வசிகையிற் கூறப்பட்டவாறு ஏனையரிற்பிரித்துத் தலைமை சொல்லாமையால். அன்றியும் இச் சுருதியே அவற்றின் மாறுபாட்டை நீக்குவதாயுமிருக்கின்றது.

'காரெழில்புரையுமேனிக் கண்ணனை யென்னை மற்றை
யாரையும் புகழும் வேத மான்றனைத் துதித்ததேபோ
லோருரை விளம்பிற்றுண்டோ வுரைத்தது முகமனென்றே
பேருலகறிய முன்னும் பின்னரும் விலக்கிற் றன்றே'

எனப் பிரமதேவர் தக்கனுக்குக் கூறியதாக வருங் கந்தபுராணச் செய்யுட் கருத்தும் இது.

மச. கதித்தல்-சிறத்தல். தொடக்கம்-உபக்கிரமம். இறுதி-உபசங்காரம். அதிர்ப்பு-ஆரவாரம்.

உனை விளக்கிடுங் காரணபதம்-அதர்வசிகையிலே முதற்கண் 'மிகவுந் தியானிக்கத்தக்க ஈசானனைத் தியானிக்க' என்று கூறிப் பின் 'காரணன்றான் தியானிக்கற்பாலன்' என வருவதிலுள்ள காரண னென்னுஞ் சொல். அனுவதிப்பு-வழிமொழிதல். இச் சொல் அனுவாத மென்றும் இதற்குப் புரோவாதமாவது சுபாலோபநிடத முதலியவற்றில் சிருட்டிப் பிரளய நிருபணப் பிர

கரணங்களிலே பேசப்படும் நாராயண சப்த காரணனென்றும் சிலர் கூறுவர். அவர் அதர்வசிகையின் தொடக்கத்தில் 'எவன் தியானிக்கப்படும்?' எனப் பொதுவகையால் எழுந்த வினவுக்குக் 'காரணன்றான் தியானிக்கற்பாலன்' எனப் பொதுவகையால் விடையிறுக்கப்பட்டதென்பர். முன் வாக்கியத்திற் கூறிய தியானிக்கப்படும் பொருளெனப்பட்ட 'ஈசான' னென்னும் பதம் பின் வரும் 'காரண' னென்னுஞ் சொல்லுக்குப் புரோவாதமாயிருக்க்வும் அதனைவிடுத்து மற்றொரு சுருதியைக் கூறல் பொருந்தாது. அன்றியும் அபரிமிதாதிகரண நியாயத்தினாலே இவ் வுபநிடதத்திற் சமீபத்திற் கூறிய பிரம விஷ்ணு உருத்திரரென்னும் மூவருக்குங் காரணராகிய ஈசானரை அக் காரணச்சொல்விளக்குகின்றது. சுபாலத்தில் அவ்வாறு கூறப்பட்டிலது. இதனானும் அவர்கூற்றுப் பொருந்தாது.

மேற் செயயுளுக்கும் இச் செய்யுளுக்கும் அப்பதீக்கிதர் செய்த வியாக்கியானத்தை ஆறுமுக நாவலரவர்கள் பெரியபுராண சூசனத்திற் சிவபரத்துவங் கூறுமிடத்து மொழிபெயர்த் துரைத்தார்கள்.

௰௫. இதுமுதல் எட்டுச் செய்யுட்களால் சுவேதாச்சுவதரோபநிடதப்பொருள் ஆராயப்படுகின்றது. தலைமையில் உயிர்-சுதந்தரத் தன்மையில்லாத ஆன்மா. வன்பு-வலிமை. இவ்வுபநிடதம் மகரிஷிகள் ஒருங்குகூடி உலகத்திற்கு ஆதிகாரணம் ஆன்மாவென்றேனும் சடமாகிய பூதங்களென்றேனும் கூறில் அது பழுதாகும்: ஆகவே பிரமமே ஆதிகாரணமெனத் தெளிந்து அப்பால் அப்பிரமந்தான் யாவரென் றாராயத்தொடங்கி உமாதேவியார் அருளால் சிவபெருமானே பிரமமென் றறிந்தனரெனக் கூறுகின்றது.

௰௬. படைப்புறு முறைமை-உலகத் தோற்றத்தின் முறை. பிறிதொன்றன் பொருட்டாய்க் கிடைத்தலால்-பொதுச் சொல்லாய்ப் பிறிதொன்றன் பொருளுடையதாய்க் காணப்படலால்: அஃதாவதுபிரமம் ஆகாய முதலிய சொற்களாயிருத்தலால். கிளத்தல்-சொல்லுதல். ஆ-இரக்கக் குறிப்பு. ஈசபதம் க. அ. லும் அஜபதம் க. ௯. லும் வருகின்றன.

௰எ. 'எப்போது தமம் அது பகலன்று' என்னும் மந்திரமாவது :—"யதா தமஸ் தந் ந திவா ந ராத்ரிர் ந ஸந் ந சாஸச் சிவ ஏவ கேவல: ததக்ஷரம் தத்ஸவிதுர்வரேண்யம் ப்ரஜ்ஞா ச தஸ்மாத் ப்ரஸ்ருதா புராணீ" என்பது. (சுவேதா. ச. ௰அ.) உணையுணர்த்துத லாவது:—'சிவ ஏவ கேவல' என்றது. மருளோர்-மயக்க வுணர் வுடையோர். நுதல்-நெற்றி. வாளெரி-பிரகாசம் பொருந்திய நெருப்பு.

௰அ. மனு-மந்திரம். மனு இதில்-இந்த மந்திரத்தில். புரோ வாதம்-முன் மொழிதல். இங்கே புரோவாத மென்றது சுபால உபநிடத வாக்கியம். சிலர் 'எப்பொழுதிருளிருந்த' தென்னும் மந்திரம் குறித்த ஓர் பொழுதையிருளின் அனுவாத மென்பர். அஃதங்ஙனமன்று: இருண் மாத்திரையானே வரைசெய்யப்பட்ட சிருட்டியின் முற்பொழுதைக் குறிப்பதாகும். ஒன்றை அனு வதித்து மற்றொன்றை விதிக்க வெழுந்த வாக்கியம் அனுவாதத்திற் கின்றியமையாது வேண்டப்படும் புரோவாதத்தாற் பெறப்படாத பொருளில் முடிவு பெறுவிடிற் பயன்படாது. சிவபதம் நாரா யணனை யுணர்த்துமெனின் புரோவாதத்தாற் பெறப்படாத பொருளின்மையின் இவ்வாக்கிய முழுவதும் பயனில் கூற்றாய் முடியும். எம்பிரான்-விளி.

௰௯. மானம்-கற்பு. பேசிடா-பேசிடாமல். குரு-நிறம். சுவே தாச்சுவதரமாகிய பெண் கற்பால் மிகச் சிறந்தவள்: அவள் ஏனைத் தெய்வங்களைக் கூறாமல் அரன் சிவன் முதலிய உன்னுடைய பெய ராகிய மணி வடங்களால் தன்னுடல் முழுதும் அலங்கரித்திருக் கின்றாள்; அன்றியும் உன்னோடொப்பவர் யாருமில்லை யென்று தெளிந்து உன்றிருவடியிலே தன்கருத்தெல்லாம் அமைத்தாளாத லின்.

௨௰. இதனுள்-சுவேதாச்சுவதர உபநிடதத்துள். சுவேதாச்சு வதரம் ௩. ௰ச, ௰௫ புருடசூக்த மந்திரங்கள். பல் சுருதி-பிருக தாரணியகம், சாந்தோக்கிய முதலியன. துரக்கும்-நீக்கும். சுவே தாச்சுவதரம் ௩. ௫, ௬ திருவுருத்திர மந்திரங்கள், புருடசூக்தமே

சிவபரமென்பது முன் உஉ-வது செய்யுளிற் கூறப்படும். புருட சூக்தம் நாராயணபரமென்று கொள்ளினும் பல சுருதிகளால் அறுதியிடப்பட்ட பொருளை இஃதெவ்வாறு நீக்கும்: அன்றியும் இவ்வுபநிடதத்தில் திருவுருத்திர மந்திரங்கள் பலவும் வருதலின் பரர்கொண்டவாறு புருடசூக்த மொன்றுனே இவ்வுபநிடதம் நாராயணபரமெனக் கோடல் பொருந்தாதென்பது இதன் பொருள். கோமளம்-மனமகிழ்ச்சி தருவது.

உக. இச் செய்யுளிற் **சுவேதாச்சுவதர உபநிடதம்** சிவபரமென்பதற்கு மூன்று காரணங்கள் கூறப்படுகின்றன. அவைதாம் (க) இவ்வுபநிடதத்தில் முன்னும் பின்னும் திருவுருத்திர மந்திரங்கள் பயிலுதல் (உ) இத்திருவுருத்திரம் சிவநாமங்களாற் சிறத்தல் (ங) திருவுருத்திரம் சிவபரமாக விநியோகிக்கப்படுத லென்பனவாம். கதம்-செல்லுதல். எறுழ்விடை-வலிய இடபம். அருத்தி-அன்பு. ஈண்டை-ஐயீற்றுடைக் குற்றியலுகரம்.

உஉ. **புருடசூக்தம்** சிவபரமென்பதற்கு 'உதாம்ருதத் வஸ்யேசாந:' எனவரும் **ஈசான்பத**மே சான்றாகும். அமிர்தத்திற்கு ஈசானனன்றோ என்பது அதன் பொருள். கருங்குழல்-உமாதேவியார். புருடசூக்தம் நாராயணமென்னும் பெயரான் வழங்கப்படலானும், அதில் விஷ்ணுவுக்குரிய புருட சப்தம் பயின்றுவருதலானும், அது விஷ்ணுபரமாகப் பிரயோகித்தலுண்மையானும் விஷ்ணுபரமே யெனச் சிலர் கூறுவர். புருடசூக்தம் நாராயணமெனப்பட்டது நாராயணன் இருடியாதல்பற்றி யல்லது தெய்வமாதல்பற்றி யன்றென்பது 'நாராயணனுற் காணப்பட்ட புருடசூக்தத்தால்' என **வாதூல சூத்திரத்து** வருதலானறியப்படும். புருடசப்தம் ஆன்மாவையும் மானவரையுங் குறிக்குமென **அபிதானகோசங்** கூறுதலானும், உலகவழக்கினும் வேத வழக்கினும் அவ்வாறே பயின்று வருதலானும் அது நாராயணனையே குறிக்குமென்றல் பொருந்தாது. புருடசூக்தம் சிவபரமாகப் **போதாயன சூத்திரத்தில்** விநியோகித்தலும், **இலிங்கபுராணத்தில்** சிவபூசாவிதியில் தேவவிரத முதலியவற்றோடு விநியோகித்தலும்

காணப்படுகின்றது. மேலும் ஒரு கடவுளைக் குறிக்கும் மந்திரம் சத்தவொப்புமையாற் பிறதேவர் மேலுஞ் செல்லும், அருக்கனைத் தெய்வமாகவுடைய இருக்கு விசுவதேவ சத்தவொப்புமையாற் பிதிரர்மேலும் புஷ்யசத்த வொப்புமையாற் பூடணதேவர் மேலுஞ் செல்லுதல்போல. இவற்றான் மேற் கூறப்பட்ட காரணங்களனைத்தும் பொருந்தாமை காட்டப்பட்டது.

உரு. இதுமுதல் ஐந்து செய்யுட்களால் **அதர்வ சிரோப நிடதப்** பொருள் ஆராயப்படுகின்றது. விபூதி - அம்சம். சிவபெருமான் அனைத்துயிர்களுமாய்க் கலந்து நிற்குந் தன்மையும், அப் பெருமானது தேவர்களாற் றொழப்படுந்தன்மையும் முதற் கண்டத்திற் கூறப்பட்டன. பிரமன் விஷ்ணு முதலியோர் சிவபெருமானது விபூதி யென்பது இரண்டாங்கண்டத்திற் கூறப்பட்டது. சிவபெருமானது பிரபாவம் அப் பெருமானது திருநாமங்கள் பலவற்றிற்கும் பொருள் கூறுமாற்றால் மூன்றாவது கண்டத்திலும் நான்காவது கண்டத்திலுங் கூறப்பட்டது.

உச. நின்றுழி-நின்ற இடம். கிளவி-சொல். சழக்குரை-பொருந்தா உரை. பரிணமித்தல்-மிகுந்து வெளிப்படல்.

**அதர்வசிரசின்** முதற்கண்டத்தில் தேவர்கள் சிவலோகஞ் சென்று சிவபெருமானை நோக்கி நீர் யார் என்று வினவச் சிவபெருமான் 'நான் ஒருவனே முதற்கணிருந்தேன்' என்பது முதலாக விடைகூறி மறைந்தனர். பின்னர்க் கடவுளர் உருத்திரனைப் பார்த்திலர் என்ற விஷயம் கூறப்படுகின்றது. அதில் இரண்டாவது வாக்கியத்தில் 'அவன் அந்தரத்தின் அந்தரத்தைத் தலைக்கூடினன்: திக்கினந்தரத்தையுந் தலைக்கூடினன்' என்பது முதலியன கூறப்படுகின்றன. சிலர் இவ் வாக்கியத்தில் வரும் அவனென்பது உருத்திரனைக் குறியாது அவனுக்கு அந்தரியாமியாயுள்ள நாராயணனைக் குறிக்குமென்றும், உருத்திரனைக் குறிக்க வேண்டின் நானென்று வழங்க வேண்டுமென்றும், முதல் வாக்கியம் பின் வாக்கியத்திற் கேற்ப நாராயண விஷயமாகுமென்றுங்

கூறுவர். 'அவனந்தரத்தின்' என்ற வாக்கியம் நின்றுங்கு நின்று முடிதல் கூடாமையின் பின்வரும் 'வாய்மையை வாய்மையால்' என்பது முதலிய வசனமனைத்தும் இறுதிக் கண் அந்நுவயமாகும்; முன் வாக்கியங் கூறிய அனந்தரம் சிவபெருமான் தேவர்களுக்குப் புலப்பட்ட தனது நூலத்திருவுருவை யொழித்து அதனினுஞ் சிறந்ததும் அனைத்தினுள்ளும் புகுந்ததும் மறைந்ததும் நிறைந்தது மான சொரூபத்தைத் தலைக்கூடினனென்று அவனது மறைதலைக் கூறுதற்கண் பொருட் காற்றல் உளதாதலால். இனி முன் பின் முரணுமிடத்து முற்படும் உபக்கிரமமே வலியுடையதாகும். இவற்றால் அவர் கூற்றுப் பொருந்தாமை காட்டப்பட்டது.

உரு. 'நீர் யார்' என்ற வினாவிற்கு விடையா யெழுந்த சிவபெருமான் வசனம் மற்றொருவர் விஷயமாயின் வினாவும் விடையுந் தம்முண் மாறுபட்டு வழுவாகும்: அன்றியும் சிவபெருமான்றான் உயிர்க் குயிராய் நிறைந்து நிற்பவனாதலின் அப் பெருமான் 'அவ'னென வேறு யாரையுங் கூறுதல் பொருந்தா தென்பது இச் செய்யுளின் பொருள். கடாவுதல்-வினாவுதல். எனையோர் உரு-மற்றையோர் வடிவம். காண்டக-அழகாக. கழறுதல்-சொல்லுதல்.

உசு. சுவேதாச்சுவதர உபநிடதத்திலும் உருத்திர உபநிடதத்திலும் சிவபெருமானுக்கு எல்லாப் பொருள்களிலும் அதிட்டானம் கூறப்பட்டது. சூரியமண்டலத்துறையும் பொருள் சிவபெருமானே யென்பது 'நமோர் ருத்ராய பசுபதயே மஹாதேதேவாய த்ரியம்பகாயை கசராதிபதயே ஹரயே சர்வாயே சாநாயோக்ராய வஜ்ரிணே க்ருணிநே கபர்திநே நமோ நம; ஸூர்யாயாதித்யாய நமோ நம ; நமோ நீலக்ரீவாய சிதிகண்டாய நமோநம: நமச்சந்த்ர லலாடாய க்ருத்திவாஸஸே நம:' என்பன வாதியாக வரும் மந்திரங்களால் அறியப்படும். கூர்மபுராணத்துச் சூரிய இருதயத்தும் இது கூறப்பட்டது. அதிட்டானம்-நிறைவு. உனற்கு-நினைத்தற்கு. களிப்ப - களிக்குமாறு. மனக்கு - அத்துச்சாரியையின்றி வந்தது. செவியறி வுறுத்துதல்-சொல்லுதல்.

உஎ. ஐம்பெரும்பூதம் - மண், புனல், தீ, காற்று, வெளி யென்பன. இருசுடர்-சூரியனும் சந்திரனும். ஆன்மா-உயிர். இவை யெட்டும் சிவபெருமானுடைய அஷ்ட மூர்த்தங்கள். அதிட்டாதா-அதிட்டிப்பவன். பிதற்றுதல்-பயனின்றிப் பல கூறல்.

உஅ. இச் செய்யுளால் **கைவல்லியோபநிடதப்பொருள்** ஆராயப்படுகின்றது. திலகன்-திலகம் போன்றவன்: சிறந்தோன். தகரமாங் குகையுள் தியானஞ்செய்தல் தகரவித்தையென்று கூறப் படும். முகுந்தன்-விஷ்ணு. ஈசன்-இங்கே உருத்திரன்.

உக. **தைத்திரியத்தில்** தகரவித்தை விஸ்தாரமாகக் கூறப் பட்டிருக்கிறது. அது சுருதி-அச்சுருதி: அஃதாவது கைவல்ய உபநிடதம் தைத்திரியத்தில் நாராயணனை நடுவிலோதியது அந் நாராயணன் தன்னுடைய இருதயத்தில் சிவபெருமானைத் தியானிக்கின்றா னென்பதை யுணர்த்துதற்பொருட்டு. நாராயண அனுவாகத்தில் 'ஸஹஸ்ரசீர்ஷம் தேவம்' என்பது முதல் நாராயண னுடைய மகிமையைக்கூறிப் பின் 'பத்மகோசப்ரதீகாசம்' என்பது முதல் அவனது உபாசனஸ்தானமாகிய இருதயதாமரையின் விசேடங்கூறிப் பின் 'தஸ்ய சிகாயாமத்யே பரமாத்மா வியவஸ்தித' என்பது கூறப்பட்டது. நடுவண்-இடை.

௩௰. மறை - வேதம்: மறைந்த பொருளை யுடைமையின் வேதம் மறையெனப்பட்டது. **பிருகதாரணியம்** முதல் மறைகள்-**பிருகதாரணியம் சாந்தோக்கியம் மகோபநிடத** மென்பன. பிருக் தாரணியத்தில் 'யஏஷோ அந்தர்ஹ்ருதய ஆகாசஸ் தஸ்மிந் சேதே' என்பதுமுதல் தகரோபாசனை கூறப்பட்டது. சாந்தோக்கியத் தில் 'அத யதிதமஸ்மிந் ப்ரஹ்மபுரே தஹரம் புண்டரீகம்' என்பது முதல் தகரோபாசனை கூறப்பட்டது. மகோப நிடதவாக்கியம் உக - வது செய்யுளுரையிற் கூறப்பட்டது. இதயம் - இருதயம். அறவன்-தருமசொரூபி. நியமம்-முறை. திறன்-தன்மை: இங்கே அம்மறைகளின் தன்மை.

௩க. தகை-தகுதி. **மாண்டூக்கிய உபநிடதம்** வைசுவாநர, தேசச, இரணியகருப்பர்களை முறையே தூல, சூக்கும, சூக்குமதர

மூர்த்திகளாகச் சொல்லிச் சிவபெருமானைத் துரியமூர்த்தியாகச் சொல்லுகிறது. இவ்வுண்மை உத்தராதாபிநி உபநிடதத்தால் விளங்குகிறது. பிறசுருதி-உத்தரதாபிநி உபநிடதம். ஈசானமாமனு-'ஈசாநஸ் ஸர்வ வித்யாநாம்' என்னும் மந்திரம். உருத்திரோப நிடதம்-சதருத்திரீயம். ஏனை மனுக்களென்றது-ஆயுஷ்யசூக்தம், சிவ சங்கற்ப முதலியன.

கூஉ. வணக்கத்தைச் சொல்லும் அளவில்லாத மந்திரங்கள் மற்றைத் தேவர்களுக்கில்லாத பெருமையை உனக்கே வெளிப்படையாகச் சொல்லுகின்றன. வணக்கஞ் சொல்லு மந்திரங்களாவன அதர்வசிரசு, உருத்திராத்தியாயம், தேவவிரதம் முதலியன.

கூகூ. 'ஸ்தோமம்வோ அத்யருத்ராய' 'யஸ்மை நமஸ் தஸ்மை த்வாஜுஷ்டநிக்யுநஜ்மி' என்பன வாதியாகவரும் மந்திரங்களால் சிவபிரானையே வணக்கங்களெல்லாம் சாரும் என்பது பெறப்படும். எல்லா மொழிகளும் சிவபிரானையே சாருமென்பது இலிங்க முதலிய புராணங்களில் விளக்கப்பட்டது. விஷ்ணு முதலிய தேவர்களை யீன்றோன் சிவபிரானென்பது 'ஸோம: பவத:' என்னும் மந்திரத்தாலும் 'ஏக: புரஸ்தாத்ய' என்னும் ஆயுஷ்ய சூக்த மந்திரத்தாலும் பெறப்படும். சிவகணநாதர்களின் பெருமை சாமவேதத்துள்ள தேவவிரத முதலிய மந்திரங்களிற் கூறப்பட்டது.

---

## உத்தரபாகம்

கூச. சாகை - வேதப்பகுதி. குவால் - கூட்டம். எம்மனோர்-எம்போன்றவர்கள். நுவன்று-சொல்லி. உறத்தேற்றும்-நன்றாகத் தேறச்செய்யும். கண்-அறிவு. சிவபெருமானுடைய பெருமையை வேதங்கள் பல சாகைகளால் கூறி நியாய முறைகளாலும் தெளிவிக்கும். புராணங்கள் அப் பொருள்களையே சிறுவரும் அறியுமாறு விளக்கும் என்பது செய்யுட் பொருள்.

கரு. பதாம்புயம் - திருவடித்தாமரை. ஆற்றுதல் - செய்தல். புலையேன் - இழிவுடையேன். விஷ்ணுமூர்த்தி சிவபூசை செய்தவ ரென்றும் உருத்திர விஷ்ணு பிரமாக்கள் ஆகிய மூவருக்கும் ஆதி கர்த்தா சிவபெருமானே யென்றும் கூறிச் சிவபரத்துவத்தைப் **பாரதம்** வெளியிடுகிறது. சௌஷுப்திக பர்வத்துச் சிவவசனம் துரோணபர்வத்து வியாசவசனம் முதலியவற்றால் விஷ்ணுமூர்த்தி சிவாராதனம் செய்தமை அறியப்படும். சாந்திபர்வவசனம் ஆநு சாசனிக வசனம் முதலியவற்றால் பிரமா விஷ்ணு முதலியோர்க்கு ஆதிகர்த்தா சிவபெருமா னென்பதறியப்படும்.

கசு. அயன் - பிரமன். மகம் - யாகம். வழுத்தும் - துதிக்கும். வான்மீகி செய்த காப்பியம் - **இராமாயணம்**. யுத்தகாண்டத்து ஆதித்திய இருதயத்தில் மூவருக்கும் ஆதி பகவன் சிவபிரானென் பது கூறப்பட்டது. **உத்தர ராமாயணத்தில்** அசுவமேதத்தால் வழிபடப்பெறுந் தெய்வம் சிவபெருமா னென்பது விளக்கப் பட்டது.

கஎ. பெயர்-புகழ். மனுவாற் செய்யப்பட்ட நூல்-**மனுஸ் மிருதி**. யோகீச்சுரராற் செய்யப்பட்ட நூல்-**யோகயாஞ்ஞிய வல் கியம்**. பதஞ்சலியாற் செய்யப்பட்ட நூல்-**யோகசூத்திரம்**. கரும் பன்-மன்மதன்.

கஅ. வேதாந்தப் பொருளினைத் தெரிக்குஞ் சூத்திரம்-**பிரமசூத்திரம்**. அதனைச் செய்தவர்-வியாசமுனிவர். வியாசர் வேதத் தில் ஓரிடத்தும் காணப்படாத பரிணாம விஷயத்தைத் தாம் செய்த பிரம சூத்திரத்திற் கூறியிருக்கின்றார். அது வேத விரோதமாயி னும் **சிவஞான சுவாமிகள்** அப்பதீக்கிதர் கருத்தையே மொழி பெயர்த்துரைத்தருளுகின்றமையின் அவ்வாறே யோதியருளினார் கள். இதனால் சிவஞான சுவாமிகள் பிரம சூத்திரத்தைச் சித் தாந்த சைவப் பொருள் கூறும் நூலாகக் கொண்டார்களென்று கூறுதல் பொருந்தாது. **ஸ்ரீ பாஷ்யத்தில்** சுவாமிகள் இதனை ஏகான்ம வாத நூலென் றெடுத்துக்குகின்றமையால் இஃதறியப்படும். மேல் ௧௪-ஞ் செய்யுளுரையும் பார்க்க. பிரம சூத்திரத்தில் 'சப்தா

தேவப்ராமித:' என்று வருஞ் சூத்திரம் உபநிடதங்களில் வழங்கும் புருஷ சப்தம் ஆன்மாவைக் குறிக்குமா அல்லது சிவபெருமானைக் குறிக்குமா என்று ஆராய்ந்து 'அங்குஷ்ட மாத்ர புருஷ: மத்ய ஆத்மநி திஷ்டதி' என்னு மந்திரத்தில் ஈசான சப்தம் வருதலின் அது சிவபிரானையே குறிக்குமென்று கூறியிருக்கும் விஷயம் இங்கே கூறப்பட்டது. பிறநயமாகும் புருடன்-ஆன்மாவாகிய மற்றைப் பொருளையுங் குறிக்கும் **புருஷபதம்**. அங்குட்டப் பிரமிதி-அங் குட்ட மாத்திரமென்று சொல்லப்பட்ட அளவையால் அளக்கப் படுதல்.

௩௩. பெருவழக்கு - மிகுதியாக வழங்குதல். சாத்திரங்களி னும்-சாத்திரங்களினுலும். கீதைகளிற் பெருவழக்காகச் சொல்லப் படுவது 'ஓம் தத் சத்' என்பது. இவற்றுற் குறிக்கப்பட்டவர் சிவ பெருமானே யென்பது தைத்திரீயோப நிடதத்தில் 'சிவோமே அஸ்து சதாசிவோம்' எனவும் 'தற்புருஷாய வித்மஹே' எனவும் 'புருஷோ வை ருத்ரஸ்ஸந்மஹ' எனவும் வரும் மந்திரங்களால் அறியப்படும். பிரமபதமும் சிவபெருமானையே குறிக்குமென்பது அதர்வ சிரஸில் வரும் 'அத கஸ்மாத் உச்யதே பரம்ப்ரஹ்ம' என் னும் மந்திரத்தாலும், அதர்வ சிகையில் வரும் 'ஸர்வாணிப்ரும் ஹயதீதிப்ரஹ்ம' என்னும் மந்திரத்தாலும் அறியப்படும். இலிங்க **புராணம் ஆதித்தியபுராணம் பாரதம்** முதலியவற்றுலும் இவ் வுண்மை யறியலாகும்.

௪௰. இதுமுதலிரண்டு செய்யுட்களால் ஈசானன் ஈசன் ஈசுவரன் விசுவாதிகனென்னும் பதங்களை யாராய்ந்து சிவபெருமா னது முதன்மை கூறப்படுகிறது.

எல்லா விறைமை-எல்லாத் தலைமை. ஈசான முதலிய சுருதி-ஈசானனென்றும் ஈசனென்றும் ஈசுவரனென்றும் வரும் வேத மந்திரங்கள். அனையனுய்-தாய்போன்றவனே. சமாக்கியை-குறி யீடு: அஃதாவது காரணத்தால் வரும் பெயர். இது மீமாஞ்சை நூலில் மூன்றும் அத்தியாயத்திற் கூறப்பட்டது. "ஸமாக்யா யௌகிகீஸம்ஞ்ஜா" என்பது மீமாஞ்சை வாக்கியம். வேதத்து

பயநூல்-வேத சிவாகமங்கள். சிவாகமமும் வேதமெனப்படும். அது சிவஞான சித்தியார் அ-ம் சூத்திரம், உ௰-வது செய்யுளுக்குச் சுவாமிகள் அருளிச் செய்த உரையா லறிக. அவ்விரு நூல்களையுந் தெளிந்த அறிவுடையோரது புத்தி மீமாஞ்சகர் கூறும் அதனுள் அகப்பட்டு மயங்காது என்பது இதன் பொருள். மயங்கு இருட் குகையென்றது மீமாஞ்சகர் கூறுவதாகிய 'இவை சமாக்கியை; சுருதியல' என்பது.

௪௧. உனையே பகர்ந்திடும்-உன்னையே விச்சுவாதிகனென்று சொல்லும். புராணமும் இவ்வாறே விளங்கும்படி கூறும். அத் தன்மையதாகிய விச்சுவாதிகப்பெயர் நீயே உலகத்திற்கு அதிக னென்று வெளிப்பட விளக்கிப் பரதெய்வ உத்கர்ஷம் சொல்லு வார் செவிகளுக்குக் காய்ச்சிய இருப்புச் சலாகைபோன் றிருக்கு மென்பதாம்.

௪௨. இறைமை-தலைமை: அஃதாவது நிரதிசய ஐசுவரியத் தன்மை. நவம்-புதுமை. பிரம விஷ்ணு ருத்திரர் மூவருஞ் சிவ பெருமான் ஆணை வழி நிற்பவர். ஒழிவற-நீக்கமின்றி. வாயு சங் கிதை, ஆதித்திய புராணம், கூர்ம புராணம், வாசிட்ட இராமா யணம், இலிங்கம், ஸ்காந்தம் பாரதம் முதலியவற்றுள் பிரமாதி மூவரும் கற்பந்தோறும் வேறு வேறாய்ப் பலவாறு பிறந்து சிவ பிரான் ஆணை வழி நிற்பார்களென்பது கூறப்பட்டது.

௪௩. வைப்பு-கருவூலம். மறைகள் பலவாவன-அதர்வசிகை முதலிய பல உபநிடதங்கள். வேதந்தேர்ந்த அப்பொருளை விரிக் கும் புராணங்களும் பல. இங்கே குறிப்பிட்டது புராணங்கள் பதி னெட்டனுள் சிவபுராணங்கள் பத்து என்னும் மிகுந்த எண்ணு டையன வென்பது. பிரபாச கண்டத்தில் புராணங்கள் பதினெட்ட னுள் நான்கு திருமாலையும் இரண்டு பிரமனையும், இரண்டு சூரி யனையும் மிகுந்த பத்து சிவபிரானையும் புகழும் என்பது கூறப் பட்டது. உண்மையறிவார் இவ்வெண்மிகுதியொன்றனே உன் பெருமையை யறிவார். அவர்க்கு வேறு அளவைகள் வேண்டா

என்பதாம். தகுமால்-ஆல் அசை. மெய்ப்படும் அளவை-உண்மையை யறிவிக்கும் பிரமாணம். விளங்கிழை-உமாதேவியார்.

சச. பாஞ்சராத்திரிகள் வேதம் ஏனையோர்க்கு உரிமையில்லாப் பெயர்களால் விஷ்ணுவின் பெருமையைக் கூறும்: ஏனையோரை அவ்வாறு கூறுது: இதனால் வேதக்கருத்துத் தெரியலாகு மென்று கூறுவர். **சுவேதாச்சுவதரம் அதர்வசிகை அதர்வசிரம்** முதலிய உபநிடதங்களை அவர் ஓதி யுணர்ந்தாராயின் அவ்வாறு கூருரென்பது இதன் கருத்து.

சரு. தாணு-சங்காரருத்திரன். எண்-சிறப்பு. போக்கு-மாறுபாடு நீக்கம். ஆணலார்-பேடிகள். சங்காரருத்திரன் ஏனையிருவரினு மேம்பட்டோ னென்றும் விஷ்ணுமூர்த்தி ஏனை யிருவரினும் மேம்பட்டோ னென்றும், பிரமன் ஏனை யிருவரினும் மேம்பட்டோ னென்றும் வரும் புராணவாக்கியங்கள் கற்ப வேறுபாடுபற்றிப் பொருத்த முடையன வென்று மச்சபுராணங் கூறுகின்றது. இதனையுணராத பாஞ்சராத்திரிகள் இம்மச்சபுராண வாக்கியத்தாற் சிவபுராணங்களுக்கு அப்பிரமாணத் தன்மை கூறப்பட்டதெனக் கூறுவர். அது பொருந்தாமை ஸ்ரீ சிவஞான **பாடியத்தில்** முதற் சூத்திரத்து இரண்டாம் அதிகரணத்திற் கூறப்பட்டது. அன்றியும் அவர் மூவர்க்குங் காரணனும் துரியனுமான பரமசிவனுக்கும் சங்காரவுருத்திரனுக்கும் வேறுபாடறிகிலர்.

சகூ. முகுந்தன்-விஷ்ணு. உவன்-சுட்டுப் பெயர். தன்னுடைக்கூறு-சிவபெருமானுடைய விபூதி. சிவபெருமானது சர்வகாரணத்துவ முதலிய மகிமைகளைத் திருமால்மீது ஏற்றிக் கூறியது திருமால் சிவபெருமானுடைய விபூதியாதல் பற்றியென நாராயண காரணத்துவ பரசுருதிகளின் உபபத்தி இச் செய்யுளாற் பெறப்பட்டது. ஆரணம்-வேதம். உள்ளுறை-உட்பொருள். **ஸ்ரீ அரதத்தாசாரியர்** 'நாராயணனைப் பரப்பிரமமென்றும் பரஞ்சோதியென்றும் பரதத்துவமென்றுங் கூறுதல் மலைவாம் பிறவெனின்-அற்றன்று: மாந்திரிகன் கருடபாவனையாற் கருடனோடத்துவிதமாய் நின்ற வழி அக்கருடனென்றே கருதப்படுதல்போல நாராயணன் சிவ

பாவனையாற் சிவபிரானோடத்துவிதமாய் நின்றவழி யங்ஙன முப சரிக்கப்பட்டானாகலின் மலைவு யாண்டைய தென்க' என்றருளிச் செய்து நாராயண காரணத்துவ பரசுருதிகளின் உபபத்தி விளக்கி யருளினார்கள். ஆரண மொழிகளென்றது உபலக்ஷணத்தால் புராண முதலியவைகளையும் உணர்த்தும்.

சஎ. மகோபநிடதத்தில் 'நாராயண னொருவனே முதற் கணிருந்தான் : பிரமா இருந்திலன். ஈசான னிருந்திலன்' என்று தொடங்கி 'அவன்பானின்று பிரமன் தோன்றினன் சூலபாணி யாகிய புருடன் தோன்றினன்' என்பதாதியாகக் கூறப்படும் தோற்றம் சர்வ காரணனாகிய பரமசிவனை வந்தடையாது. அவ் வாக்கியம் 'பிராதுராஸீத் தமோநுத' என்று வரும் மானவ புராண வசனத்திற் கேற்பச் சிருட்டியின் றொடக்கத்தில் பிரமன் உருத்திரன் முதலியோர் உதித்தற்கு முன்னர்த் துணையிலியாய் நாராயணன் பிறந்தானென்று பொருள்படும். சங்காரருத்திரனுக் கும் பரமசிவனுக்கும் வேறுபாடு அதர்வசிகை முதலியவற்றிற் கூறப் பட்டது. ஓய்விலாது-இடைவிடாது. உள்ளுதல்-தியானித்தல். மணிவிளக்கு-இரத்தினதீபம்.

சஅ. ஒரு கற்பத்தில் அயன் பரமசிவன்பானின்றும் முதற் கட்டோன்றி ஏனை யிருவரையுந் தோற்றுவிப்பன் : மற்றொரு கற் பத்தில் விஷ்ணு பரமசிவன்பானின்றும் முதற்கட் டோன்றி ஏனை யிருவரையுந் தோற்றுவிப்பன்: பின்னொரு கற்பத்தில் உருத்திரன் பரமசிவன் பானின்றும் முதற்கட் டோன்றி ஏனை யிருவரையுந் தோற்றுவிப்பன்: இதனான் இம்மூவருள் உயர்ச்சி தாழ்ச்சி யில்லை யென்று வேத முணர்ந்தோர் கூறுவர் என்பது இதன் பொருள். இது வாயுபுராணத்தில் விரித்துக் கூறப்பட்டது. அறுக்கும்-வரை யறுக்கும். முன்னோன்-முதலிற் றோன்றினோன். இறப்புறு-கெடுத லில்லாத.

சகூ. ஒருசாரார்-ஒரு பகுதியினர். அதிகன்-மேம்பட்டவன். இவர்-பிரம விஷ்ணுக்கள். அவன்-உருத்திரன். அவன் கூறு என் றது பரமசிவனாகிய மகாருத்திரன் கூறாகிய சங்கார ருத்திரனை.

இச் சங்காரருத்திரன் பெயர் உருவம் செய்கை வேடம் என்பன சிவபிரானேடொப்பவுடையனுதலின் ஏனையிருவரினும் மேலோன் என்பதாம். மூவரில் சங்கார உருத்திரன் மேம்பட்டவனென்பது சூதசீதை முதலியவற்றிற் கூறப்பட்டது. பிரம விஷ்ணுக்கள் பாற் றோன்றின உருத்திரன் நீலலோஹித ருத்திரனென்பது வாயு சங்கிதை சூதசங்கிதை முதலியவற்றிற் கூறப்பட்டது. சங்கார ருத்திரன் பரமசிவனேடொப்பப் பெயர் முதலியனவுடைய னென்பது சிவபுராணம் சூதசங்கிதை முதலியவற்றிற் கூறப்பட்டது.

ரு௰. இதுமுதற் சிவபெருமானது விசுவசேவியத்தன்மை கூறப்படுகின்றது.

ருக. தலைமை யொருவன் - தலைமையினையுடைய ஒருவன். கலதிகள் - மூதேவிகள்: இரக்கம்பற்றிவந்த இகழ்ச்சியைப் புலப் படுத்துஞ்சொல். வறிதே-பயனின்றி. சுலவுதல்-சுழலுதல். மக்கள் எவ்வாறு தேவர்வழிப் பாரதந்திரராய் நிற்பரோ அவ்வாறு தேவர் அசுரர் மக்கள் முதலாகிய அனைத்துயிர்களும் சிவபிரான் வழிப்பா தந்திரமாய் நிற்பன. பணி-ஆணை.

ருஉ. மானிடர் தருமம் - மனிதர் கடமை. மாதவர் - இருடி கள். மானுட தர்மங்களுள் சிவபக்தி சிறந்ததென்று இருடிகள் கூறியதனை லென்க. வாமன புராணத்து 'ஜிதேந்திரியத்வம் சௌசம்ச மாங்கல்யம் பக்திரேவச சங்கரே பாஸ்கரே தேவ்யாம் தர்மோஅயம் மானவஸ் ஸ்மிருத:' எனக் கூறப்பட்டது கொண்டு அஃதறியப்படும்.

ருங. இருபிறப்பாளர்-பிராமணுதிமூவர். காயத்திரி மந்தி ரத்தாற் பிரதிபாதிக்கப்படும் பொருள் சிவபெருமானே யென்பது ஸ்ரீ அரதத்தாச்சாரியரால் சதுர்வேத தாற்பரிய சங்கிரகத்தில் வச் சிர லேபனஞ் செய்யப்பட்டிருக்கிறது. 'ஓம் தத்ஸவிதுர்வரேண் யம் பர்க்கோ தேவஸ்ய தீமஹி த்யோயோ ந: ப்ரசோதயாத்' என் பது காயத்திரி. தூசு-ஆடை.

ருச. விப்பிரர் - மறையோர். மறையோர்க்கு அக்கினியே தெய்வமென்றும் அக்கினிக்கு அந்தர்யாமி சிவபெருமானேயென்

றும் சுருதிஸ்மிருதிகள் கூறுவதால் மறையோர்க்குக் குலதெய்வஞ் சிவபெருமானே யென்பது விளங்கும். யஜுஸ்ஸம்ஹிதை 'ஆக்ந யோ வை ப்ராஹ்மணோ தேவதயா' என்று கூறுகின்றது. சந்தோகோபநிஷதம் 'த்வம் தேவேஷு ப்ராஹ்மணோ அஸ்யஹம் மநுஷ்யேஷு ப்ராஹ்மணோவை ப்ராஹ்மண முபதாவத்யுப த்வாதாவாமி' என்னும் மந்திரத்தால் சிவபெருமான் தேவருட் பிராமணராதலின் பிராமணன் சிவபெருமானை வழிபடல் வேண்டுமென்று கூறுகின்றது. 'தஸ்மாதக்நி முகே யத்து தத்தம் ஸ்யாத்யோ கேநசித் தத்ஸர்வம் ருத்ரமுத்திஸ்ய தத்தம் ஸ்யாந்நாத்ர ஸம்சய:" என்பது மிருதி வசனம்.

௫௫. வேத - விளி. பண்ணவர் - தேவர். பரதெய்வம் - அவர் வழிபடும் மற்றைத் தெய்வங்கள். கூர்மபுராணத்தில் 'விப்ராணா மக்நிராதித்யோ ப்ரஹ்மா சைவ பிநாகத்ருக்' என்று கூறிப் பின் யுகதர்மப் பிரகரணத்தில் 'கலௌ தேவோ மஹேச்வர:' என்று விளக்கித் 'தஸ்மாத் ஸர்வ ப்ரயத்நேந ப்ராப்ய மாஹேச்வரம் யுகம் விசேஷாத் ப்ராஹ்மணோ ருத்ரமீசாநம் சரணம் வ்ரஜேத்' என்று கூறுவதால் மறையோர்க்குக் கலியுகத்தில் விசேடதெய்வம் சிவபெருமானே யென்பது விளங்கும். சிவபெருமானை வழிபடாது ஏனைத் தேவர்களை வழிபடுவோர்க்கு அவர் வணங்கும் ஏனைத் தேவகளும் பயன்றரா ரென்பதற்கு 'நார்சயந்தீஹ யே ருத்ரம் சிவம் த்ரிதசவந்திதம் தேஷாம் தாநம் தபோ யஜ்ஞோ வ்ருதா ஜீவிதமேவச இத:பூர்வம் க்ருதம் கர்ம பவாத்பிரகிலம் வ்ருதா கார்சநம்விநதேந மோஹிதா தேவமாயயா' என்னும் பிரம வசனமே சான்று.

"பிராமணனீயே கடவுளர் தம்முட்
பிஞ்ஞகா வேனையோர் தம்முட்
பிராமணன்யானே பிராமணன் றனக்குப்
பிராமணன் கதியுனை யிகழ்வோன்

பிராமணனல்லன்றன் குலதெய்வம்
விண்டு பின்னொன் றனைத் தொழுமப்
பிராமணற் கிரண்டும் பயப்படாகிரயம்
புகுவனென் றுயர்மறை பேசும்"—என்பது,

காஞ்சிப்புராணம்-காயாரோகணப்படலம். கூ.

ருசு. பயனை விரும்பினோரும் சிவபெருமானையே வழிபடல் தக்கதென இச் செய்யுள் கூறுகின்றது. சிவபெருமான் பொறுமையுடையவனென்பது 'நமஸ்ஸஹமாநாய' என்பதாதி மந்திரங்களாலும், கருத்துக்கு எளியவனென்பது 'பாவக்ராஹ்ய மநீடாக்யம் பாவாபாவகரம் சிவம்' என்னும் மந்திரத்தாலும் விளங்கும். சிவனடியார்க்கு அருள் விரைவிற் கிடைத்தல் சிவபுராணங்களில் வெளிப்படை. அவர் தாம் விரும்பியதினும் மேற்பட்ட பயன் பெறுவரென்பது திருமால் குபேரன் முதலியோர்க்குச் சிவபெருமான் அருள் புரிந்தமையின் வைத்தறியப்படும்.

ருஎ. உயிர்களுக்குச் சிவபெருமான் அநுக்கிரகிக்கும் போகங்கள் பிராகிருதம் அப்பிராகிருதமென் றிருவகைப்படும். அவற்றுட் பிராகிருதம் இம்மை மறுமையென் றிருவகைப்படும். இச் செய்யுளாற் சிவபெருமானை வழிபடுவார் அவ்விருவகைப் பிராகிருத போகங்களையு மடைவரென்பது கூறப்படுகின்றது. சிவபெருமானை வழிபடுவோர் இம்மையில் வேண்டிய வேண்டியாங்கு பெறுதல் பிரசித்தம். மறுமையில் அவர் அடையும் ஸ்தானம் பிரம விஷ்ணு பதங்களுக்கு மேலான சிவ பதமாம். இது சிவ தநு மோத்திரத்திற் கூறப்பட்டது கொண்டு தெளியப்படும். அம்மை-மறுமை, அநுசரர்-அடியார்.

ருஅ. இச் செய்யுளாற் சிவனடியார் பெறும் அப்பிராகிருத போகங் கூறப்படுகின்றது. அது நிரதிசயானந்தமென்று சொல்லப்படும். அதற்கு வாயில் மெய்ஞ்ஞானமாகும். இவையிரண்டும் சிவபெருமான் றிருவருளாலன்றிக் கிடையா. நிரதிசயானந்தம்-அளவிலின்பம். புகல்-வினைத்தொகை. **கர்ப்போபநிடதம் சுவே**

தாச்சுவதாம், நாராயணேபநிடதம், ஜாபாலோபநிடதம் முதலி யன இதற்குச் சான்று.

டுக. வேட்டது-விரும்பியது. வற்று - வன்மையுடையது. நீத்து-விலக்கி. ஸ்ரீ அரதத்தாச்சாரியர் சிவ வழிபாடு மறுதித் திரயத்தானும் செய்யத்தக்க தென்பதைப் பிரமாணவாயிலாய்ச் சதுர்வேத தாற்பரிய சங்கிரகத்தில் நிறுத்தியருளினர்.

சும. மருள்-மயக்கம். அவிச்சை-அறியாமை. அவா-ஆசை. ஒருவுக-கழிக்க.

'பதியுமோ கத்தான் மானத்தான் மருளாற்
பற்றிய சார்பிஞ லுன்னைத்
துதிசெயா திகழ்வோ ரிகழுக கலைசைச்
சுந்தரா சிதம்பரே சுரனே
மதிபொதி சடையா யாங்களெல்லேமும்
வழிவழி யுன்னடித் தொழும்பே
நிதியென வுடையே மென்றுமிக் கருத்தே
நிலைபெறச் செய்துகாத் தருளே'

எனச் சிவஞான சுவாமிகள் அருளிச் செய்ததுங் காண்க.

---

## பயன் முதலியன

க. முப்பானிரட்டி - அறுபது. வான்-பெருமை. வாய்மையின்-வாய்மையால். உய்வான்-எதிர்கால வினையெச்சம். உம்பரான்-தேவன்.

உ. தெரிவு-தெரிதல்.

ஈ. யானே - ஏகாரம் பிரிநிலை. ஆறு-அமையாத. அரி-விஷ்ணுமூர்த்தி. அந்தநின்சீர்-அத்தகைய உனது மகிமை.

திருச்சிற்றம்பலம்

முற்றிற்று

அன்னத்தைப் புசிப்பர்'' என்று அதுவே கூறு கின்றது. அஃதங்ஙனங் கூறுமுகத்தானே, கங "நாடோறும் உணற்குமுன்னர்ச் சிவபூசைசெயற் பாற்று'' என்னும் விதிக்கு மூலமாதலறிக.

சிவபுத்திரர்களாகிய மருத்துக்களைப் "பாத கூச சூனுக்கள்'' என்று வேதங்கூறியது அவருக்குத் திருநடனத்தொழி லுண்மைபற்றி யென்க. பாரத்தை வகித்தல்பற்றிப் பாத னெனப்படுகின்றா ரெனின்;—விசேடமாகிய திருநடனத் தொழில்

---

'சிவபிரானை வழிபடு மடியார்கள் அன்னத்தைப் புசிப்பர்' என்று கூறும் மந்திரம்:-'அந்தரிச்சந்தி தம் ஜநே ருத்ரம் பரோ மநீஷயா க்ருஹ்ணந்தி ஜிஹ்வயா 'ஸஸம்' என்பது. இருக்குவேத (அ. சுக. ந.) இதன் உபப்பிருங்கணம் பாராசரபுராணத்து வருதல் காண்க.

திருநாவுக்கரசு நாயனாரும் இக்கருத்தையுட்கொண்டு 'உண்பதன்முன் மலர்பறித்திட் டுண்ணா ராகில்' எனவும் 'அருப்போடு மலர்பறிதிட் டுண்ணா வூரும்' எனவும் தனித் திருத்தாண்டகத்தில் அருளிச் செய்தனரென்க.

கங. நாடோறும் உணற்குமுன்னர்ச் சிவபூசை செய்யற் பாற்று' என்னும் விதியாவது சிவதரும சூத்திரத்தில் 'வரம் ப்ராணபரித்யாக: சேதநம் சிரஸோ அபிவா | நத்வநப்யர்ச்ய புஞ்ஜீயாத் பகவந்தம் த்ரிலோசநம்|| ' என வருவது.

கச. மருத்துக்களைப் பாதசூனுக்களென்று கூறும் மந்திரமாவது:-" ஆஸத்யா பர்ஹிர் பாதஸ்ய ஸூநவ: என்பது. (இருக்குவேத உ. கசு. உ.)

சூனு—மகன்.

அவர்க்குளதாயிருக்க, அதுபற்றிக் கூறுது, அங்ஙனங் கூறாத தெற்றிற்கென்று கடாவி மறுக்க.

கூரு இருக்கு வேதத்திற் சிவபிரானை "வீரன்" என்
கூசு றது காமன், இயமன், திரிபுரத்தர், தக்கன் முத லியோரைப் பங்கப்படுத்தினமை பற்றியென்க.

கூஎ ஆயிரஞ் சாகையுடைய சாமவேதத்தில் "ஆன்மாக்க ளெல்லாவற்றிற்கும் அதிபதி சிவ பிரான்" என அவர் மகிமை கூறப்பட்டது. அதனகத்துள்ள தேவவிரத முதலிய மந்திரங் களிற் சிவகணநாதர் மகிமை கூறப்பட்டது.

கூஅ குணங்களெல்லாவற்றானும் பிதாவாகிய சிவ பிரானோடு சமத்துவமுடைய விநாயகக்கடவுள் சுப்பிரமணியக்கடவுளென்னுந் திருக்குமார ரிரு வருஞ் சாமவேதத்தாற் றுதிக்கப்படுகின்றனர்.

---

கூசு. சிவபிரானை வீரனென்று கூறும் மந்திரமாவது :- 'அபிரோவீரோ அர்வதி க்ஷமேத ப்ரஜாயேமஹி ருத்ரப்ர ஜாபி' என்பது. (இருக்குவே உ. கக. க.)

கூஎ. சிவபெருமான் ஆன்மாக்களுக்கெல்லாம் அதிபதி யென்னும் சாமவேத மந்திரமாவது :-' அதிபாதாயி மித்ரா பாதாயி க்ஷத்ராபாதாயி ஸுவ :' என்பது.

சிவகணநாதர் மகிமை கூறும் சாமவேத மந்திரமாவன:- 'யே தேவா திவிஷதஸ்த' என்பது முதலியன.

கூஅ. சாமவேதத்தில் 'ஜுஷாணஸ ஆத்மந' என்று தொடங்கும் வர்க்கத்தில் விநாயகப்பெருமானும், 'ஆமந்த்ரை

அதர்வசிகை "பிரமன்முதலிய பொருள்க கக ளெல்லாவற்றையுங் கைவிட்டுச், சிவத்துவத் தைச் செய்தருளுஞ் சிவபிரானே புருடர்களால் வீடுபேற்றின் பொருட்டுத் தியானிக்கற்பாலர், வீடுபேற்றிற் கேதுவாகும் வார்த்தையிதுவே பிறிதில்லை" என்று கூறிமுற்றிற்று.

யசுர்வேதமுடையார் சிவபிரானோடுடன் ௩ றோன்றுதல் பற்றி, அருட் சத்தியாராகிய சிவ பிராட்டியாரை அவர்க்குத் "தங்கை" என்று கூறுப. அதர்வண வேதமுடையார் "பிரமன் முதலியோரைநீக்கிச், சிவபிராட்டியாரோடு சிவ

---

ரிந்த்ர ஹரிபிராணோ விச்வாஸுஹவ்யம்' என்று தொடங்கும் வர்க்கத்தில் சுப்பிரமணியக்கடவுளும் துதிக்கப்படுகின்றனர்.

கக. 'ப்ராஹ்ம விஷ்ணு ருத்ரேந்த்ராஸ் தேஸம் ப்ரஸூயந்தே ஸர்வாணி சேந்த்ரியாணி ஸஹபூதைர் ந காரணம்' என்று தொடங்கி 'சிவ ஏகோ த்யேயச் சிவம்கரஸ் ஸர்வமந் யத்பரித்யஜ்ய ஸமாப்தாதர்வசிகா' என வருவது அதர்வசி கோபநிடதம்.

௩. சிவபிராட்டியாரைச் சிவபிரானுக்குத் தங்கை யென்று கூறும் யசுர்வேத மந்திரமாவது :-' ஆகுஸ்தே ருத்ர பசுஸ்தம் ஜுஷஸ்வைஷ தே ருத்ரபாக: ஸஹ ஸ்வஸ்ராம்பிகயாதம் ஜுஷஸ்வ' என்பது. (யசுர்வே. க. அ.) மாணிக்கவாசக சுவாமிகளும் இக்கருத்தை 'எம்பெருமா னிமவான் மகட்குத், தன்னுடைக் கேள்வன் மகன்றகப் பன்றமையன்' என்றருளிச் செய்தனர். (திருவாசகம் திருப்பொற்சுண்ணம் கஅ.)

பிரான் றியாணிக்கற்பாலர்" என்று கூறுப.
ரூக வேதங்களெல்லாம் "ஏகனாகிய சிவபிரானே பதிப்பொருள்" என்று கூறினும், யசுர்வேத முடையார் அவரை அவர்தாதான்மிய சத்தியாரோடு இருபொருளாக விவகரிப்ப. அச்சிவ பிராட்டியாருடைய வாக்குமனத்துக் கதீதமான பிரபாவ மனைத்தையும் புகலப் பிரமனும் வல்லுநனல்லன்.

ரூஉ ஒரு திருமுகமும், மூன்று திருக்கண்ணும், நான்கு திருத்தோளும், வெண்ணிறமும் பொருந்திய சிவபிரானுடைய அழிவில்லாத் திருமேனி யொன்றேனும், உபாசிப்பவர் உபா

---

'பிரமன் முதலியோரை நீக்கி' என்பதனை முன் கூகூவது சுலோக விளக்கத்திற் காட்டப்பட்ட அதர்வசிரோபநிடத மந்திரத்தாலும், 'சிவபிராட்டியாரோடு சிவபிரான் றியாணிக்கற்பாலர்' என்பதனை 'அத கஸ்மாதுச்யதே ஈசாந:' என்று தொடங்கி 'யஸ்ஸர்வாந் லோகாந் நீசத ஈசாநீபி: ஜநநீபி: பரமசக்திபி:' என்பனவாக வரும் அதர்வசிரோப நிடத மந்திரத்தாலும் அறிக.

ரூக. 'ஏகனாகிய சிவபிரானே பதிப்பொருள்' என்பதனை 'ஏக ஏவ ருத்ரோ நத்விதியாயதஸ்தே' எனவும் 'ய ஏகோ ருத்ர உச்யதே' எனவும் வரும் மந்திரங்களாலறிக. எனினும் சத்தியாரோடு இருபொருளாக வியவகரிக்கப்படுவதை 'ஸஹஸ்வஸ்ராம்பிகயா' எனவும் 'அம்பிகாபதய உமாபதயே' எனவும் 'பாரஸ்ய சக்திர் விவிதைவ ச்ரூயதே' எனவும் வரும் சுருதிகளாலறிக.

சனை வேறுபாடுபெற்றிப் பலவாய் விளங்கும். "கிராத வடிவரும் பிநாகத்தைத் தரித்தவரும், ௱௩
தோலுடையருமாகிய சிவபிரானை, அவருடைய தருமபத்தினியாராகிய சிவபிராட்டியாரோடு பர்வகாலத்திற் செயப்படுஞ் சாகமேத மென்னுங் கிரியையிற் புண்ணிய அவிசுகளால் அநந்நிய பாவனையை யுடைய பத்தர் திரியம்பக மந்திரத்தாற் பூசிக்க" என்று கற்பசூத்திரத்திற் கூறப்பட்டது. "நல்லோர் சகத்தினுற் ௱௪
பத்தியின் பொருட்டு வீரிய மழையைப் பெய்வதூஉம், அணித்தாகிய மருங்கிற் பத்தினியாராகிய சிவபிராட்டியாரையும் நடுவிற் சுப்பிரமணியக் கடவுளையு முடையதூஉம், சராமரணரகித மானதூஉமாகிய விக்கிரகத்தை யுடைய சிவபிரானையும், அவருடைய துவார பாலகர்களையும், அவர் பத்தினியாரையும், தேவ

---

௱௩. 'ப்ரதி பூருஷமேககபாலம் நிர்வபதியாவந்தோ' என்று தொடங்கி 'பிநாகஹஸ்த: க்ருத்திவாஸா:' என்பனவாக வரும் மந்திரங்களைக் கற்பசூத்திரத்துக் காண்க.

௱௪. யசுர்வேதத்தில் ஈசானபலி கூறுமிடத்து 'உபஸ்ப்ருசத மீடுஷே மீடுஷ்யை ஸ்வாஹா ஜயந்தோபஸ் ப்ருச ஜயந்தாய ஸ்வாஹா பவாய தேவாயஸ்வாஹா' என்பனவாகக்கூறி 'தேவஸேநா உபஸ்பிருசத தேவசேநாப்ய ஸ்வாஹா த்வாராதிபோபஸ்ப்ருச த்வாராதிபாய ஸ்வாஹா த்வாரப்யு பஸ்ப்ருச த்வாரப்யை ஸ்வாஹா நிஷங்கிந்நு பஸ்ப்ருச நிஷங்கிணே ஸ்வாஹா நமோ நிஷங்கிண இஷு- திமதே க்ஷேத்ரஸ்ய பதிநா வயம்' என வருதல்காண்க.

சேனையாரோடு தேவசேனையையும், கேத்திர
பாலரையும் பூசிக்கின்றனர்" என்று யசுர்வே
௱௫ தத்திற் கூறப்பட்டது. "விருபாக்கராகிய சிவ
பிரானைச் சிவபிராட்டியாரோடும், திருக்குமாரர்
களிருவரோடும், கணங்களோடும், பாரிடரோ
டும், அட்டமிப் பிரதோடத்திற் பூசிப்பவர்,
தம்பாவத்தி னீங்கி, மிருத்துவையுங் கடப்பர்"
என்று போதாயனத்திற் கூறப்பட்டது.

௱௬ தேவர்களுடைய மந்திரங்கள் சில; அவை
அவர்களுடைய வரையறைப்பட்ட பிரபாவங்களை
யே கூறும். சிவபிரானுடைய திருநாமங்களையும்
திருமேனிகளையும் குணங்களையும் வருணிக்கு
௱௭ மந்திரங்கள் வரையிறந்தன. திருவுருத்திரத்
திற் கூறப்பட்ட சிவபிரானுடைய திருநாமங்
களும், திருமேனிகளும், குணங்களும் அன்ன.

௱௮ இனி வேதநூல் சுயம்புவானாலு மாகுக; சிவபிரானால் அருளிச் செய்யப்பட்டதானாலுமாகுக; வேதவாக்கிய முழுதும் பிரமாணமே. வேதத்தின் வேறாய நூல்கள், அதனோடு விரோதியாத வழி, ஆக்கியோர் தாரதம்மியத்துக் கேற்பப் பிரமாணமாம். வேதம்போற் றிவ்விய சிவாகமமும்

---

௱௫. போதாயனர் 'தேவஸ்யாயநே ப்ரதிதிசம் ப்ரத்யோதயதி' என்பனவாகக் கூறுதல் காண்க.

௱௮. வேதம் சுயம்பு என்பார் மீமாஞ்சகர். ஈசுரப் பிரணீதமென்பார் தார்க்கிகர்.

பிரமாணமாம். அச்சிவாகமம், சிவத்தியானத் ௱௯
துக்கு உபயோகமாயுள்ள பதிபசுபாச மூன்றனை யும் விளக்குவதாய்ச், சிவபிரானுக்குத் திருமுக முதற் றிருவடியீறுயுள்ள அங்கங்களா யிருக் கும். யாகவிதி கற்பசூத்திரத்தாற் பெறப்படு ௱௰
தல் போலத் தியாதாவும், தியானமும், தியேய முமாகிய மூன்றுஞ் சிவாகமத்தாற் பெறப்படும். கிருகியசூத்திரத்தில் உபநயன விதியிற் கூறப் ௱௰௧
பட்ட "அத்துவநாம்" என்னு மந்திரம் அத்து வாவையும், அத்துவபதியையும், அத்துவாக் களின் றாரதம்மியத்தையும், சிரேட்டாத்துவா வெனப்படு மந்திராத்துவாவின் முடிபாயுள்ள சிவத்தையுங் கூறுதலின், சிவாகமத்திற் கூறப் படும் அத்துவாக்கள் வேதத்தினுங்காண்க. இருடிகளாற் செய்யப்பட்ட கற்பசூத்திர முதலி ௱௰௨
யன பிரமாணமாகுமாயின், பெரிய விருடியாகிய சிவபிரா னருளிச்செய்த சிவாகமம் பிரமாணமா மெனக்கூறல் வேண்டுமோ வென்க. தவ வலியி ௱௰௩

௱௮—௱௰௧. இங்கே கூறப்பட்டதைச் சிவஞான பாடி யத்துச் சைவாகமப் பிராமாணியங் கூறுமிடத்து அருளிச் செய்தது கொண்டுதெளிக.

௱௰௧. அத்துவநாம் என்னும் மந்திரமாவது :—'அத்வ நாமத்வபதே ச்ரேஷ்டஸ்யாத்வந: பாரமசீய' எனவருவது.

௱௰௨. சிவபெருமான் பெரியவிருடி யென்றலை 'விச் வாதிகோ ருத்ரோ மகர்ஷி' என்னுஞ் சுருதியாலறிக. (சுவேதா. ௩. ௪., ௪. ௧௨)

ஞன் வேத சமூகத்தினின் றெவ்வோர் மந்திரத்
தை யுணரப்பெற்றானே யன்றே இருடி என்பவா
கலின், இயல்பாகவே அம்மந்திரங்க ளனைத்தை
யும் உணராநிற்குஞ் சிவபிரானைப் பெரிய விருடி
௱௫௪ யென்றற் காசங்கை என்னு மின்றென்க. சாங்கி
யர் பாச பசு பதி யென்னு மூன்றனையு முறையே
பிரதானம் புருடன் ஈசனெனப் பெயரிட்டு
வழங்குப. அது சிவாகமத்திற்கு முடன்பா
டேயென்க.

௱௫௫ கிருகியசூத்திரகாரர் சிவபூசை கூறினாரில்லை
யாலோவெனின்;—வேதத்திற் பெறப்பட்டும்
புராணங்களிற் பிரசித்தமாயும் போதாயன
முனிவரால் விஸ்தரிக்கப்பட்டு மிருத்தலின்,
அதனை முற்று முணர்ந்த கிருகியசூத்திரகாரர்
கூறுதொழிந்தார். அதுமட்டோ, அவர் முக்கி
யமாகிய யஞ்ஞோப வீதத்தையுங் கூறுதொழிந்
௱௫௬ தார். கூறுததுகொண்டு சிவபூசைக்குக் குறை
யென்னை? வேதங்களுக்கு உபபிருங்கணங்களா
கிய புராணங்களிற் சிவபூசை ஆண்டாண்டு
மூழங்கப் படுகின்றது. அவ்வுபபிருங்கண வாயி

௱௫௫. சிவபூசை வேதத்திற் பெறப்படுதலை 'தமுஷ்டு ஹிய: ஸ்விஷ்டா:' (இருக்குவே. ௫. ௪௨. ௧௧.) 'ஆவோ ராஜாநம்' (இருக்குவே. ௪. ௩. ௧.) 'அந்த ரிச்சந்தி, (இருக்குவே. ௮. ௬௧. ௩.) என்பன வாதியாகவரும் மந்திரங் களாலறிக.

லால் வேதத்தை மூலமாகவுடைய மிருதிகள் கூறுமைபற்றிச் சிவபூசை குறையுறுதென்க. அல்லதூஉம், வேதப்பொருளை நிச்சயித்தற்குப் ௱௭௦ புராணம் அங்கமாம். அப்புராணங்களா னிச்சயிக்கப்பட்ட வேதப்பொருளே மிருதிகளாம். ஆகவே, வேதம் போலப் புராணவசனம் பல முடையன; அவற்றின்முன் மிருதிகள் வலியுடையவாகா. அல்லதூஉம், அநுபலத்திக்கு ௱௭௦அவிடயமாகுஞ் சுருதியை மூலமாகவுடைமையினும் அவை பிரபல பிரமாணமாகா. ஆகவே, பிரத்தியக்க வேதத்தினன் விதிக்கப்பட்ட யாகம் மிருதியின் பார்வையை வேண்டாதவாறு போலச் சிவபூசையும் அவற்றின் பார்வையை வேண்டாதென்க.

இனிப் "பூர்வான்னத்திற் செயற்பாலனவா ௱௭௧கிய நியமங்களை முற்றி, நியதசித்தனுய்த் தேவ பூசையைச்செய்க" என்று மநுவாற் கூறப்பட்டமையானும், சிவபிரான் றேவருள் வைத்து மகா தேவரெனப் படுதலானும், மிருதியினுஞ் சிவபூசை கூறப்பட்டதென்றே கோடும். அற்றேல், சிவபிரானுக்கு மகாதேவப் பெயருண்மைக்குப்௱௭௨

---

௱௭௧. மனுவாக்கியமாவது :—'சூர்யாங்நியத சித்தஸ்து பூர்வாஹ்நே தேவதார்சநம்' என்பது.

௱௭௨. அதர்வசிரமந்திரமாவது :—'அத கஸ்மாதுச்யதே மஹாதேவோ யஸ்ஸர்வாந் பாவாந் பரித்யஜ்யாத்ம

பிரமாண மென்னையெனின்;—அதர்வசிரசே பிர
௱௨௰மாணமெனக. அன்றியும், போதாயன சூத்தி
ரத்திற் சிவபிராட்டியாரோடும் இடபதேவரோ
டுஞ் சிவபிரானுக்கு ஈசானபலி கூறிப் பூசை
௱௨௨விதித்ததூஉங்காண்க. புத்திப்பொருட்டுச் செய
ப்படுவதூஉம் முத்திப் பொருட்டுச் செயப்படுவ
தூஉமெனச் சிவபூசை இருவகைப்படும். வேள்
வியும் அங்ஙனம் இருவகைப்படும்.

௱௨௩ சிவபிரான் றேவருட் பிராமணராகலின், அவர்
க்கு நிவேதித்ததனைப் புசிக்கலாகாதென முனி
வர் விலக்குப. அற்றாகலினன்றே "பிராமணருச்

---

ஞானயோகைச்வர்யே மஹதி மஹீயதே தஸ்மாதுச்யதே மஹாதேவ :' என்பது. வடநாட்டுப் பிரதிகளில் பகவான் மகேசுரனென்னு மிருபெயர்களுக்குங் காரணங்கூறும் மந்திரங்களும் இம் மந்திரப்பகுதியும் விரவிக் காணப்படுகின்றன.

௱௨௰. இஃது ஆபஸ்தம்பராலுங் கூறப்பட்டது.

௱௨௨. இதனைச் சிவஞானபாடியத்து எட்டாஞ் சூத்திர வுரையிற் கண்டு தெளிக.

௱௨௩, ௱௨௪. சிவபெருமான் தேவருட் பிராமணரென்பதற்குப் பிரமாணமாகிய சாமவேதத்துப் பிரபத மந்திரமாவது :—' தபச்சதேஜச்ச ' என்று தொடங்கிவருமிடையில் ' த்வம் தேவேஷு ப்ராஹ்மணோ அஸி அஹம்மநுஷ்யேஷு ப்ராஹ்மணோவை ப்ராஹ்மணமுபதாவத்யுபத்வா தாவாமி ' யென்பது. சிவஞான சுவாமிகள் இம் மந்திரப் பொருளைப் 'பிராமணனீயே கடவுளர் தம்முட் பிஞ்ஞகா

சிட்ட மனைத்தையு நிலத்திற் புதைக்க அல்லது சலத்திலெறிக" என்று கற்பசூத்திரத்திற் கூறி யதூஉமென வுணர்க. பிராமணர்க்குப் பிராமணாஉ ராகிய சிவபிரானையே வழிபடுதல் தகுதியாம். ஏனைக் கீழ்வருணத்தராகிய தேவரை வழிபடுதல் பிராமணர்க்குத் தகுதியன்று. அற்றேல், சிவ பிரான் றேவருட்பிராமணர் என்றற்குப்பிரமாண மென்னையெனின்;—சாமவேதத்திலுள்ள பிரபத மந்திரமே பிரமாணமென்க.

முனிவர் உயர்புடையதனையும் இழிபுடையாஉ தனையும் ஒப்பவிலக்குப: தீக்கிதவன்னத்தையும் பதிதவன்னத்தையும் விலக்கினமையானும், "சண்டாளன், சண்டிலன், மசான பாலகன்,ாஉ

---

வேளையோர் தம்முட், பிராமணன் யானே பிராமணன் றனக்குப் பிராமணன் கதியினை யிகழ்வோன், பிராமணனல் லன் றன்குல தெய்வம் விணடுபின்னென்றனைத் தொழுமப், பிராமணர்க்கிரண்டும் பயப்படா நிரயம் புகுவனென்றுயர் மறைபேசும்' என்றருளிச் செய்தனர். (காஞ்சிப்புராணம் காயாரோகணப்படலம். க.)

'பிராமணருச்சிட்ட மனைத்தையும் நிலத்திற் புதைக்க அல்லது சலத்திலெறிக' என்னும் கற்பசூத்திர விதியா வது :—'ப்ராஹ்மணஸ்வகீய முச்சிஷ்ட மப்ஸுவா நிக்ஷி பேத் பூமௌவா நிகநேத்' என்பது.

ாஉ௫ - ாஉஅ. முனிவர் என்றது ஹாரீதரை. அவர் பதித அன்னத்தை விலக்குதல் 'யதந்நம் ப்ரதிலோமஸ்ய' என்பனவாகக் கூறுதலானும் தீக்கிதஅன்னத்தை விலக்குதல்

கள்விற்போன், பசு, பிராமணன், அக்கினி, தீக்கையுடையான், பெண்களென்னு மிவரைப்
ஈஉஎபரிசிக்கற்க" என்றமையானும், அக்கினிபோலுந் தீக்கிதவன்னத்தை விலக்கியவர்தாமே, "இராசபரிக்கிக மென்னுங் கிரியை செய்த பின்னர் அதனைப் புசிக்க" என்றமையானும், "சங்கத்தின் அத்திபாவனம்" என்றும் "மநுட அத்தி அபாவனம்" என்றுங் கூறினமையானும், அதற்
ஈஉஅகுக் காரணங் கூறப்படாதென்க. சிவபிரானை யொழித்தொழிந்த தேவர்களுக்கு நிவேதிக்கப்படு மன்னம் அப்பிராமணருடைய பசிநிவிர்த்திப் பொருட்டுபயோகப்படுக.

வைசுவதேவமென்னுங் கிரியையில் அத்தேவர் சேடத்தால் அக்கினி முதலிய தேவர்க்குப்
ஈஉகூபலியிடலாகாது: அற்றேல், தேவர்களுக்கு நிவேதியாத அன்னத்தால் வைசுவதேவ பலியிட்டு, அவர்க்கு நிவேதித்த அன்னத்தைப் புசிக்கலாமெனக் கொள்ளாமோ வெனின்;—கொள்

---

வர்ஜ்யாந்நோதீக்ஷிதோ விப்ரைர் யாவத்ராஜ பரிக்ரியா' என்று கூறுதலானும் அறியப்படும்.

'இராஜ பரிக்கிரக மென்னுங்கிரியை செய்த பின்னர் அதனைப்புசிக்க' என்றமை 'க்ருதராஜபரிக்ரியோ போஜ்யாந்ந:' என்னுஞ் சுருதியானறிக.

'சங்கத்தின் அத்திபாவநம்' 'மநுட அத்தி அபாவநம்' என்பதனை 'நாரம் ஸ்ப்ருஷ்ட் வாஸ்திஸஹஸா ஸவாஸா ஜலமாவிசேத்' என்னும் மிருதி வசனத்தாலறிக.

ளாம். என்னை? "அசனத்துக்குரிய அன்னக் கூற்றினாற்றானே பலியிட்டுண்க" என விதிக்கப் பட்டமையின்.

முன்னொருகாலத்திற் "சிவபிரான் பிரமக்கொ௱௩௧ லைக்காகப் பலியேற்றனர்" என்பதை உணரப் புவார்க்கு, அது திருவிளையாடல் மாத்திரையே யென்பது இனிதுவிளங்கும். சிவபிரான் பிரமன் றலையைப் பறித்தமையானன்றே அவன் றீர்க்காயு ளுடையனாய்ச் சீவிக்கின்றானென்க. அது திரு௱௩௧ விளையாட்டன்று, பிராயச்சித்தமெனின்;—நாபி முதற் சாநு பரியந்தஞ் சாணவத்திரந் தரித்தல், கையிற்கபாலதுண்டந்தரித்தல், கொடி தண்டம் பிணத்தலை தரித்தல், ஏழுவீட்டிற் பலியேற்ற லென விதிக்கப்பட்ட பிராயச்சித்தாநுட்டானம் அவர்கட்காணப்படாமையான், அது பொருந்தா தெனமறுக்க. அல்லதூஉம், காலபைரவர்௱௩௨ செய்த பிரமகத்திக்குச் சிவபிரான்பிராயச்சித்தஞ் செய்துகோடல் செல்லாதென்க. செல்லுமேல், கற்பங்கடோறும் அவர்செய்யும் பிரமகத்தி

௱௩௧. மிருதியிற் கூறப்பட்ட பிராயச்சித்தவிதியாவது:— 'ப்ரஹ்மக்நோ வஸநம் சாணம் கபால சகலம்கரே | கேது யஷ்டௌ சவசிரோ பைக்ஷம் ஸாப்தே நிகேதநம்' என்பது.

௱௩௨. சிவபிரானது சங்காரத்தொழிற் சிறப்பு 'ஹரிம் ஹரந்த மநுயந்தி தேவா: விச்வஸ்யேசாநம் வ்ருஷபம் மதீநாம்' எனச் சுருதியிற் கூறப்பட்டது.

விண்டுகத்தி முதலியவற்றிற்குஞ் சிவபிரான் பிராயச்சித்தஞ் செய்து கோடல் வேண்டும்; அவ்வாறு செல்லாமையின், அது திருவிளையாடல் மாத்திரையே யென்பது.

௱௩௩ பரமேசுராகிய சிவபிரான் றேவர்கட் பசுபதித்துவம் பெற்றுக்கொண்டருளியதனையும், அவர் பயிக்கம் புகுந்தருளியதனையும், அறிந்துரைக்கப் பிருகஸ்பதியும் வல்லானென்க.

௱௩௪ இனிச் சிவபிரான் "பிரமன் விண்டுவாயினர்" என்றும் "பிறவெல்லாமாயினர்" என்றும், அறிவிலார் அபேதபாவனை பேணுதற்கேது, பிறிதோராற்றாற் பெறப்படாமையின். அத்தேவரடைந்த இழிவை மறைத்தலொன்றோ மோகம் அடைதலொன்றோ இரண்டனுளொன்று திட்பமுடைத்தாதல் வேண்டுமென்க.

௱௩௫ அற்றேலஃதாக; வேதத்தில் ஆண்டாண்டுப் பிரமப்பொருளாகிய சிவபிரானுக்கும் உயிர்களுக்கும் அத்துவிதங்கூறியதென்னை யெனின்;— கருடனு மாந்திரிகனும் தம்முள் வேறுதல்

௱௩௫. இந்தச் சுலோகத்தின் மூன்றும் பாதத்தில் 'அளீகம்' என வருதலைச் சிவஞான சுவாமிகள் தாம் அருளிச்செய்த சிவசமவாதவுரைமறுப்பில் 'ஒன்றெனு மதஞல்' என்னுஞ் சிவஞான சித்தித் திருவிருத்தத்திற்கு ஞானப்பிரகாசர் கூறியவுரை பொருந்தாதென நிரூபிக்கு

வெளிப்படையாயினும், கருடோகம் பாவனை விடத்தை நீக்கன்மாத்திரைக்கே வேண்டப் படும். அது போலச் சிவன் சீவன் என்னும் பதார்த்தங்க ளிரண்டும் தம்முள் வேற்றுமை யுடையன வென்பது தேற்ற மாயினும், உயிர் களுக்கு மலநீக்கத்தின் பொருட்டு வேதத்தி லத்துவித சிவோகம் பாவனை கூறப்பட்டது. இங்ஙனமாகலின், அதுகொண்டுதானே நிருப சரிதைக்கியங் கூறுதல் சாலாதென்க.

சிவபிரான் பிரமனுடைய ஐந்தாஞ் சிரசைக்௬௬ கிள்ளினரென்றும், பிரமனரியிருவரும் அவரு டைய திருமுடியினையுந் திருவடியினையுந் தேடி யுழன்றனரென்றும், யாம் முழங்குவேம். அது மூடபுத்தியுடையார் அழுக்கறுத்தற் கேது வாக.

சோமக் கொடிக்கு விண்டுவின்மாட்டு உற்௬௭ பத்தி கூறியது கௌணவிருத்திபற்றியாகலின், அது முக்கியவிருத்திபற்றிச் சிவபிரானையே

---

மிடத்து எடுத்தாண்டு ‘அதுகொண்டுதானே நிருபசரிதைக் கியங் கூறுதல் கூடாதென்பதாம்’ என்று அருளிச்செய் தனர்.

௬௭. சோமக்கொடிக்கு விண்டுவின்மாட்டு உற்பத்தி கூறிய சுருதியாவது:—‘ஸோம: பவதே ஜநிதாமதீநாம் ஜநிதா திவோ ஜநிதா ப்ருதிவ்யோ ஜநிதாக்நேர் ஜநிதா ஸூர் யஸ்ய ஜநிதேந்த்ரஸ்யஜநிதோத விஷ்ணோ:’ என்பது.

௱௩௮ அயனையும். சிவபிரானும் விண்டுவும் ஒருவருக்கொருவர் செனகராயின், வரம்பு கடந்து, நாமுஞ் சிவபிரானுருவம். சிவபிரானு நாமாவர். பொருள்களி னியல்பை மாற்றுதல் சிவபிரானு
௱௩௯ டைய ஆணைக்கும் இயலாதென்க. விண்டு முதலிய தேவர்போற் பிறக்கக் கருதுதல் சிவபிரானுக்குஞ் செயற்கரிய தொன்றாகும். அது அத்திரி பத்தினியால் வேண்டப்பட்டும் அவள் கருவிற் புக்கு உதிக்கமாட்டாமையான் இனிது
௱௪௰ விளங்கும். விண்டு கருவிற்புக்குதித்தது சுயேச்சை யெனின்;—கருப்பாசயத்திற் கட்டுண்டு நெடுங்காலங் கிடக்க எவனுமிச்சியா னாகலின், முற்பிறவியிலீட்டிய வினைக்கீடாகவே அவற்கு
௱௪௧ இச்சை நிகழ்ந்த தென்றொழிக. அற்றேல், பாரதமுதலியவற்றில் விண்டுவினுடைய அவதாரத்தைச் சுவேச்சையென்றதென்னை யெனின்; அது குணவாத மென்க.

௱௪௨ சிலர் பிரமனையும் சிலர் விண்டுவையும் சிலர் ஏனைத் தேவர்களையு முபாசிப்ப. அவ்வுபாசனைகள் உலகத்திற்பயன் பயப்பனவன்றி வீடுபேற்றினைப் பயக்காவாம். "ஒருவன் ஆகாயத்தை ஆடையாக்கிக் கொள்ளுமாயின், சிவ

---

௱௪௨. சுவேதாச்சுவதரசுருதியாவது:—'யதா சர்மவதாகாசம் வேஷ்டயிஷ்யந்திமாநவா: | ததாசிவ மவிஜ்ஞாய துக்கஸ்யாந்தோ பவிஷ்யதி||' என்பது. சிவபரத்துவத்திற்

பிரானை உபாசியாது, துக்கத்தினீங்கி, வீட்டினைத் தலைப்படும்.'' என்று சுவேதாச்சுவதரச் சுருதி கூறுதலின், வீடுபேற்றின் பொருட்டுச் சிவபிரானையே உபாசிக்க. உடைந்தமரக்கலம் ௱௪௪ பிறிதொருமரக்கலத்தைக் கரையடைவிக்கமாட்டாது; அதுபோலப் பிறந்திறந்துழலுந் தேவர் அவ்வாறுழலுமெம்மனோர்க்குச் சரணாகமாட்டார். முயலிற்கோடும், ஆகாயத்திற்பூவும், ௱௪௫ கானினனீரும், மலடிமாட்டு மகப்பேறு முளவாயின், ஏனைத் தேவரை யுபாசித்தலான் வீடுபேறுந் தலைப்படுமென்க.

தேவருடைய பலபிறப்புக்களை நோக்கும்வழி ௱௪௬ நமக்குக் கழிபேரச்ச நிகழாநின்றது. ஆகலின், சிவ பிரான் அப்பெற்றியவாம் பிறப்புக்களைத் திருவிளையாட்டுக்கேனும் மேற் கொள்ளா தொழிக. சிவபிரான்மாட்டு யாம் வேண்டிப் பெறும் பேறிதுவே. சிவபிரானை யொழித்து ௱௪௭ தொழிந்த தேவரைத் துதிக்கும் அறிவிலார் என்கடவர்.

---

பொறாமைகொண்டோர் சிலர் இம்மந்திரத்துவரும் '**சிவ**' என்னும் பதத்தைத் 'தேவ' என மாற்றியிருக்கின்றனர். அவர் இம் மந்திரத்திற்கு உபபிருங்கணம் 'ஸர்வோபநிஷத்தாமர்தச்சிவஏவ நசாபர: | ஏகமேவ ஹி தத்ஜ்ஞாநம் ததஜ்ஞாநஸ்ய நாசநம் ||' என **வாமநபுராணத்து** வருதலையறிந்திலர். அன்றியும் **கந்தபுராணத்துப்** 'பரசிவனுணர்ச்சியின்றிப் பல்லுயிர்த்தொகையுமீண்டே, விரவிய துயர்க்கீறெய்தி வீடு

௱௪௭ சிவனடியார் திருக்கூட்டத்தையே விரும்புவேம். பிள்ளைமைப்பருவத்துஞ் சிவனடியார் திருவடிப் பொடிகொண்டே மண்விளையாட்டுச்
௱௪௮ செய்யப்பெற்றேம். ஆண்டானாகிய சிவபிரானைத் துதிக்க அடியேமுக்கு வலியில்லையேனும், அவர் திருவருள்கொண்டே அவரைத்துதித்தேம். அங்ஙனம் துதித்தேமுக்கு, அடியார்க்கெளிவந்த கருணைவள்ளலாகிய சிவபிரான், உபவீதம்போற் றரித்தருளிய புனித ஆடையினையும், திரிபுண்டரத்தினையுமுடையராய் வெளி
௱௪௯ நின்றருளித் தம்முடைய அநுசரரைக்கொண்டு பாயசான்னத்தைக் கொடுப்பித்தருளினார். அதனைப்பெற்றுண்டு, சொப்பன சமாதியோ என்று கருதி யோகிகளைப்போலத் தெளிந்தேம்.

௱௫௰ இந்நூலைப் படித்து இதன்பொருளை உள்ளவாறுணரப்பெறுவார்க்குக் கொள்ளற்பாலது பிறிதொன்றில்லை; அறிதற்பாலதும் பிறிதொன்றில்லை; எல்லாப்பேறும் இதனானேயுண்டாம்.

---

பேறடைதுமென்கை, யுருவமில் விசும்பிற் றோலை யுரித்துடுப்பதற்கொப்பென்றே, பெருமறை பேசிற்றென்னிற் பின்னுமோர் சான்றுமுண்டோ' என வருதலையும், காஞ்சிப்புராணத்து 'மானுடன் விசும்பைத்தோல்போற் சுருட்டுதல் வல்லோனாயி, னீனமில் சிவனைக்காணா திடும்பைதீர் வீடுமெய்து, மானமார் சுருதி கூறும் வழக்கிவை யாதலாலே,

இந்நூல் சிவபிரானுக்கோ ராரமாக. மக்காருக ளுக்கு வேத சிவாகமப்பற்றைவிளக்க. பசுநூற் பற்றைக்கெடுக்க. சிவபிரான் றிருவடிப்பற்றை வளர்க்க.

சதுர்வேத தாற்பரிய சங்கிரகம்
முற்றிற்று

---

யானம ரிறையைக் காணு முபாயமே யறிதல் வேண்டும்' என வருதலையும் அவர் அறிந்தாராயின் 'சீவ' என்பதே மந்திரத்துள்ளதென உணர்வர்.

உ

திருச்சிற்றம்பலம்

---

# அருட்பொருள் விளக்கத்தில் எடுத்தாளப்பட்ட நூல்கள்

அதர்வசிகோபநிடதம்
அதர்வசிரோபநிடதம்
ஆதித்தியபுராணம்
ஆதித்தியோபநிடதம்
ஆபஸ்தம்ப சூத்திரம்
இருக்கு வேதம்
இலக்கணக்கொத்து
கடோபநிடதம்
கந்தபுராணம்
காஞ்சிப் புராணம்
கிருகிய சூத்திரம்
கைவல்லியோப நிடதம்
சாந்தோக்கியோப நிடதம்
சாம வேதம்
சாவித்திரியுபநிடதம்
சிவசமவாதவுரை மறுப்பு
சிவஞான பாடியம்
சிவதத்துவ விவேகம்
சிவதரும சூக்தம்
சுவேதாச்சுவதரோபநிடதம்
திருஞான சம்பந்தர் தேவாரம்
திருநாவுக் கரசர் தேவாரம்
திருவாசகம்
திருவாய்மொழி
திருவுருத்திரம்
தைத்திரீயப் பிராமணம்
தைத்திரீயோபநிடதம்
நாராயணோபநிடதம்
நீலகண்ட பாடியம்
பிரமதருக்கத்தவம்
போதாயன சூத்திரம்
மநுஸ் மிருதி
மூத்தொள்ளாயிரம்
மைத்திராயணோபநிடதம்
யசுர் வேதம்
வாமந புராணம்
வில்லிபுத்தூரார் பாரதம்

முதலியன.

---

கழக வெளியீடு - ௭௫

உ

திருச்சிற்றம்பலம்

---

சிதம்பரம்

குருநமச்சிவாயதேவர்

அருளிய

# நமச்சிவாயமாலை

இத்துடன்

நமச்சிவாயச்சிறப்புப்பாக்களும்

அடங்கியுள்ளன



அரும்பொருள்விளக்கத்துடன்



திருநெல்வேலி, தென்னிந்திய
சைவசித்தாந்த நூற்பதிப்புக் கழகம் லிமிடெட்
திருநெல்வேலி & சென்னை
அட்சய௵ ஆவணி௴

# முகவுரை

இந் நூலியற்றியவர் குகைநமச்சிவாயர் மாணவர் குரு நமச்சிவாயதேவர். இவர் திருவருட்பேற்றால் பல்வேறு அருஞ்செயல்களைப் புரிந்தனர் என்பது இவரது வரலாற்றான் உணரக்கிடக்கின்றது. இது,

> "பன்னீ ருயிருங் கசதந பமவய
> ஞஙவீ ரைந்துயிர் மெய்யு மொழிமுதல்"

என்னும் நன்னூற் சூத்திரத்திற் கூறியாங்குப் பெரும்பாலும் மொழிக்கு முதலில் வரும் உயிர், மெய் எழுத்துக்களை முறையே ஒவ்வொரு கண்ணிகளின் முதலில் தொடங்கிச் செய்யப்பட்டது. ஆயின் அவ் வெழுத்துக்களிற் சில எழுத்துக்களுக்குக் கண்ணிகள் செய்யப் படவில்லை.

இது பஞ்சாக்கர வகைகளாகிய தூல பஞ்சாக்கரம், சூக்கும பஞ்சாக்கரம், அதிசூக்கும பஞ்சாக்கரம் அல்லது காரண பஞ்சாக்கரம் என்பவற்றில் தூல பஞ்சாக்கரமாகிய

"நமச்சிவாய"

என்பதைச் சிறப்பாகக் கடையில் வைத்து அதை அம்மந் திரத்துக் குரியவனான சிவபெருமானுக்குப் போக்கி விளித் துரை வணக்க முறையாகப் பாடப்பட்டது.

ஆத்திசூடி, கொன்றைவேந்தன் முதலியன முதற்குறிப் பாற் பெயர் பெற்றனபோல, இது 'நமச்சிவாய' என்னும்

கடைக் குறிப்பாற் பெயர்பெற்ற தென்க. "எந்நாளோ" எனவும், "பராபரமே" எனவும், "அச்சோவே" எனவும் வருங் கடைக் குறிப்பான் முறையே "எந்நாட்கண்ணி" எனவும், "பராபரக்கண்ணி" எனவும், "அச்சோப்பத்து" என்வும் பெயர் பெற்றமையே இதற்குச் சான்றாம்.

அன்றிச் "சோணசைலனே கைலை நாயகனே" என்னும் மகுடத்தால் "சோணசைலமாலை" எனப்பேர் வந்தமையும் நோக்கற் பாலதே. இது கலைஞான மாகவின் நூல பஞ்சாக்கரத்தாற் கூறினர். மணிவாசகப் பெருமானார் அருளியது மஃதே.

இந்நூல் செந்தமிழ் மொழிகளால் கற்றார்க்கும் மற்றார்க்கும், பிள்ளைகளுக்கும், பெண்களுக்கும் நன்கு விளங்குமாறு எளிய நடையில் இன்ப நயமுள்ளதாகச் செய்யப் பட்டிருக்கின்றது.

இது பஞ்சாக்கரம் உன்னல் செய்வோர் பாடமாக்கி ஓதின் அன்னார் கருதும் பொருள்களை எளிதி லளிக்கவல்லது.

சைவ சமயிகளுக்கு அணிகளாவன திருநீறு, கண்டிகை. பஞ்சாக்கர மாகவின் இஃது அவர்கள் அணியும் முன்னிரண்டோடு பஞ்சாக்கர நினைப்பிற் கின்றியமையாதது.

இது சிந்தித்தற்கு ஏற்றவாறு நூறு கண்ணிகளாகச் செய்யப்பட்டது.

உ

திருச்சிற்றம்பலம்

# நமச்சிவாயமாலை

## காப்பு

மந்திர நமச்சி வாய மாலைநான் செப்பு தற்குக்
கந்தவே டனக்கு மூத்த கணபதி காப்புத் தானே.

அறைமறை யயனு மாலு மமரரு முனிவர் தாமும்
முறைமுறை வணங்கி யேத்து முதல்வனே நமச்சி வாய. க

ஆதியாய் வேத நான்கா யடிமுடி தெரியா வண்ணஞ்
சோதியாய் நிறைவாய் நின்ற துணைவனே நமச்சி வாய. உ

இணையடி தேடிக் காணா வேழுல களந்த மாயன்
கணையதா வெயின்மூன் றெய்த கடவுளே நமச்சி வாய. ங

ஈட்டிய பொருள்போ லுன்ற னிணையடி பணிவார் துன்பம்
வாட்டிய செம்பொன் மேனி வள்ளலே நமச்சி வாய. ச

உமையொரு பாகம் வைத்த வும்பர்க டம்பி ரானே
அமைதரு மணியே முத்தே யண்ணலே நமச்சி வாய. ரு

ஊனுமா யுயிரு மாகி யுள்ளுமாய்ப் புறம்பு மாகித்
தாணுவாய்ச் சகத்துக் கெல்லாந் தந்தையா நமச்சி வாய. சு

எழுபிறப் பதனுன் மாழ்கு மென்னுயிர்க் கிரங்கி வந்து
பழுதற வாண்டு கொள்ளும் பரமனே நமச்சி வாய. எ

ஏடவிழ் கோதை மாத ரிளமுலை மயக்கப் பட்டு
கீடுத லொழிக்க வல்ல நிமலனே நமச்சி வாய. அ

ஐயமேற் றுண்டாய் பாத மன்பிலேன் றலைமேல் வைத்த
செய்யனே வானோர் போற்றுந் தேவனே நமச்சி வாய. கூ

ஒன்பது வாயிற் கூட்டி லொடுங்குயி ருய்யும் வண்ணம்
பொன்பொதி மலர்த்தாள் காட்டும் புனிதனே நமச்சி வாய. ய

ஓமெனு மெழுத்தி னுள்ளே யொளியதாய் விளங்கு கின்ற
வாமனே கருணை நல்கும் வள்ளலே நமச்சி வாய. கக

ஔவியம் பேசா வண்ண மடிமையைத் தடுத்தாட் கொள்ளுந்
திவ்விய மணியே முத்தே தேவனே நமச்சி வாய. கஉ

அக்கினைப் பூண்டு கொண்டே யரியவெண் ணீறு பூசுஞ்
சொக்கனே செக்கர் மேனித் தூயனே நமச்சி வாய. கந

கம்பமார் களிறு ரித்த கச்சியே கம்பா செம்பொன்
அம்பலத் தாடு கின்ற வண்ணலே நமச்சி வாய. கச

ஙகரம்போல் வளைந்து மூன்று நாயினே னுணவு தேடும்
பகரொணு வின்ன றீர்க்கும் பரமனே நமச்சி வாய. கரு

சத்தியுஞ் சிவமு மாகித் தாணுவாய்ச் சகத்துக் கெல்லாம்
முத்தியே யளிப்பா யாதி முதல்வனே நமச்சி வாய. கசு

ஞமனுட னிந்தி ரற்கு நாரணற் கார ணற்குஞ்
சமனுற முதலாய் நின்ற தாணுவே நமச்சி வாய. கஎ

இடவிய கபால மேந்தி யேழிரண் டுலக மெல்லாந்
தடவியுங் காண வொண்ணாச் சங்கரா நமச்சி வாய. க௮

இணங்கிய கமலப் பொற்றா ளிருவரு மேத்தி நின்று
வணங்கவம் பலத்து ளாடும் வானவா நமச்சி வாய. க௯

தண்டமிழ் முனிவன் றன்னைச் சமமுறத் தென்பா லேவும்
அண்டரோ டயன்மால் காணு வாதியே நமச்சி வாய. உ௰

நஞ்சணி கண்டத் தானே நதிமதிச் சடையி னானே
கொஞ்சுபச் சிளம்பெண் பாகங் கொண்டவா நமச்சி வாய. உக

பண்டுல களந்த மாலும் பங்கயத் தயனுந் தேடிக்
கொண்டுசென் றறியவொண்ணாக் குரவனே நமச்சி வாய. உஉ

மங்கையோர் பாகம் வைத்து வளர்பிறை முடிமேல் வைத்துச்
செங்கையின் மழுமான் வைத்த தேவனே நமச்சி வாய. உ௩

இயக்கரு முனிவர் தாமு மிருகரங் குவித்து நின்று
வியக்கவம் பலத்தி லாடும் விமலனே நமச்சி வாய. உ௪

அரகர சிவனே யென்று மம்பலத் தாடி யென்றும்
பரவுவார் துயரந் தீர்க்கும் பரமனே நமச்சி வாய. உ௫

இலவிதழ் மடவார் தங்க ளேவலுக் குரிய னாகி
அலமரு மென்னை யாண்ட வமலனே நமச்சி வாய. உ௬

வளமுறு மங்கை தன்னை மற்றிடப் பாகம் வைத்தே
ஒளிமதிக் கீற்றைச் சூடு மொருவனே நமச்சி வாய. உ௭

அழகிய முருக னுக்கோ ராறுமா முகமுங் கூர்மை
பழகிய வேலு மீந்த பரமனே நமச்சி வாய. உ௮

இளமையு மூப்பு மில்லா விறைவனே யெப்பிரானே
வளமையாங் கருணை மோன வள்ளலே நமச்சி வாய. ௨௯

அறவனே பாதந் தேடி யன்றிரு வோருங் காணா
இறைவனே யென்னைக் காக்கு மீசனே நமச்சி வாய. ௩௰

அனந்தலி னின்ருள் போற்றி யருச்சிக்கு மடியார் தங்கள்
இணைந்தனி லென்னை வைப்பா யீசனே நமச்சி வாய. ௩௧

கரியுரி யதனைப் போர்த்துக் கபாலமுங் கையி லேந்தித்
திரிபுர தகனஞ் செய்த தேவனே நமச்சி வாய. ௩௨

காலனை யுதைத்த காலா காமனை யெரித்த கண்ணா
பாலனைக் கறிய தாக்கும் பரமனே நமச்சி வாய. ௩௩

கிளிமொழி யமுதச் செவ்வாய்க் கெவுரியைப் பாகம் வைத்த
ஒளிமதிச் சடையி னானே யொருவனே நமச்சி வாய. ௩௪

கீண்டுவெற் பெடுத்த வீரக் கேடிலா வரக்கன் றன்னை
மாண்டுக விரலா லூன்றும் வள்ளலே நமச்சி வாய. ௩௫

குழைகுமி ழடருங் கண்ணாட் கோதையைப் பிரிந்த போது
பிழைசெயு மதனைக் காய்ந்த பிஞ்ஞகா நமச்சி வாய. ௩௬

கூவிள மறுகு தும்பை கொன்றைவெள் ளெருக்கூ மத்தை,
மேவிய சடையி னானே வித்தகா நமச்சி வாய. ௩௭

கெங்கையைச் சடைமேல் வைத்துக் கெவுரியைப் பாகம் வைத்தல்
அங்கணா நீதியோசொ லையனே நமச்சி வாய. ௩௮

கேசவன் வணங்கிக் கண்ணாங் கேழ்கிளர் கஞ்சஞ் சூட்ட
ஆசியோ டாழி யீந்த வமலனே நமச்சி வாய. ௩௯

கைச்சிலை மேரு வாகக் கரியமால் பகழி யாக
உச்சிதப் புவித்தே ரேறு மொருவனே நமச்சி வாய. ச0

கொற்றவன் றனக்கு முன்னே குதிரையி லேறிக் காட்டிப்
பொற்றுகிற் கோலாற் கொள்ளும் பூரணா நமச்சி வாய. சக

கோணமா மலையில் வாழுங் கோதிலா வாதி யேநீ
ஆணல்லை பெண்ணு மல்லை யத்தனே நமச்சி வாய. சஉ

சந்திரன் விளங்குஞ் சென்னித் தலைவனே தம்பி ரானே
இந்திர னிமையோர் போற்று மிறைவனே நமச்சி வாய. சங

சாந்தணி முலையா டன்னைத் தண்புன லெனப்பேர் மாற்றி
ஏந்துசெஞ் சடையெம் மானே யிறைவனே நமச்சி வாய. சச

சிரமது கையி லேந்திச் சீரிய முனிவர் தங்கள்
விரகினை யழித்த மேரு வில்லியே நமச்சி வாய. சரு

சீதள கமல வாவித் திருநாவ லூரான் றன்னைச்
சாதனங் காட்டி யாண்ட தாணுவே நமச்சி வாய. சசா

சுத்தவெண் ணீறு பூசிச் சுடலையி னடன மாடும்
அத்தனே யாரூர் வாழு மண்ணலே நமச்சி வாய. சஎ

சூரியன் றயரந் தீர்த்தாய் தோன்றிமுப் புரத்தைச் சுட்டாய்
ஆரிய வெள்ளி வெற்பி னத்தனே நமச்சி வாய. சஅ

செஞ்சிலை கையி லேந்திச் சிரித்துமுப் புரமெ ரித்தாய்
தஞ்சமென் றனைய டைந்தேன் றாணுவே நமச்சி வாய. சகூ

சேதன வடியா ரோடு திருப்பெருந் துறையில் வந்து
வாதவூ ரரசை யாண்ட வாதனே நமச்சி வாய. ரு0

சைவனே யைம்பு லங்க டமைமனஞ் சாரா வண்ணங்
கைவர மருள வேண்டுங் கடவுளே நமச்சி வாய. ருக

சொரிமலர்க் கொன்றை தும்பை சொல்லிய வறுகு தாளி
விரிமலர்ச் சடையாய் வெள்ளி வெற்பனே நமச்சி வாய. ருஉ

சோலைசூ மூால வாயிற் சோதியே சமணை மாய்க்கப்
பாலரு வாயி ஞர்க்காப் பரிந்தரு ணமச்சி வாய. ருங

தந்தையுந் தாயு மில்லாத் தாணுவே யாண்பெண் ணலலாய்
இந்திர னயன்மால் போற்று மிறைவனே நமச்சி வாய. ருச

தாதவிழ் கொன்றை தும்பை சங்கொடு தலையுங் கொண்ட
நாதனே வேத மோது நம்பனே நமச்சி வாய. ருரு

திரிபுர மெரித்த மூர்த்தி தென்னவன் முன்னே முன்னாள்
நரிதனைப் பரிய தாக்கு நம்பனே நமச்சி வாய. ருசா

தீதிலா வாத வூரர் செய்கைகண் டுளம கிழ்ந்த
நாதனே பரனே வானோர் நண்பனே நமச்சி வாய. ருஎ

துணைவனே யன்பர் தங்க டுன்பறுத் தருளு மூர்த்தி
பணைமுலை யுமையாள் பங்கா பரமனே நமச்சி வாய. ருஅ

தூதுசுந் தரற்காச் சென்ற சோலைசூ மூாரு ரையா
ஆதியே யரனே வெள்ளி யசலனே நமச்சி வாய. ருகூ

தென்னவ னுகக் கூடற் சேர்ந்துசெங் கோல்செ லுத்தி
அந்தகர் தன்னை யாண்ட வமலனே நமச்சி வாய. சா0

தேடியே யிருவர் காணுத் திருவடி மனத்துள் யாரும்
நாடியே வணங்க நின்ற நம்பனே நமச்சி வாய. சாக

தையலோர் பாகம் வைத்துச் சடையிலே கங்கை வைத்த
ஐயனே யாரூர் வாழு மண்ணலே நமச்சி வாய. ௬௨

தொல்லுல கெல்லாம் போற்றுஞ் சோதியே சூல பாணி
வில்லென மேரு வாங்கும் வித்தகா நமச்சி வாய. ௬௩

தோத்திரஞ் செய்மா யற்குச் சுடரொளி யாழி யீந்த
ஆத்தனே யடிய ரன்பிற் களியனே நமச்சி வாய. ௬௪

நஞ்சினை யருந்தி மாய னான்முகன் முதலோர் நாண
அஞ்செழுத் துருவ மான வத்தனே நமச்சி வாய. ௬௫

நாரண னலரோ னிந்த்ர னடிமுன் வணங்கி நின்றே
ஆரண மோது கின்ற வாதியே நமச்சி வாய. ௬௬

நிற்பவர் நெறியை நோக்கி நெஞ்சைவிட் டகலா தானே
கற்பனை கடந்த சோதிக் கடவுளே நமச்சி வாய. ௬௭

நீறணி மேனி யானே நிமலனே யமரர் கோவே
ஆறணி சடையி னானே யண்ணலே நமச்சி வாய. ௬௮

நுண்ணிடை மாது பாகா நோக்குவார் தம்மை நோக்கும்
கண்ணுதற் பரனே தேவா கடவுளே நமச்சி வாய. ௬௯

நூபுர பதமா தோடு நுவலருஞ் சபையி லாடும்
மாபுரத் தவர்கள் காலா வானவா நமச்சி வாய. ௭௰

நெஞ்சக மலரி லுன்னை நினைவுற நினைந்த பேருக்
கஞ்சலென் றருளிச் செய்யு மண்ணலே நமச்சி வாய. ௭௧

நேத்திரந் தன்னால் வேளை நெருப்பெழச் சுட்டு விட்டாய்
சாத்திர முனிவோர் போற்றுந் தாணுவே நமச்சி வாய. ௭௨

நைந்துனை நினைப்பார் பாவ நாசம தாக்கி நிற்பாய்
பைந்தொடி பாகங் கொண்ட பரமனே நமச்சிவாய. ௭௩

நொந்தவ ரிளைத்தோர் தம்மை நொடியள வினில்வாழ் விக்குங்
கந்தாங் கறுத்த மூர்த்தி கடவுளே நமச்சி வாய. ௭௪

நோக்கமுன் றுடையா யென்னை நோக்கியே துரியா தீதத்
தூக்கத்தில் வைப்ப தென்றோ சொல்லுவை நமச்சி வாய. ௭௫

நௌவியை யேந்துங் கையாய் நயமுட னடியார் தங்கள்
வெவ்வினை யெல்லாந் தீர்க்கும் விமலனே நமச்சி வாய. ௭௬

பத்தாய்ப் பணிவார் தம்மைப் பதங்கொடுத் தாளு மையா
சுத்தனே வேதஞ் சொன்ன துணைவனே நமச்சி வாய. ௭௭

பாடுவார் மூவர் தம்மைப் பதங்கொடுத் தாண்ட மூர்த்தி
தேடுவார் தேடு கின்ற செம்பொனே நமச்சி வாய. ௭௮

பிறையணி சடையி னானே பிஞ்ஞகா வடியார்க் கெல்லாங்
குறைவற வாழ்வ ளிக்குங் கொற்றவா நமச்சி வாய. ௭௯

பீடுறப் பூசிப் பார்தம் பெருவினை யறுக்கு மூர்த்தி
ஆடல்சே ரெருதி லேறு மண்ணலே நமச்சி வாய. ௮௰

புகலுறுங் கல்லா லன்பு பூண்டெறி சாக்கி யர்க்குத்
தகவுற முத்தி நல்குந் தாணுவே நமச்சி வாய. ௮௧

பூசுவெண் ணீறு பொங்கப் பொருவிலா வம்மை காண
நேசமோ டாலங் காட்டி னிருத்தஞ்செய் நமச்சி வாய. ௮௨

பெண்ணமு தனையார் நாணும் பெட்புறு வளையுந் தூசும்
எண்ணுறு பலியாக் கொண்ட விறைவனே நமச்சி வாய. ௮௩

பேயுடன் காட்டி லாடும் பிஞ்ஞகா பெரியோர் தங்கள்
தூயநன் மனத்து ளானே சுத்தனே நமச்சி வாய. ௮௪

பையர வணையிற் றங்கும் பாரளந் தோற்குப் பாதி
மெய்யளித் தருள்கூர்ந் திட்ட விண்ணவா நமச்சி வாய. ௮௫

பொசியுறு தேம்பூஞ் சோலைப் புகலியிற் பிள்ளை யார்க்குச்
சசியொளி முத்தின் பந்தர் தந்தவா நமச்சி வாய. ௮௬

போதக மாகி வந்த புன்மைசே ரசுரன் றன்னை
நோதக வுரித்துப் போர்த்த நுண்ணியா நமச்சி வாய. ௮௭

பௌவத்திற் சிலையோ டாழும் படியமண் செய்ய வப்பர்க்
கெவ்வம தகற்றிப் பேற தீந்தவா நமச்சி வாய. ௮௮

மறுவறு மாதி சைவ மரபிற்சுந் தரர்க்குத் தூதாய்ச்
செறிநிசி பாவை வாயிற் சென்றவா நமச்சி வாய. ௮௯

மான்மழுக் கையி லேந்தி வன்னியோர் பாகம் வைத்தே
ஆன்முது கேறுஞ் சோதி யையனே நமச்சி வாய. ௯௰

மிடற்றினிற் காள கூட விடத்தினைக் கறுக்க வைத்தாய்
நடத்தினில் விருப்பம் வைத்தாய் நம்பனே நமச்சி வாய. ௯௧

மீனென வந்த மாயன் விழியினை யிடந்து சாத்த
ஆனதோர் மேனி நல்கு மண்ணலே நமச்சி வாய. ௯௨

முன்னமே பிரமன் றன்னை முனிந்ததோர் தலைய றுத்தாய்
என்னைவந் தாண்டு கொள்வா யீசனே நமச்சி வாய. ௯௩

மூர்க்கனாந் தக்கன் வேள்வி முன்புசென் றழித்து வெற்றி
மார்க்கங்கண் டிட்ட சோதி வானவா நமச்சி வாய. ௯௪

மெலிவிலாத் தவத்தோர் கோப மேலுற முன்னாள் விட்ட
புலிதனை யுரித்துச் சாத்தும் புண்ணியா நமச்சி வாய. ௬௫

மேயபே ருணர்விற் கெட்டா வெளியதா யணுவு மாகி
ஆயசிற் சொரூப மான வண்ணலே நமச்சி வாய. ௬௬

மையுறு குழலாள் கூடன் மங்கையர்க் கரசி யார்முன்
செய்குறு பணிக்கு வந்த தேவனே நமச்சி வாய. ௬௭

மொழிதரு நால்வர் தங்கள் முதுமறைத் தமிழ்ப்பா மாலை
ஒழிவின்றிச் சூடிக் கொள்ளு மொருவனே நமச்சி வாய. ௬அ

மோகினி வடிவங் கொண்ட முகில்வண்ணன் றன்னைச் சேர்ந்து
சோகமி லைய னுரைத் தோற்றியோய் நமச்சி வாய. ௬௯

மௌவலங் குழலார் மோக வலையறுத் துயர்சித் தாந்தச்
செவ்வையா முத்தி யென்று சித்திக்கு நமச்சி வாய. ௱

நமச்சிவாயமாலை

முற்றும்.



உ
திருச்சிற்றம்பலம்

# நமச்சிவாயச் சிறப்புப்பாக்கள்

## திருவைந்தெழுத்து

### தேவாரம்

வைத்த பொருணமக் காமென்று சொல்லி மனத்தடைத்துச்
சித்த மொருக்கிச் சிவாய நமவென் றிருக்கினல்லான்
மொய்த்த கதிர்மதி போல்வா ரவர்பா திரிப்புலியூர்
அத்த னருள்பெற லாமோ வறிவிலாப் பேதைநெஞ்சே. க

ஏது மொன்று மறிவில ராயினும்
ஓதி யஞ்செழுத் தும்முணர் வார்கட்குப்
பேத மின்றி யவரவ ருள்ளத்தே
மாதுந் தாமு மகிழ்வர்மாற் பேறரே. உ

இருந்து சொல்லுவன் கேண்மின்க ளேழைகாள்
அருந்த வந்தரு மஞ்செழுத் தோதினுற்
பொருந்து நோய்பிணி போகத்து ரப்பதோர்
மருந்து மாகுவர் மன்னுமாற் பேறரே. ங

துஞ்சலுந் துஞ்சலி லாத போழ்தினும்
நெஞ்சக நைந்து நினைமி னுநாடொறும்
வஞ்சக மற்றடி வாழ்த்த வந்தகூற்
றஞ்ச வுதைத்தன வஞ்செ ழுத்துமே.

ஊனி லுயிர்ப்பை யொடுக்கி யொண்சுடர்
ஞான விளக்கினை யேற்றி நன்புலத்
தேனை வழிதிறந் தேத்து வார்க்கிட
ரான கெடுப்பன வஞ்செ ழுத்துமே. ௫

தும்ம லிரும றொடர்ந்த போழ்தினும்
வெம்மை நரகம் விளைந்த போழ்தினும்
இம்மை வினையடர்த் தெய்தும் போழ்தினும்
அம்மையி னுந்துணை யஞ்செ ழுத்துமே. ௬

காத லாகிக் கசிந்துகண் ணீர்மல்கி
ஓது வார்தமை நன்னெறிக் குய்ப்பது
வேத நான்கினு மெய்ப்பொரு ளாவது
நாத நாம நமச்சி வாயவே. ௭

கொல்வா ரேனுங் குணம்பல நன்மைகள்
இல்லா ரேனு மியம்புவ ராயிடின்
எல்லாத் தீங்கையு நீங்குவ ரென்பரால்
நல்லார் நாம நமச்சி வாயவே. ௮

சொற்றுணை வேதியன் சோதி வானவன்
பொற்றுணைத் திருந்தடி பொருந்தக் கைதொழக்
கற்றுணைப் பூட்டியோர் கடலிற் பாய்ச்சினும்
நற்றுணை யாவது நமச்சி வாயவே. ௯

பூவினுக் கருங்கலம் பொங்கு தாமரை
ஆவினுக் கருங்கல மரனஞ் சாடுதல்
கோவினுக் கருங்கலங் கோட்ட மில்லது
நாவினுக் கருங்கல நமச்சி வாயவே. ௰

நமச்சி வாயவே ஞானமுங் கல்வியும்
நமச்சி வாயவே நானறி விச்சையும்
நமச்சி வாயவே நாநவின் றேத்துமே
நமச்சி வாயவே நன்னெறி காட்டுமே. கக

## திருவாசகம்

போற்றியோ நமச்சி வாய புயங்கனே மயங்கு கின்றேன்
போற்றியோ நமச்சி வாய புகலிடம் பிறிதொன் றில்லை
போற்றியோ நமச்சி வாய புறமெனைப் போக்கல் கண்டாய்
போற்றியோ நமச்சி வாய செயசெய போற்றி போற்றி. கஉ

நானேயோ தவஞ்செய்தேன் சிவாயநம வெனப்பெற்றேன்
தேனாயின் னமுதமுமாய்த் தித்திக்குஞ் சிவபெருமான்
தானேவந் தெனதுள்ளம் புகுந்தடியேற் கருள்செய்தான்
ஊனாரு முயிர்வாழ்க்கை யொறுத்தன்றே வெறுத்திடவே. கங

## திருமந்திரம்

தெள்ளமு தூறச் சிவாய நமவென்று
உள்ளமு தூற வொருக்கா லுரைத்திடும்
வெள்ளமு தூறல் விரும்பியுண் ணாதவர்
துள்ளிய நீர்போற் சுழல்கின்ற வாறே. கச

குருவழி யாய குணங்களி னின்று
கருவழி யாய கணக்கை யறுக்க
வருவழி மான மறுக்கவல் லார்கட்
கருள்வழி காட்டுவ தஞ்செழுத் தாமே. கரு

## பெரியபுராணம்

இருவினைப் பாசமு மலக்க லார்த்தலின்
வருபவக் கடலில்வீழ் மாக்க ளேறிட
அருளுமெய் யஞ்செழுத் தாசை யிக்கடல்
ஒருகன்மே லேற்றிட லுரைக்க வேண்டுமோ. கசு

## உபதேசகாண்டம்

அஞ்செ ழுத்தெனு மருமறை மந்திர மதனை
நெஞ்ச ழுத்துவர் முழுமுதற் றேவனை நிகர்ப்பார்
பஞ்ச பாதகர் மீதுமற் றவர்நிழற் படினுஞ்
செஞ்செ வேயவர்க் காண்கினும் பவந்தொலை செல்லும். கஎ

ஆதி யருளுருவம் பெற்றெடுத்த வஞ்செழுத்தை
ஓதி யுணர்ந்தாரை யுள்ளத் துணர்ந்தாலும்
தீது பிறப்பறுப்பா ரன்னவர்க்குத் தீங்கிழைப்பார்
போது நரகினுக்கு மண்ணுறுத்தல் போகாதே. கஅ

## திருவிளையாடற்புராணம்

குடைந்துதீர்ப் பணமுஞ் செய்து தானமுங்
கொடுத்தும் மாடே
அடைந் தெழுத்தைந்து மெண்ணி யுச்சரித்
தன்பா லெம்மைத்
தொடர்ந்துவந் திறைஞ்சிச் சூழ்ந்து துதித்தெமை
யுவப்பச் செய்தோர்
உடம்பெடுத் ததனு லெய்த வுறுதியுண்
டதனைச் சேர்வார். ககூ

## வாயுசங்கிதை

பண்ணவ னுருவாம் பஞ்சப் பிரமங்கள் பழுதொன் றில்லா
அண்ணலஞ் செழுத்தின் மன்னி யடைவினி லமரு மந்த
நண்ணுமஞ் செழுத்துக் கூறு நம்பனே வினைக ளெல்லாங்
கண்ணறக் களைந்து மாற்றிக் கனிந்தருள் புரிவ னன்றே. உ௰

மறையொரு நான்கும் வல்லோர் மாசிலஞ் செழுத்தை வல்லோர்
நெறியிலாப் பதித ரேனு நிகழ்த்துமஞ் செழுத்தை யோதில்
உறைதரு பாவ நீங்க வுயர்கதி சேர்வ ரென்னாக்
கறைமிடற் றிறைவன் றேவி தன்னொடுங் கழறி னானே. உக

## பிரமோத்தரகாண்டம்

முக்க ணாயக னமருண் முதல்வனு மதுபோல்
தக்க மந்திர மெவற்றினுந் தலைமையைந் தெழுத்தே
தொக்க நான்மறைப் பிரணவ மாதியாத் தொடங்கி
ஒக்க வோதியே பரகதி யளப்பில ருற்றார். உஉ

## சிவதருமோத்தரம்

அந்தரத் தியங்க வல்ல வசுரரு மணுக மாட்டார்
சிந்திய சித்தக் கொத்தைப் பேய்களுந் தீண்ட மாட்டா
செந்தழ லென்ன வஞ்சித் தீயவா யரவுந் தீண்டா
மந்திர நவிற்று வாரை மறலியு மஞ்சு மன்றே. உ௩

வினைகளு மஞ்சும் வெய்ய வினைஞரு மஞ்சு வார்கள்
நினைவினி விட்ட மெல்லா மவர்க்கொரு கணத்தி னேரும்
துணையவே சுழன்று போகுந் துட்டசார்த் தூல மற்று
மனிதரு ணல்லா ரேயோ வமரரும் வாஞ்சிப் பாரே. உ௪

## கடம்பவனபுராணம்

அஞ்செ ழுத்தினு ளோரெழுத் தின்பய னளவைக்
கஞ்ச நாண்மலர்க் கண்ணனுங் கண்ணனுங் காணார்
செஞ்ச வேபிர ணவத்தொடுஞ் சேர்த்தியுச் சரிக்கிற்
பஞ்ச பாதக ராயினும் பரனெனப் படுவார். உரு

## பட்டினத்தார்பாடல்

அஞ்சக் கரமெனுங் கோடாலி கொண்டிந்த வைம்புலனும்
வஞ்சப் புலக்கட்டை வேரற வெட்டி வளங்கள்செய்து
விஞ்சத் திருத்திச் சதாசிவ மென்கின்ற வித்தையிட்டுப்
புஞ்சக் களைபறித் தேன்வளர்த் தேன்சிவ போகத்தையே. உசு

## தாயுமானவர்பாடல்

அஞ்செழுத்தி னுண்மை யதுவான வப்பொருளை
நெஞ்செழுத்தி யொன்றாகி நிற்குநா ளெந்நாளோ. உ௭

## அருணகிரியந்தாதி

இருந்துநினைப் பார்த மிருவினையை நீக்கும்
பொருந்துமிடி யிம்மையிலே போக்கு—மருந்தன்றோ
தம்பிரா னெவ்வுயிர்க்குந் தானு வருணகிரி
எம்பிரா னோரஞ் செழுத்து. உஅ

## திருக்கருவைக்கலித்துறையந்தாதி

கருத்தூறு மாயை யிருளுக்குத் தீபங் கழிபிறவிப்
பெருத்தெழு நோவுக் கமிர்தசஞ் சீவினி பேதித்துள்ளம்
வருத்திடு துன்பத் திரைவாரி திக்கு வடவைமன்றத்
தருத்தியி னுடுங் கருவைப் பிரான்றிரு வஞ்செழுத்தே. உகூ

---

# அரும்பொருள்விளக்கம்

காப்பு. மந்திரம் - மந் - அந்தப் பொருளை நினைக்கிறவனை, த்ரம் - காக்கின்றது.

க. மால் - விண்டு, அமரர் - நீடித்த ஆயுளுள்ளவர், முறை முறை - பலதடவை.

உ. வேத நான்கு - இருக்கு, யசுர், சாமம், அதர்வணம்.

ந. இணை - இரண்டு, எழுலகு - பூலோகம், புவர்லோகம், சுவர் லோகம், சனலோகம், தபோலோகம், மகாலோகம், சத்தியலோகம். மாயன் - விண்டு, கணை - அம்பு, எயில் - மதில், எய்த - செலுத்தின (விட்ட),

ச. ஈட்டிய - சேர்த்த, வாட்டிய - போக்கின.

ரு. உம்பர்கள் - மேலுலகர் (தேவர்), அண்ணல் - ஆடவரிற் சிறந்தவன்.

சு. தாணு - சிவன்.

எ. எழுபிறப்பு - தேவர், மனிதர், விலங்கு, புள், ஊர்வன, நீர் வாழ்வன, தாவரம்; மாழ்கும் - மயங்கும்.

அ. ஏடு - இதழ் (மலர்), நீடுதல் - நாள் மிகல், நிமலன் - மலமில்லாதவன்.

கூ. ஐயம் - பிச்சை. பாதம் - திருவடி.

ய. ஒன்பது வாயில் - ஒன்பது வழிகள், (காது உ. மூக்குத் தொளை உ. கண் குழி உ. வாய் க. மலவழி க. நீர்வழி க). கூடு - உடம்பு, உய்யும் வண்ணம் - பிழைக்கும் விதம், பொதி - நிறைதல், தாள் - கால், புனிதன் - தூயன்.

யக. வாமன் - அழகன், நல்கும் - கொடுக்கின்ற, வள்ளல் - வரையாது கொடுப்போன்.

௰௨. ஔவியம் - பொறாமை, திவ்வியம் - திப்பியம், (உயர்வு)

௰௩. அக்கு - உருத்திராக்கம், பூண்டு கொண்டு - அணிந்து கொண்டு.

௰௪. கம்பம் - கட்டுத்தறி, களிறு - யானை.

௰௫. உழன்று - வருந்தி, உணவு - உண்டி, பகரொணு - (பகர ஒணு) சொல்ல முடியாத, இன்னல் - துன்பம்.

௰௬. சகம் - உலகம், முத்தி - வீடு, அளிப்பாய் - கொடுப்பாய்.

௰௭. ஞமன் - இயமன், ஆரணன் - பிரமன், சமன் - ஒப்பு.

௰௮. இடவிய - அகன்ற (மிக்க இடமுள்ள), ஏந்தி - தாங்கி.

௰௯. இருவர் - பிரமன், விண்டு; வானவா - உயர்ந்தவனே.

௨௰. தண் - குளிர்ந்த, தமிழ் முனிவன் - அகத்தியன், ஏவும் - செலுத்தும், அண்டர் - தேவர்கள், அயன் - பிரமன், நதி - கங்கையாறு, மதி - திங்கள், கொஞ்சு - மழலைப் பேச்சு பேசுகின்ற.

௨௨. பண்டு - முற்காலம், பங்கயம் - தாமரை.

௨௩. மங்கை - உமை, வளர்பிறை - வளர்கின்ற திங்கள், மழு - எரி.

௨௪. இருகரம் - இரண்டு கைகள், குவித்து - கூப்பி, வியக்க - பாராட்ட.

௨௫. பரவுவார் - துதிப்பவர், துயரம் - துன்பம்.

௨௬. இலவு - இலவ மலர், இதழ் - வாயிதழ், ஏவலுக்கு - வேலைக்கு, அலமரல் - வருந்துதல்.

௨௭. மதிக்கீற்று - மூன்றாம்பிறை.

௨௮. முருகன் - இளைஞன், ஈந்த-திருவருள் செய்த (கொடுத்த).

௨௯. மூப்பு - கிழத்தன்மை, மோனம் - சும்மா விருத்தல்.

௩௰. அறவன் - அறக்கடவுள்.

௩௧. அனந்தல் - தூக்கம், இனம் - குலம்.

௩௨. கரி - யானை, உரி - தோல், போர்த்து - மூடி, ஏந்தி - தாங்கி, திரிபுரம் - முப்புரம், தகனம் செய்த - எரித்த.

௩௩. காலன் - இயமன், பாலன் - சீராளன்.

௩௪. மொழி - சொல், கௌரி - உமை, ஒளி - குளிர்ந்த வெளிச்சம், ஒருவன் - ஒப்பில்லாதவன்.

௩௫. கீண்டு - பிளந்து, வெற்பு - மலை, மாண்டு - இறந்து, உக - சிந்த, ஊன்றும் - அழுத்தின.

௩௬. குழை - காது, குமிழ் - குமிழம்பூ, கோதை-உமை, பிழை-குற்றம், மதன் - காமன்.

௩௭. கூவிளம் - வில்வம், அறுகு - அறுகம்புல், மேவிய-பொருந்தின.

௩௮. அங்கணு - அழகிய நெற்றிக்கண்ணனே.

௩௯. கேசவன் - விண்டு, கேழ் - செந்நிறம், கஞ்சம் - தாமரை, ஆசி - வாழ்த்து, ஆழி - சக்கரம்.

௪0. சிலை-வில், கரியமால் - கறுப்பு நிறமுள்ள திருமால், பகழி-அம்பு, உச்சிதம் - உயர்வு, புவி - பூமி.

௪௧. கொற்றவன் - அரிமர்த்தன பாண்டி வேந்தன், துகில் - துணி, கோல் - கைக்கோல்.

௪௨. கோணம்மலை - திருக்கோணமலை, கோது - குற்றம்.

௪௩. இமையோர் - தேவர்கள், (கண்ணிமையாதவர்).

௪௪. சாந்து - சந்தனம், தண்புனல் - தண்ணீர் (கங்கை), ஏந்து-தாங்குகின்ற.

௪௫. சிரம் - பிரமன் தலையோடு, சீரிய - உயர்ந்த, விரகு - அறிவு, மேருவில்லி - மேருமலையை வில்லாக உடையவன்(சிவன்).

௪௬. சீதளம் - குளிர்ந்த, கமலம் - தாமரை, வாவி - குளம், சாதனம் - ஓலை.

௪௭. சுத்தம் - தூய்மையான, சுடலையில் - சுடுகாட்டில், நடனம் ஆடும் - கூத்தாடின.

௪௮. வெள்ளி வெற்பு - கைலாயமலை, ஆரிய - மேலானவரே, தாணுவே - நிலையானவரே.

௪௯. தஞ்சம் - அடைக்கலம்.

௫0. சேதனம் - இயங்குதல், வாதவூர் அரசு - மாணிக்க வாசக சுவாமிகள், வரதன் - கேட்டவற்றை யளிப்பவன்.

௫௧. ஐம்புலங்கள்-சத்த, ஸ்பரிச், ரூப, ரச, கந்தங்கள்; கைவரம்-கைகூடுவரம், அருளவேண்டும் - கொடுக்கவேண்டும்.

௫௨. சொரி - சிந்துகின்ற, விரி - படர்கின்ற.

௫௩. சோலை - தோப்பு, ஆலவாய் - மதுரை, சமண் - அமணர்கள், மாய்க்க - கொல்ல, பாலருவாயினர் - திருஞானசம்பந்தர், பரிந்து - விரும்பி.

௫௫. தாது - தேன், அவிழ் - சிந்துகின்ற.

௫௬. தென்னவன் - அரிமர்த்தன பாண்டியன், பரி - குதிரை.

௫௭. தீது - குற்றம், உளம் - மனம்.

௫௮. துன்பு - வருத்தம், பணை - பருத்த.

௫௯. அசலம் - மலை.

௬௧. நாடி - ஆராய்ந்து.

௬௨. தையல் - உமை.

௬௩. தொன்மை - பழமை, பாணி - கையுடையவன், வாங்கும் வளைத்த,

௬௪. ஆத்தன் - பெரியோன், அளியன் - அன்பன்.

௬௫. நஞ்சு - விடம், அருந்தி - உண்டு, நாண - வெட்கமடைய.

௬௬. ஆரணம் - மறை.

௬௭. கற்பனை - கட்டளை (அளவு).

௬௯. நுண் இடை - மென்மையான இடை. நுதல் - நெற்றி.

௭0. நுவல் - சொல்லுதல், மாபுரம் - திரிபுரம்.

௭௧. நெஞ்சகம் மலர் - மனோதாமரை, அஞ்சல் - பயப்படாதை.

எஉ. நேத்திரம் - கண், வேள் - மன்மதன்.

எங. நைந்து - இளகி, பைந்தொடி - பசுமையாகிய வளைய லணிந்த உமை. (அன்மொழித்தொகை)

எச. நொந்தவர் - வருந்தினவர், நொடி - காலவிரைவு, கந்தரம்- கழுத்து.

எரு. நோக்கம் - கண், துரியாதீதம் - இறந்த இடம்.

எசு. நௌவி - மான், நயம் - அன்பு.

எஎ. பணிவார் - வணங்குவோர், பதம் - திருவடி.

அய. பீடு - பெருமை, பெருவினை - தீவினை.

அக. புகல் -சொல்லுதல், எறி - அடித்த, தகவு - சால்பு.

அஉ. பொங்க - விளங்க, பொருவு இலா - ஒப்பில்லாத, அம்மை- காரைக்காலம்மையார், நேசம் - அன்பு, நிருத்தம் - கூத்து.

அங. அனையார் - ஒத்தவர்கள், நாணும் - வெட்கப் படுகின்ற, பெட்பு - ஆசை, வளை - வளையல், தூசு - துணி, பலி - ஐயம்.

அரு. பை - பை, அரா - பாம்பு, அணை - பீடம், பார் அளந் தோன் - திருமால், மெய் - உடம்பு, அளித்து - கொடுத்து, அருள் கூர்ந்திட்ட - மிக்க அருள் செய்த.

அசு. பொசியுறு - சிந்துகின்ற, தேம் - தேன், புகலியிற் பிள்ளை யார் - திருஞானசம்பந்தர், சசி - திங்கள், தந்தவா-கொடுத் தவனே.

அஎ. போதகம் - யானை, புன்மை - அற்பத் தொழில், நோதக - வருந்தும்படி.

அஅ. பௌவம் - கடல், சிலை - கல், ஆழும்படி - அழுந்தும் வண் ணம், எவ்வம் - துன்பம், அகற்றி - நீக்கி.

அகூ. மறு - குற்றம், செறி நிசி - மிக்க இருள், பரவை - பரவை நாய்ச்சியார்.

கும். வன்னி - கொடிபோலும் உமை, ஓர் பாகம் - ஒருபக்கம். ஆன் - எருது.

கக. மிடறு - கழுத்து, காளகூடவிடம்-ஆலாலம், நடம்-கூத்து.

கஉ. மீன் - மச்சாவதாரம், விழி - கண், இடந்து - பேர்த்து. நல்கும் - கொடுத்த.

கச. மூர்க்கன் - கொடியன், வேள்வி - யாகம்.

கரு. மெலிவு - அயர்ச்சி, சாத்தும் - தரித்துக்கொண்ட.

கசா. மேய - பொருந்தின, பேர் உணர்வு - பேரறிவு, சிற் சொரூபம் - ஞானவடிவம்.

கஎ. மை - கறுப்பு, கூடல் - மதுரை.

கஅ. ஒழிவு இன்றி - எக்காலமும், சூடிக்கொள்ளும் - தரித்துக் கொள்கின்ற.

கக. முகில் வண்ணன் - மேகநிறத்தன் (திருமால்), சோகம் மயக்கம்.

உ. மௌவல் - முல்லை, குழலார் - கூந்தலையுடைய பெண்கள், செவ்வையாம் - உயர்ந்த, சித்திக்கும் - கைகூடும்.



சிவகாமிவிலாச அச்சுக்கூடம், சென்னை.